உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

**சிவாய நம:**

# ॥ हरिहरतारतम्यम् ॥

॥ ஹரிஹரதாரதம்ய ॥

# ஹரிஹரதாரதம்மியம்

இ∴து
ஸ்ரீமாந் - சிவஞானசுவாமிகளது பாதசேகரராகிய
**தத்புருஷசிவன் என்று தீக்ஷாநாமம் பெற்ற**
முத்தமிழ்ரத்நாகரம்

## ம - தி - பாநுகவியவர்களால்

### ஹரதத்தாசாரியசுவாமிகளருளிச்செய்த

**மூலசுலோகங்களுடன்**

வேதாகமாதி பிரமாணங்களையும் சேர்த்து

தமிழில் இயற்றப்பட்டு,

**தா - குப்புசாமிநாயகரவர்களது**

சென்னை:

**ஸ்டார் ஆப் இந்தியா அச்சுயந்திரசாலையில்**
பதிப்பிக்கப்பட்டது.

1899

உ

# சிறப்புப்பாயிரம்.

இந்நூலாசிரியர் மாணவர்

## ம. கோவிந்தசாமிமுதலியாரவர் களியற்றிய

**அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.**

*சேடன் புகன்று நாப்பிளந்தான் றிங்கள் புகன்று கஉலகுறைந்தான்*
*நாடி யயனு மலரோனு நண்ணிக் கிடந்தா னெனப்பெரியோர்*
*கூடி யுரைக்க நின்றவரி யரர்கள் தகமை குவலயத்தி*
*லீடில் பாநுகவி யென்னு மெங்கள் குரவ னிசைத்தானே.*

உ

# முகவுரை.

சிவபத்த சிரோன் மணிகளான மேலோருட் சாதகர்களுக்கு அன்ய தேவதா பரத்வபராந்தியை யொழிப்பதும், ஸாத்யர்களுக்கு மனமகிழ்ச்சியைத் தருவதுமான **ஹரிஹரதாரதம்மியம்** என்னும் அரியநூல் நாராயணமூர்த்தியின் அவதாரரான ஸ்ரீஸுதாரஞசாரியசுவாமிகளென்னும் **ஹரதத்தாசாரிய** சுவாமிகளால் ஆரியபாஷையில் பண்டேதானே அமைக்கப்பட்டுளது. இதஜனத் தமிழில் மொழிபெயர்ப்புடன் அச்சிட்டு வெளியிடுவதாகப் பலர் பிரசுரஞ் செய்திருந்தனர். பிரசுரமாத்திரமேயனறி நூஜல வெளியிட்டாரில்ஜல.

சொன்னசொல் தவருதவரும், ஸ்டார் ஆப் இந்தியா என்னும் அச்சுயந்திர சாஜலக்கும், பிரபஞ்சமித்திரனுக்கும் தஜலவரும் ஆகிய ஸ்ரீ, **தா-குப்புசாமிநாயகர்** அவர்கள் என்ஜன இந்நூஜலத் தமிழிலாக்குமாறு தூண்டினமையால், நான் இது நமது சைவநண்பர்களுக்குறசாகத்தையும், நமக்குப் பதி புண்ணியத்தையும், நாயகர் அவர்கட்கு கீர்த்தியையும் விஜளப்பது என்று துணிந்து **சிவபராக்கிரம** மெழுதி முடித் ததற்குப் பின்பு இந் நூஜல எழுதி முடித்தேன்.

இது ஒரு அரிய பெரிய நூலாதலால், வேண்டிய இடங்களில் பிரமாணங்களு டனும், பதம்-பொழிப்பு-விதப்பு-தாத்பரியம்-தாரதம்மியம்-மொழிபெயாப்பு என்னும் பகுப்புகளுடனும் இயற்றியிருக்கின்றேன்; இந் நூலாசிரியரது சரிதமுணர்ந்தாலன்றி, இந்நூலின் மகிமை நன்கு விளங்காதென்று கருதி நாராயணரான கிரந்தகர்த்தாவின் அவதார சரிதத்தையும், சிவரகஸயத்திலிருந்து எடுத்து இதிலெழுதியிருக்கின்றேன்.

சரிதம் தெளிவாய் விளங்கும் வண்ணம எட்டுப்படங்கஜளயும் அமைப்பித்து இந்நூஜல அச்சிடுவித்திருக்கின்றேன். இந்நூல் வேண்டியவர்கள் மேற்குறித்த நாயகர வர்கட்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

இங்ஙனம்,
**தத்புருஷசிவன்**
என்று தீக்ஷாநாமம்பெற்ற
**ம - தி - பாநுகவி**

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# ஸ்ரீஹரதத்தாசாரியசுவாமிகள்

## சரித்திரம்

**இவரது சரிதத்தைச் சிவரகசியமானது இவ்வண்ணமுரைக்கின்றது.**

"முன்னேர்கால் பிருகுமுனிவர் விஷ்ணுவைச் சபித்தமையால், அவர் மனம் நொந்து பூமியிலே அநேக அவதாரஞ் செய்தாரென்று உபமன்னியமுனிவன் சொல்லத் தொடங்கும்போது, முனிவர்கள் அரி பிருகுசாபம் அடைந்தபின்னர், மந்தர மலையை அடைந்தாரென்று கேள்வியுற்றேம்; அதனையும எங்களுக்குக் கூறியருளல் வேண்டும் என்று கேட்ப, உபமன்னியு இவ்வாறு கூறுகின்றுர். பிருகு முனிவர் சபித்தபோது திருமால் நடுநடுங்கி உருத்திரரும், மகேசுவரரும், கணங்கள் புடைசூழ ப்பெற்றவரும், புகல் அடைந்தோரைக் காப்பவருமாகிய அம்பிகாசமேதவரனைத் தமது இருதயகமலத்திலே சிந்தித்தது, கருடன் மீதிவர்ந்து தேவர்கள வாசஞ்செய்வதாயும் மனேகரமான குகைகளையுடையதும், கின்னரர்கள் உறையும் வனங்களை யுடைய தும், ஒலிக்கின்ற பற்பல அருவிகளையுடையதும், பற்பல கணங்களுக்கு உறையுளா கிய உத்தியானங்களை யுடையதும், சப்திக்கின்ற பற்பல பறவைகளையுடையதும், பலவகை விருக்ஷம் கொடி செடி என்பவற்றை அளாவிய பரிமள வாயுவையுடைய தும், மனதிற்கு இனிமையும் இன்பமும் விளைபபனவாகிய பாரிசாதங்களையுடைய தும், பற்பல அரதனக்குவியல்களையுடையதும், சுவர்ணப்பிரகாச தோரணங்களையு டையதும், ஸ்ரீகைலாசம்போல் இலங்கும அநேகாயிர பிராசாதங்களையுடையதுமா கிய மந்தரமலையை அடைந்து, அங்கே சுவர்ணக் குகையொன்றிலே சடையுடையரா யும், முண்டிதராயும, மேகலையுடையராயும், பஸ்ம நிஷ்டராயும் அமர்ந்து, அக்கினி யை ஓம்பி, தினந்தோறும் திரிகாலங்களிலும் ஸ்நானஞ் செய்து, கிருச்சிரசாநதிரா யண விரதாதிகளை அநுஷ்டித்துத் தேகத்தைவாட்டியும், ஆயிரம் தேவவருஷம் வாயுபக்ஷணஞ் செய்துந் தவம் இயற்றுவாராயினர்.

இவ்வாறு இருக்குங்கால், சிவபிரானுரது வாயிற்காவலாளரும், கபிமுகத்துக் குச் சமானமாகிய பிரகாசத்தையுடையரும், அயோநிசரும், தபசிலே சித்தியுடைய ரும், சாலங்காயனகோத்திரருமாகிய நந்தியெம்பெருமான் கொடுந்தபசு செய்பவரா கிய விஷ்ணுவைப்பார்த்து வந்து, சிவபிரானுரை நமஸ்கரித்து, சுவாமீ உமது ஸ்தானத்திலே விஷ்ணுவானவர் “நான் என்செய்வேன்! என்று மனசிலே மெலிவு கொண்டு எப்பொழுதும் கவற்சியோடு அநேக கோடி வருஷங்களாக உக்கிரமாகிய தபசு செய்து கொண்டிருக்கின்றுர்" என்று விஞ்ஞாபனஞ் செய்தார். இதனைச் சிவபெரு மான் கேட்டு முகமலர்ச்சிகொண்டு உமாசமேதராய், இடபாரூடராய், பிரமதகண ங்கள் புடைசூழப் பெற்றேராய், பிரமாதி தேவர்கள் துதிப்ப, தேவர்களெல்லாம் வணங்க, விஷ்ணு தபசு செய்யும் ஸ்தானத்துக்கு எழுந்தருளி, அவ்விஷ்ணுவை நோக்கி, “குழந்தையே! உனது தபசுகண்டு பிரீதிகொண்டு உனக்கு வரங்கொடுக்கு

மாறு வந்தேம், எமது பக்தருக்குத் துரோகஞ் செய்தவை சந்தேகமில்லாது எமக்குச் செய்தது போலாயிற்று. இப்போது நீ செய்த தபசினுலே எமக்குச் செய்த துரோகம் நீங்கிப்போயிற்று. எமது அன்பராகிய பிருகுவுக்குக் செய்த துரோகம் இருந்தபடியே இருப்பதாயிற்று. நீ தபஞ்செய்து அத்துரோகத்தை நீக்குதற்குரிய ஸ்தலத்தை இப்போது சொல்கின்ருேம் கேள் பூலோகத்திலே காவேரிக்கு வடகரையிலே கஞ்சாபுரம் எனப் பெயரிய பரமபாவனமாகிய க்ஷேத்திரம் ஒன்றுளது. நீ அங்கேயுள்ள கஞ்சாபுரீசுவரரை உத்தேசித்து நெடுங்காலந் தபசு செய்வாயேல், உன் சாபம் நீங்கி விடும் என்று திருவாய் மலர்ந்தருளி அந்தாததானமாயினர்.

விஷ்ணுவானவர் உடனே சிவபிராஜன வணங்கிக்கொண்டு கஞ்சாபுரத்தை மகிழ்விஞேடு அடைந்து அப்பிருகுமுனிவரிட்ட சாபம் நிவாரணமாகும் பொருட்டு, திரிகாலமும் கஞ்சாபுரீசுவரரைப் பூசை செய்து, பஞ்சயஞுஞங்கஊயுஞ் செய்து கொண்டிருந்தார். (அதுவன்றி) திரிகாலமும் ஸ்நானஞ்செய்து வறகஉலயை உடுத்த வராயும், சடாதரராயும், விபூதியை உத்தூளனமாகவும் திரிபுண்டரமாகவுந் தரித்த வராயும், ருத்திராக்ஷமாஉல அணிந்தவராயும், பஞ்சாக்ஷர செபஞ் செய்பவராயும், கந்தமூலபலங்கஊயும், ஜீர்ணபர்ணத்தையும், சாகைகஊயும், சலத்தையும், வாயு முதலியவற்றையும பக்ஷணஞ் செய்பவராயும் , ஜிதேந்திரியராயும், போசனஞ் செய்யாதவராயும், சூரியஊனப்பார்த்த பார்வையுடையராய்க் கிரீஷ்மகாலத்திலே பஞ்சாக்கினிமத்தியிலே நிற்பவராயும், மழைக்காலத்திலே வெளியிலே நிற்பவரா யும், ஏமந்தகாலத்திலே காவேரிநதியிலே கழுத்தளவினதாகிய சலத்திலே நிற்பவரா யுங்கொண்டு, கைகள் இரண்டையும் நிராலம்பமாக உயர்த்தி, உச்சுவாசமினறிக் கஞ்சாபுரீசுவரருடைய திருவருஊப் பெறுமாறு மகா தபசு செய்வாராயினர். இவ்வாறு இவர் உக்கிரதபசு செய்யுங்கால் நெடுங்காலஞ் சென்று போய்விட்டது. அவருடைய பிரமரந்திரத்தினின்றும் உண்டாகிய அக்கினியானது மூன்று லோகத் தையுந் தகிக்கத் தொடங்கிவிட்டது. தொடங்கவே, மூவுலகத்துமுள்ள தேவர் அசுரர் மனிதராயிஞேரெல்லாம் அவ்வாகினிச் சுவாஉலயினுலே வருந்திக் கவஉலயுற்ருர். அப்போது தேவர்களெல்லாம் ஒருங்குகூடி பிரமஊன அடைந்து பூசித்துத் துதித்து வணங்கித் தங்கள் விருத்தாந்தத்தை விண்ணப்பித்தார்கள். அப்போது பிரமன் தேவர்கஊ அழைத்துக்கொண்டு ஸ்ரீகைலாசத்தை அடைந்து, சிவபிராஊனப் பன்மு றையும் நமஸ்சரித்து, விஷ்ணுவுடைய தபாக்கினிச சுவாஉலயினுலே உலகம் அஊனத்தும் வருந்துகின்றது. "சுவாமீ! எங்கஊ ரக்ஷிக்க" என்று வேண்டினுன். அதஊனக் கேட்டுக்கொண்டு அக்கினி துல்லியராகிய சிவபிரான் இடபாரூடராய்ப பிரமாதி தேவர்கள் சூழந்து செல்ல விஷ்ணு தவஞ்செய்யுந் தானத்தை அடைந்து "விஷ்ணுவே! எழுந்திரு, உன்தபசினுலே பிரீதிகொண்டேம், உனக்கு வேண்டிய வரத்தைக் கேள்" என்று கம்பீரமாகிய திருவாக்கினுலே உரைத்தருளினர். அது கேட்டு விஷ்ணு எழுந்து நின்று, சிவபிராஜன நமஸ்கரித்து, சிரேஷ்டப் பிரமாணமா யுள்ள சுருதிகஊ மூலமாயுடைய வாக்கியங்களினுலே ஸ்தோத்திரஞ் செய்து, உரோமாஞ்சங் கொண்டு, ஆனந்தக் கணணீர் வார, வாக்குத் தழுதழுப்ப, பூமியிலே விழுந்து, சுவாமி! யான் இந்ரனுடைய சொல்லுக்கிசைந்து பிருகுமுனிவருடைய பத்தினியாரை வதைத்து விட்டேன். அப்பததினியார் வதை செய்யப்பட்டமையை உணர்ந்த பிருகுமுனிவ ரானவர் கோபங்கொண்டு மற்ச, வராக, கூர்ம முதலிய

அநேக கீழ் யோனிகளிலே நான் போய்ப பிறக்குமாறும், அநேக சென்மங்களிலே ஸ்திரீவியோகம் எய்து மாறும் என்ஊனச் சபித்துவிட்டார். சுவாமீ! அந்தப்பிருகு முனிவரிட்ட சாபத்திஞலே மிகவும் கஷ்டம் அடைந்துவிட்டேன். இதுவன்றி, பிரபுவே! என்ஊன உபாசிக்கும் ஏகதண்டியுந் திரிதண்டியுமாம் இரு சந்நியாசிகஊளத் தரிசித்தவர்களும் பாஷண்டிக்ளாய்ப் போமாறு சபித்து விட்டார். அந்தச் சந்நியாசி களுக்குச் சயனம் ஆசனம் வஸ்திரமுதலிய உதவி ஆதரிக்கின்றவர்கஊயும் மகாரௌாவாதி நரங்களிலே போமாறு சபித்தார். பஞ்சபூதங்கள் அழியுங்கால வரையும் நான் பத்து வகைப்படும் கொடிய நரகவேதஊன அடையுமாறு கோபா வேசத்தோடு அதட்டிச சபித்துவிட்டார் ஆதலால் யான் வேறுகதி ஒன்றும் காணேன். உமது பாதார விந்தங்கஊயே சரணென்று அடைந்தேன். இன்று என்ஊன இந்தத் துன்பாகரத்தினின்று கரையேற்றி யருளல் வேண்டும் என்று விஞ்ஞாபிக்கும் போது, சிவபிரான் அவரை அணைந்த்து மீட்டும் மீட்டும் உச்சிமோந்து அஞ்சறக! அஞ்சறக!! எனது பக்தனுடைய சாபத்தைக் கடத்தல் யாவர்க்கும் அரிது, எம்மாலும் மாற்றுதல் அரிது, அங்ஙனமாயினும்; எமது அருளிஞல் உனக்கு அநேக சென்மம் எய்தாதொ ழிக. மற்சம், கூர்மம், வராகம், நரசிங்கம், தன்வந்திரி, மோகினி, நாரதர், பிருது, சனற்குமாரர், விராட்டு என்னும் இப்பத்து அவதாரமும உனக்கு ஆவிாப்பாவமாகுக. பார்க்கவா, ராமா, பரசுராமர், கிருஷணர், வியாசர், பலபத்திரர், கபிலர், நரநாராயணர், யஞ்ஞர், வாமனர், தத்தாத்திரேயர், விருஷபர், புத்தர், கற்கி, சுதாசனர் என்னும் இப்பதிஊந்து அவதாரமும உனக்கு யோனிசமாகுக. அம்முனிவரிட்ட சாபம் உனக்குத் தடையின்றி நிகழும் என்று கூறிப் பின்னரும் சொல்லுகிறுர். எமது ஆச்சிரமத்துள்ள சாதுக்கஊ வெறுப்பவர்கள் கீழோராவர். எமது பத்தர்கஊப் பாதுகா ப்பவர்கள் உனக்கும் நிஷ்களங்கமாக அன்பர்களாவார்கள். அப்படிப்பட்டவர்களுடனே பேசுந்தோஷமும் மனிதருக்குக் கொடிய பாபத்தை விஊப்பதாகும். சிவாகமங்க ஊயுணர்ந்த பிரமசாரி, கிருகஸ்தன், வானப்பிரஸ்தன், சந்நியாசி எனனும் நான்கு ஆச்சிரமத்தாரையும், பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரர் என்னும் நான்கு வருணத் தாரையும் துவேஷிக்கின்றவர்கள் நிச்சயமாகவே பாஷண்டராவார்கள். அப்படிப் பட்டவர்கள் பொருட்டுக் கொடுக்கும் கொடையும், செய்யும் ஓமமும், செபமும், தியானமும், ஸ்நானமும், பூசையுமாகிய வெல்லாம சாம்பலிலே இட்ட ஆகுதி போலே நிஷ்பலமாயப்போம் எமது ஆச்சிரமத்துள்ளவர்கஊ நிந்திப்பவர் எம்மையே நிந்திப்பவராகின்றுர். நம்முடைய ஆச்சிரமத்துள்ளவர்கஊத் தோத்திரஞ் செய்பவர் நம்மையே தோத்திரஞ் செய்பவராவார்கள் என்றுர்.

இவற்றைக் கேட்ட திருமால், சுவாமீ! நால்வகை ஆச்சிரமங்களிலும் உமது பக்தர்கள் உளா என்று திருவாய் மலர்ந்தருளினீரன்றே, அவர்கள் இலக்ஷணம் என்ஊன? பெருமை என்ஊன அவை இவை என்று எனது பக்தர்கள் அறிந்து கோடற் பொருட்டு எனது பரமநாதரும், பரமாசாரியருமாகிய நீவிரே சொல்லியருளல் வேண்டுமென்று வேண்டிஞர். அப்போது சிவபிரான் நான்கு ஆச்சிரமத்துக்குந் தனித் தனி இலக்ஷணம் வெவ்வேறும். இந்நானகு ஆச்சிரமத்துக்கும் தனித்தனி பிரவாத் தகாகள ததீசி, கௌதமர், அகஸ்தியர், துருவாசர் என்னும் நானகு இருடிகளேயாவர். பிரம்சரியத்தை நிறுத்திஞர் ததீசி முனிவர். கிருகஸ்தாச சிரமத்தை நிறுத்திஞர் கௌதமமுனிவர். வானப்பிரஸ்தாச்சிரமத்தை நிறுத்திஞர் அகஸ்திய முனிவர்.

சந்நியாச ஆச்சிரமத்தை நிறுத்தினர் துர்வாசமுனிவர். மலமாயை கன்மம் என்னும் முப்பாசத்தை நீக்குவதும், சிவசம்பந்தமுள்ளதும், மேலானதுமாகிய தீக்ஷையைத் தவிர மனிதர்களுக்கு எந்த ஆச்சிரமத்திலிருந்தாலும் உத்கிருஷ்டம் எய்துவதில்லை. எந்த ஆச்சிரமத்திலிருந்தாலும் சிவதீக்ஷையினலே தான் பாசவிமோசனம் எய்துவ தாகும். எவ்வெவருந் தாந்தாம் விரும்பியபடி அந்தந்த ஆச்சிரமத்தைப் பூர்வோத் தரமாக அநுஷ்டிக்கலாம். அங்ஙனம் அநுஷ்டிக்குமிடத்து தீக்ஷையினற்றன் மோக்ஷம் எய்தும். ஆச்சிரமங்களினலும் மற்றைக் கருமங்களினலும் மோக்ஷம் இன்றம். திரிகாலமும ஸ்நானஞ்செய்து, பிக்ஷாகாரஞ் செய்து, கௌபீனநதரித்து, கிருஷ்ணசினந் தண்டம் என்பவற்றைத் தாங்கி, சிவாக்கினி பூசை செய்து, வேதாத தியயனம்பண்ணி, குடுமியோடு இருப்பவன பிரமசாரி எனப்படுவான். பருவகாலத் திலே மனைவியைப் புலந்து, ஒழிந்த காலங்களில கலந்து, தெய்வம், விருந்து, யாசகர் என்போரை உபசரித்து எவர்க்கும் கருணை பாலிப்பவன் கிரகஸ்தன் எனப்படு வான். சடாதாரியாய் வனவாசஞ்செய்து, பாரியோடு கூடி அத்தியயனஞ் செய்து, பலமூல ஆகாரம் பண்ணி திரிகாலமும ஸ்நானஞ்செய்து வறகலை உடுத்து உறை பவன் வானப்பிரஸ்தன் எனப்படுவான். திரிகாலமும் ஸ்நானஞ்செயது கௌபீன தாரியாய் , நிஷ்கள சிவத்தியானஞ்செய்து, தண்டம் பஸ்மம் சடை என்பவைகளை யுடையனய், அக்கினியையும் பாரியையும் விடுத்து, பிக்ஷாகாரஞ் செய்து, கோத்திரம் சந்தானம் என்பவற்றை விடுத்து, அவ்வாறே சர்வகர்மங்களையும் விடுத்து, அபோச்சிய அன்னம் தவிர்த்து, சிவயோகஞ்செய்து, தேகாவசானத்திலே சிவசாயுச்சியம் அடைபவன் சந்நியாசியாவான். நான்கு ஆரசிரமத்துள்ளாரும் சர்வாநுக்கிரகிகளாயே யிருப்பார்கள் ஓ கேசவ! அதிகஞ் சொல்லியாவதென் சமுசாரசாகரத்தைக் கடத்தற்கு வாயந்த ஓர்புணையைச் சொல்கின்றேன் கேள். பைத்தியத்திலேனும் , மோகத்திலேனும், நித்திரையிலேனும் எத்துஷ்டனயினும், "சிவ" என்னும் இரண்டெழுத்தைச் சிந்தை செய்வானயின், அவனை எம்மைப் போலக் குருவாக அறிகுதி, அதனல் நாம் அதிக மகிழ்வை அடைவேம்; இதினும் மேலாயது என்! பைத்தியத்தினலேனும் ஒருவன் பிரணவத்தோடிசைந்த ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை ஒருமுறை உச்சரிப்பானயின், அவன் எந்நிலையிலிருந்தாலும் எக்காலமும் பூசிக்கற் பாலனே யாவான். ருத்திர, சம்பு, மகாதேவ, சர்வஞ்ஞ, சங்கர, ஸ்ரீவாமதேவ, ஸ்ரீகண்ட, ஸ்ரீநீலகண்ட என்னும் நாமங்களைச் சொல்லி நம்மைத் தியானிக்கின்றவனை எமது ஆஞ்ஞையினல் யான் என்று மதிக்குதி. பிருகு என்பார் எமது பக்தருள்ளே சிரேஷ்டர். அவரிட்ட சாபத்தைக் கடத்தல் யாவர்க்கும் அரிதாகும். ஆதலினல் உனக்கு அந்த இருபத்தைந்து அவதாரமும எய்தும். இந்த அவதாரம் லோகோபகார மாயிருக்கும். கவுதமர், ததீசி, கண்ணுவர், சியவனர், பிரமா, நந்தி என்னும ஷண் முனிவர்களும ஒவ்வோர் ஏதுவினல் துரோகஞ் செய்த பிராமணர்களை வைதிக நெறி பிறழ்ந்தவர்களாயும், சிவநிந்தாபராயணர்களாயும், நெற்றியிலே யோனி முத்தி ரையுடையவர்களாயும போமாறு சபிததார்கள. கமலக்கண்ண! இப்படிச் சபிக்கப்பட்ட பிராமணருள்ளே காசியப கோத்திரத்திலே ஏககாலமும் வேதநிந்தை செய்பவரும், விபூதி ருத்திராக்ஷங்களை நிந்திப்பவரும், நம்மை நிந்திப்பவரும், வைதிகர்களையும் நமது பக்தர்களையும் நிந்தை செய்பவரும், எப்போதுந் தப்தமுத்திரையுடையரும், பாஞ்ராத்திரபராயணருமாகிய வாசுதேவர் என்னும் பெயரோடு இக்கலி யுகத்திலே ஒருவர் பிறப்பார். இவர் பாஞ்சராத்திரிகளெல்லோர்க்கும் தேசிகராவர். அவர்

உன்ஐனப் புதலவனுகப் பெறும் பொருட்டு நெடுங்காலம் தவஞ்செய்யப் போகின்ருர் அப்போது நமது ஆஞ்ஞையின்படியே நீ அவருக்குப் புதல்வனுய்ப பிறக்குதி. மூன்று வயசு தொடுத்தது நீ எம்மைச் சிறுபிள்ஐள விஐளயாட்டாய்ப் பூசித்துக் கொண்டுவருங்கால், ஐந்தாம் வயசிலே உனக்கு நாம் சமஸ்தவித்தைகஐளயும் மனேரதபோகங்கஐளயுந்தந்து, இறுதியிலே எமது சாயுச்சியபதவியையும் அருளுவேம். இருபத்தைந்து அவதாரங்களுள்ளே ஐந்து அவதாரங்களில் உனது கருவத்தை நாசஞ்செய்து, மற்றைய இருபது அவதாரங்களினும் நீ நம்மைப் பூசிப்ப, நாம் உனக்கு விரும்பியது கொடுப்பேம்; அதனுல் நீ திருப்தி பூணக்கடவை; உன்னுடைய அவதாரங்கஐளச் சனங்களெல்லாம் வழிபடுவார்கள். அப்படி வழிபடுவோர் உனது பதத்தை அடைவார். இன்னும் ஒரு ரகசியம சொல்கின்றேம் கேள். அஃதாவது உனது சென்மம் ஒன்றிலே நீ உனபாரியைப் பிரியப்பெறுவாய் என்ரு. நம்மை லிங்கரூபமாகவைத்துப் பூசித்தும், துதித்தும், புகழ்ந்தும், நமஸ்கரித்தும் வருபவர்களுக்குப் போக மோக்ஷங்கஐள சந்தேகமின்றி யருளவேம். இந்தக் கஞ்சாபுரத்திலே மூன்று தினம் வாசஞ்செய்து, சிவபகதர் களாகிய பிராமணர்கஐளப் பூசை தாபப்ணங்களால வழிபட்டு, மகாமந்திர ரகசியமாகிய ஸ்ரீபஞ்சாட்சரத்தை செபிக்கின்றவர்கள் கோடி சென்மங்களிலே செய்த பாபங்களும் நாசமாக தேகாந்தத்திலே சாயுச்சியத்தை அடைகின்ருர்கள் என்று திருவாய்மலர்நதருளினர். விஷ்ணு இவற்றைக் கேட்டு, தேவ தேவரே! மகாதேவரே! சந்திராதத சேகரரே! உமது திருவடியை அடைந்தேன். கஞ்சாபுரத்திலே நான் உம்மைப் பூசைசெய்துகொண்டிருக்குங்கால், எனது மனேபீஷ்ட மெல்லாம் முற்று மாறு வசந்தந்தருளல் வேண்டுமென்று வேண்ட, அதற்குச் சிவபெருமான் அங்ஙனமாகுக என்று திருவாய் மலர்ந்தருளி அந்தர்த்தானமாயினர். ஸ்ரீநாயகராகிய விஷ்ணுவும் தமது தானத்தை அடைந்தார்.

இந்தப் புண்ணிய க்ஷேத்திரமாகிய கஞ்சாபுரத்திலே எழுந்தருளி யிருக்கின்ற அக்கினீசுவரப் பெருமான் மீது அன்புடமையராய் வைதிக சைவப்பிராமணர்கள் அவர் கருஐணக்குப் பாத்திரராயினர். இவர்கஐள நிஐனக்கும் நிஐனவே மகாபாதகங்கஐளயும் நாசஞ்செய்யும் இவர்கள் சாபாலோபநிஷதங்கஐள உச்சாரணஞ் செய்து, வைதிக சைவ விபூதி கொண்டு திரிகாலமும் உத்தூளன திரிபுண்டரஞ் செய்பவர்கள், திரிகாலங்களினும் பக்தியோடு சிவார்ச்சஐன செய்பவர்கள், சிவ விரதங்கஐளயும் நக்த விரதங்கஐளயும் அநுஷ்டிப்பவர்கள், வேதாத்திய்யனஞ் செய்பவர்கள், சிரெளதாக்கினி வளர்ப்பவர்கள், ஒவ்வோர் கிரகத்திலும் புரோடாச அவ்ய சமபந்தமாகிய தூமத்தினுலே தூய்மை வாயந்தவர்கள்; ருத்திராக்ஷதாரணுகளாயும், ஸ்ரீ பஞ்சாக்ஷரசெபஞ் செய்பவாகளாயும், சிவபூசாபராயணர்களாயும், சிவபுராணுத்தங்கஐள ஆராய்பவராயும், சிவநாமத்தையே உச்சரிப்பவாகளாயும், சிவபக்தர்கண்மீது எக்காலமும் அன்புடையராயும், சிவதரிசனம் - சிவநமஸ்காரம் - சிவபூசை முதலியவைகளிலே ஓர்காலும் வழுவாதவராயும், சிவபூசாவிஷயம் பற்றிச் சிவாகமங்கஐள நன்ருக ஆராயந்தறிந்தவர்களாயும், பிரதக்ஷிண நமஸ்காரங்கஐளயும் மற்றைய திருத்தொண்டுகஐளயும் எக்காலமும் செய்பவர்களாயுமுள்ளார்கள் அவர்கள் மஐனவியரும் அவர்கஐளப்போற்றிருத்தொண்டுசெய்பவர்கள், தமது நாயகர்களுக்குத் தொண்டு செய்தும், சிவபூசை செய்தும், பஞ்சாக்ஷரசெபஞ் செய்தும், சிவகைங்கரியங்கள் செய்தும் வருவார். இவர்கள் அருந்ததியினும சிறந்த கற்பிஐன யுடையார். அங்கே

எக்காலமும் வேதசிரசுகளை நன்கு உணர்ந்து, சிவபூசாபராயணராய், பஸ்மருத்தி ராக்ஷ தாரிகளாயுள்ள பரமஹமசஸந்நியாஸிகள் அக்கினீசுவரப்பெருமானைத் தலையனபினாலே எக்காலமும் சேவிக்குமாறு வாசன்ஹ்செய்கினறார்கள்.

பின்னர் அந்தககஞ்சாபுரத்திலே விஷ்ணுவானவர் கற்பங்கடோறும் தமது சாபநிவாரணத்தின் பொருட்டு அக்கினீசுவரப் பெருமானைப் பூசித்துக்கொண்டு வந்தார். இந்தத் தல விசேஷத்தை நோக்கியே அயன் அரி இந்திரன் அக்கினி என்போர் தத்தம் நாமங்களிலே தனித்தனியே அங்கே தீர்த்தங்கள் அமைத்துச் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்தார்கள். இப்பொழுதும தேவர்கள மகாதேவருக்குத் தொண்டு செய்து கொண்டு வருகின்றார்கள்.

கௌதம முனிவராலும் நந்திகேசுரராலும் சபிக்கப்பட்ட வைஷ்ணவப் பிராமணாகளிற் சிலர் கஞ்சாபுரத்து விஷ்ணுவாலயததுக்குச் சமீபத்திலே வாசஞ் செய்கின்றார்கள் அவர்கள் வெள்ளை மண பூசுபவர்கள், வெள்ளை வஸ்திரம் உடுப்ப வர், யஞ்ஞோபவீத தாரணர்கள், தப்தமுத்திரை தரிப்பவர்கள், வேதசார விமுகர்கள், பாஞ்சராத்திர பராயணர்கள், சிவநிந்தை எக்காலமுஞ் செய்பவர்கள். வைதிகப பிராமணரைத் தூஷிப்பவர்கள், விபூதி ருத்திராக்ஷந் தரித்தவர்களைக் குரூரதிருஷ்டி கொண்டு பார்ப்பவர்கள், இவர்களுள்ளே வாசுதேவர் என்பவர் ஒருவர் இருந்தார். இந்தப் பிராமணர் ஒர் புத்திரனை வாஞ்சித்து விஷ்ணுவை நோக்கி மெய்யன்போடு உபாசித்தார். சுப்பிரதீகா என்பவர் ஒருவர் ஓர புத்திரியை வாஞ்சித்துத் தவஞ் செய்தார். அப்போது விஷ்ணுவானவர் அவ்விருவர்மீதும் பிரீதிகொண்டு இலக்குமி யை யழைத்து, பிராணநாயகியே நீ பூமியின்கண்ணே சென்று சுப்பிரதகருக்குப் புத்திரியாகப் பிறக்குதியாக, நான் வாசுதேவருக்குப் புதல்வனாகச செனிப்பேன் என்று இந்தப் பிரகாரஞ் சொல்லிவிட்டு, பாஷணடமதமாகிய வைஷ்ணவத்தை அநுசரித்திருக்கும் இந்த வைஷ்ணவர்களைச் சாப்பசயனரும உலகரக்ஷகருமாகிய தாம் அருள் நோக்கஞ்செய்து, வைதிகநெறிக்கணணே நிறுத்த நினைந்து, கமசாகரப் பெருமானிடத்திலே அருள் பெற்றுக்கொண்ட சிருங்கி வாசுதேவருடைய மனைவி வயிற்றிலே உற்பத்தியாயினார். ஐந்து கிரகங்கள் தத்தம் வீடுகளிலே உச்சத்தான த்தை அடைந்தபோது, உமாதேவியார் கந்தசுவாமியைப் பெற்றாற்போல, சிவபிரானார் திருவடித்தாமரையை மறவாத அப்புதல்வனை அவள் பெற்றாள். அப்போது புஷ்ப மழை பொழிந்தது. துந்துபிகள் ஒலித்தன. தேவரம்பையர் நடித்தனர். சிவபத்தர்க ளுக்கு வலத்தோளும் வலக்காலும் வலக்கணணும் துடித்தன. வைஷ்ணவர்களுக்கு இடப்புயங்களும இடக்கால்களும் இடக்கண்களும் துடித்தன இனிமையோடு தென்றல் வீசிற்று. அக்கினி களங்கமினறிச் சொலித்தது திக்குகளெல்லாஞ் சந்தோஷம் மலிந்தது. இங்ஙனம் புதல்வனுடைய சனனத்தைக்கேட்ட பிதாவானவர் மனமகிழ்ந்து சுருதிசாஸ்திரமறிந்தவர்களையும் வேதபாசகாரளையும் அழைத்து அவர்களுக்குக் கோ தானம் பூதானம் இரண்ணியதானம் என்பவைகளைச் செந்தார். பின்னர் ஜாதநாமஞ் செய்தார். பதினோராம் நாள் ஸ்நானஞ்செய்து பிள்ளைக்கு வாய்ப்பாக சுதாசனா என்னும் நாமாரணஞ் செயதார்/ பாலரும் வளர்பிறைச்சந்திரன் போல மெல்ல வளர்வாராயினர். தமது இரண்டு கைகளினாலும் தம்மிரண்டு பாதாங் குஷ்டங்களையும் வாயிலே வைத்துச் சுவை பார்ப்பார். பின்னாத தொட்டிலின்

கண்ணே ஆடியும், தாயின் பாலைப் பருகியும் முதிர்வார். ஆறும்மாசத்திலே அவர் பந்துமித்திரர்கள் அவருக்கு அன்னப்பிராசனஞ்செயதார்கள். அவருக்கு அநேக ஆபர ணங்களுஞ் சூட்டினுர்கள். பாலரும் தமது இனிமையாகிய வார்த்தையினுலே தந்தை யாரைப் பிரீதி செய்தார். சிவபததா வழியிலே போம்பொழுது அவர் கொடுத்த விபூதியை வாங்கி அப்பாலர் நெற்றியிலே இட்டார். அதைகககண்ட தாயார் புதல்வ னுக்கு ஸ்நானஞ்செய்து தக்க தக்க தானங்களிலே ஆபரணம் அணிந்து, அரி சூர்ணத்தையும் வெள்ளை மண்ணையும் பூசினுள். அப்போது அப்புதல்வனுர் வீதியிற் போந்து கஞ்சாபுரத்துப் பிராமணரும் சிவபக்தருமாகிய பசுபதி என்பாரை விபூதி ருத்திராக்ஷம் பிரசாதிக்கும்படி அன்பினேடும் வேண்டி, அவற்றை அவர் கொடுக்கப் பெற்று அவ்வெள்ளைமண் மஞ்சட்பொடிகளை அழித்து விட்டு, சர்வாங்கமும் விபூதி உத்தூளனஞ்செய்து திரிபுண்டரமாகத் தரித்து,



ஹரிதத்தனை அவர்தந்தையார் தண்டித்தல

உருத்திராக்ஷம் பூண்டு, சிவாலயத்தினுள்ளே போந்து, சிவபெருமானைப் பிரதக்ஷிண ஞ்செய்து நமஸ்கரித்து சிவபிரானுக்கு உவப்பாகிய திருத்தொண்டுகளைச் செய்தார். இவற்றைச் சனங்களெல்லாம் நோக்கி முனிவர்களும் செயற்கரிய செய்கையை இப்பாலவைஷ்ணவர் செய்கின்றுரே, முன்னே மகாதேவரை நேத்திர கமலத்தினுலே பூசித்த மாதவரே இப்போது சனங்களை இரக்ஷிக்கும் பொருட்டும், வைதிக மார்க்க த்தை நிறுத்தும்பொருட்டும், சிவபக்தியை வளர்க்கும்பொருட்டும் இங்ஙனம் திருவ வதாரஞ் செய்தனரோ என்பார். மூன்றும்வயசிலே இவருக்குச் சௌளகருமமும், ஐந்தாம் வயசிலே உபநயனமுஞ் செய்யப்பட்டன. இதுவரையும் அப்பாலர் விபூதி தாரணமுதலியன செய்தமையைப் பாலக்கிரீடை என்று நினைந்து கொண்டிருந்த பிதாவாகிய வாசுதேவர் அக்குழந்தையை அழைத்து, 'குழாதையே' நீ சிவன் கோயிலு

க்கு ஓர்காலும் போகாதே, ஓர் காலும் விபூதி கொண்டு உத்தூளன திரிபுண்டரதாரணஞ் செய்யாதே, சிவபத்தரோ டிணங்காதே, அவர்களோடு பேசாதே, உருத்திராக்ஷ தாரணஞ் செய்யாதே, ஸ்ரீவிஷ்ணுவின் சுத்தமாகிய பாதத்தையே சிந்தைசெய்" என்று புதல்வனுக்கு உபதேசித்தார். இப்படி சொல்லியும் பாலனுனவர் விபூதியையும் ருத்திராக்ஷத்தையும் விடாதவராய் சிவபக்தரை வணங்கி அவர் பாததூளியைச் சிரசிலே தரித்து சிவநாமங்களை உச்சரித்து, அக்கினீசுவரராலயத்தை அடைந்து, அதனைப் பன முறையும் வலம்வந்து வணங்கி, அங்கே திருத்தொண்டு செய்து வருவாராயினுர். இவ்வொழுக்கத்தைக் கண்ட பிதாவானவர் அடிக்கடி யான புத்தி புகட்டியும் என் வார்த்தையைப் பாலன் கேட்கின்றுனில்லையே என்று அப்பாலனைக் கயிற்றினுலே கட்டி, கசையினுலே பின்னும் அடித்துத் தம்மதாசாரத்தை உபதேசித்தார். கட்டினின்று விடுபட்டவுடனே புறத்தே போய்ச் சிவாலயத்தை அடைந்து, மனேவாக்குக் காயங்களினுலே சிவபெருமானுக்கும் பிரீதியாகிய திருத்தொண்டுகளைச்செய்தார். பிதாவானவன் தன் மனைவியை நோக்கி "என் புதல்வன என் வாரந்த்தையைக் கேட்கும் வரையும் நீ அவனுக்கு அன்னமிடாதே" என்று சொல்லிப் போயினுன். அவன் போன பின்னர்ச சிவபக்தசிரோமணியாராகிய பாலர் விபூதிருத்திராக்ஷதாரணஞ்செய்து, சிவபெருமானைச் சேவித்துக்கொண்டு போசனம் செய்யுமாறு வீட்டுக்கு மீண்டு வந்து தமது தாயரை நோக்கி "என் இனிய அன்னையே, என்னைப் பசி அதிகமாக வாட்டுகின்றது எனக் கன்னமிடுவாயாக எனறு கேட்டுத் தன் தாயின் கையைப் பலமாகப்பற்றி யிழுத்து நெருக்கினுர். அப்போது தாயானவள் பாலனைப்பார்தது ஐயோ பாலர்! நீ தம்முடைய வார்த்தைக்கமைந்து நடக்குமவரையும் அன்னமிடல் வேண்டாம்" என்று உன் பிதா சொல்லிப் போயினுர். ஆதலால், நீ உன் பிதாவின் சொல்லைக் கேள். உன் பிதாவின் வார்த்தையை ஏன் கேட்கின்றுயில்லை; உன் பிதாவே உனக்கும் எனக்கும் தெய்வம். இப்போது நான் என் செயவேன்" என்று தன் பாலனேடு அநுதாப முற்றுக் கண்ணீர் வார்ந்தாள்.

இங்ஙனம் தாயார் சொல்லிய வார்ததையைக் கேட்டவுடனே பாலர் வீட்டினின்றும் புறப்பட்டு வெளியே போந்து அக்கினீசுவரப் பெருமானையும் நந்திகேசுரரையும் சந்தியாகாலத்திலே போய் நமஸ்கரித்து நின்று "சம்புவே நீவிரே என் பிதா, உமா தேவியாரே என் தாயார், உமது புதல்வர்களாகிய விநாயகர் சுபபிரமணியர் என்னும் இருவரே என் சகோதரர்கள், உமது ஆபதர்களே எனது பரிசாரகர்கள். அங்ஙனமாயினும் உமது தரிசனங் கிடையாமையால், இவ்விடத்தே அடியேன் நாயையும் புழுவையும் ஒத்துத் திரிகின்றேன்; சுவாமீ! உம்மை அடியேன் நினையாமலும், உமது பூசையிலே வழுவினவனுயிருந்தாலும் தீனபந்துவாகிய நீவிர் உமது திருவருளினுல் அடியேனைக் காத்தருளல் வேண்டும். விஷ்ணுமூர்த்தியினுலே உமது திருவடிகளும், பிரமாவினுலே உமது சிரசும் காணப்பட்டிலவாயின, அடியேன் சுவாமியை எவ்வாறு பூசிச்கவுலலேன். 'அடியேனுகிய என்னை விசாரித்துக் காத்தருளல வேண்டும். மழையில்லாது வாடிப்போன பயிர் போல உமது தரிசனங் கிட்டாது வாடிப் போயினேன் கிருபாநிதியே' அடியேனுக்குப் பிரசன்னராகுகா. இன்று கொசுவு போலிருக்கு மடியேனிடத்துக் கிருபாவசத்தினுலே எழுந்தருளி பாலர் எம்மிடம் வருகவென்று அடியேனை எப்போது அழைப்பீர். தாயில்லாப்பிள்ளை போல அடியேனை இகழ்ந்து கைவிடாதீர். அடியார்க்கடியனுகிய பாலன் மீது மிகுதியும் வன்கண்மை செய்யாதீர்.



ஹரதத்தருக்கு தக்ஷிணாமூர்த்தி உபதேசம்.

**ஹரதத்தருக்கு தக்ஷிணுமூர்த்தி உபதேசம்.**

அடியேன் அநாதனுகிய தீனன், உமது பாதங்களையே சிந்தைசெய்தேன். உம்மைக் காண்டற்கு இச்சைப்பட்டேன். அடியேனுக்கு இப்போது பிரசன்னராவீர்; அடியேன் பூமியிலேனும் கைலாசத்திலேனும் இருந்தாலும் ஏன்? உம்மையின்றி ஓர் முகூர்த தமாயினும் அடியேனுக்கு வாழ்வில்லை, மிகுதியுந் தீனனுகிய அடியேனுக்கு நீவிர் பிரசன்னராகாதொழியில் அஃது அநீதியா மன்றே. பின் எது தான் உமக்கு நியாயமாய் முடியுமென்று இந்தப்பிரகாரம் அன்பினேடு தோத்திரஞ்செய்தார். அப்போது கிருபாநிதியாகிய சிவபிரான் உமா தேவியாரோடு இருஷபாரூடராய் அவருக்குப் பிரசன்னராய் "குழந்தையே! இனி நீ அஞ்சற்க" என்று தமது திருவுருவத்தைத் தரிசிப்பித்தருளினர். உடனே சுதர்சனர் மிக்க விம்மித மடைந்தும் அநேக ஸ்தோத்தி ரஞ்செய்தும் பேரானந்தக்கண்ணீர்வார நின்றர். அப்போது சிவபெருமான் அவரைத் தழுவித் தமடித்ம்தலத்திலேற்றி, உச்சி மோந்து, நீ நம்மிடத்து ஆறுத பேரன்புடையை உனக்கு இப்போதுற்ற வருத்தத்தைச் சொல் என்று திருவாய் மலர்ந்தருளினர். அதற்குப் பாலர் சிவபிரானை நோக்கி, சுவாமீ! பிரமவிஷ்ணுக்களாலும் காண்டற்கரிய உம தருமைத் திருமேனியானது ஈண்டு பிரசன்னமாங்கால முடிக்கக்கூடியதாயும், முடிககக்கூடாததாயுமுள்ளது யாது என்றர். உனக்கும் உன் தந்தைக்கும் இடையே நேர்ந்த மனவருத்தத்துக்குக் காரணம் யாது? என்று சிவனர் கேட்ப, அதற்குப் பாலர் அண்டமோரணுவாம் பெருமை கொண்ட நிவிரே ஆன்மாக்களுக்கு அருள்புரியுமாறு அணுவோரண்டமாஞ் சிறுமை கொண்டீராதலின், எம்மிருவர்விளைவெலாம் உமக்கே தெரியுமென்று தலையினலே அவர் ஆஞ்ஞையை வகித்துச் சொன்னர். சொல்லவே, சிவபெருமான் ஸ்மிருதி இதிகாசாதிகளைப் படிப்பாயாக என்றர். அதற் குப் பாலர் படிக்கற்பாலனவாகிய சாஸ்திரங்கள் எண்ணில்லாதனவன்றே' அவற் றைப் படித்தற்குள்ள காலம் அற்பமன்றே படித்தற்கு எய்தும் இடையூறுகளோ எண

ணிறந்தனவன்றோ. பாலும் நீரும் கலந்தவிடத்து அன்னமானது பாலைமாத்திரங் கொள்ளுதல்போல், சுவாமீ சாரமாயுள்ளதையே அடியேற்கு உபதேசியும் சசல வேத புராணங்களினுலும் அறியற்பாலர் நீவிரேயாம். ஆதலினுல் உம்மை ஒருநெறியாகச் சிந்தைசெய்தல் ஒன்றையன்றி மற்றொன்றும் வேண்டேன் என்றூர். அதற்குச் சிவபிரான் சுருதி ஸ்மிருதி முதலியவைகளி னன்றி எனது சொரூபத்தை அறியவும் அறிந்தபடி அன்பு செய்யவு மியலாய் என்றூர். அதற்கு அவர் "சுவாமீ என்னைப் பாலனென்று ஏய்க்கப்பார்க்கின்றீர்" ஒருவன தனக்குச் சிந்தாமணி கிடைத்தபின்னர், பலகரைக்கு ஆசைப்படுவானு என்றூர். அப்போது சிவபெருமான் தமது திருக்கரக மலத்திலே ஓர் யந்திரத்தை எழுதி அப்பாலருடைய சிரசிலே அமைத்து, எல்லாம் அறிந்தவனுகுதி என்று தடவினர். அவ்வேளையில் அச்சிவபிரான் திருவருளால் வேதமுதலிய கலைகளெல்லாம் அப்பாலனுக்கு உதித்தன. அதன் பின்னர் தாம் தக்ஷிணுமூர்த்தியாய் எழுந்தருளியிருந்து கொண்டு, வைதிக சைவ விபூதியை சாபா லோபநிஷத் மந்திரங்களினுலே பாலர்மேனியிலே பூசி, அதன்பின்னர்த் திரிபுண்டர மாகத் தரித்து, உருத்திராக்ஷ மாலையணிந்து, பஞ்சாக்ஷரோபதேசஞ்செய்து, உத்தமமாகிய ஸ்படிகலிங்கத்தை அவர்கையிற் கொடுத்து, வேதசிவாகமவிதிப்படி பூசாவிதியும் உபதேசித்து, சுதாசனுசாரியர் என்ற பெயரை மாற்றி, அரதத்தாசாரியர் என்ற பெயரும இட்டருளினர். அருளவே; அரதத்தாசாரியர் சிவபிரான் திருவடித்தா மரைகளை தமது கண்களினின்று சொரிந்த ஆனந்தபாஷ்பங்களினுலாட்டி மயிர்ப்புள கத்தோடு நமஸ்கரித்தார். உடனே சிவபெருமான் தமது அருமைத் திருக்கரத்தினுலே அப்பாலரை எடுத்து யாமப் போதிலே தானே ஆசீர்வதிதது, நீ போசனஞ் செய்யும் பொருட்டுப் போவாயாக என்று சொல்லி ஆஞ்ஞைசெய்து தாம் சிவலிங்கத்திலே அந்தர்த்தானமாயினார்.

அரதத்ததாசாரியர் இங்ஙனம் சிவபெருமானிடத்திலே மகாமந்திரமாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷரோபதேசம்பெற்று, அவைதிகர்களாகிய வைஷ்ணவர்களை உத்தாரணஞ் செய்யும் பொருட்டு எழுந்தருளிய சிவபிரானை ஒத்தார். குருமூர்தியாய்ப்போந்த சிவபிரானை நமஸ்கரிதது, அவரைத் தமது இதயகமலத்தின்கண்ணே இருத்திக் கொண்டு வீட்டுக்குப் போயினர். அவ்வேளையிலே பிதாவானவன வீட்டினுள்ளே கபாடபந்தனஞ்செய்து சயனித்திருந்தான்; தாயானவள் பாலனுடைய பசிநோயை நினைந்து வருந்திக்கொண்டிருந்தாள். சிவபக்த சிரோன்மணியாகிய அரதத்தாசாரியர் கதவிலே தட்டிப் பசியினுல் நொந்தேன், அன்னமிடுதி என்று உரத்து அழுதார்; உள்ளே நித்திரை செய்த பிதாவானவன் சிவபாதாபஜஸ்மாணராகிய அரதத்தாசாரியர் இயல்பை அறியாது அவர் வார்த்தையைக் கேட்டபோது கண்ணினை சிவப்பேறக் கோபத்தோடு விழித்து இவ்வாறு சொல்வான். நான் சொல்லும் சொல்லுக்கு அமை வையேல் உனக்கு அன்னமிடுவேன் நீ எப்போதாயினும் சிவனுக்குத் தொண்டு செய்தால், பாஞ்சராத்திர ஆகமங்களைப்படியாதிருந்தால், வெள்ளேறு ஏறுவோன் கோயிலுக்கு நீ போனுல் உன்னை நான் தண்டிப்பேன்; இங்ஙனம் அமையாது போவை யாகில் உன் கால்களைச் சேதிப்பேன் என்று சொன்னுன். இதைக் கேட்ட பாலா சிவ நிந்தையில் விருப்புற்ற திருசூலபாலராகிய தந்தையாரைப் புன்சிரிப்போடு நோக்கி, கௌதமமுனிவராலும், ததீசிமுனிவராலும், கண்ணுவமுனிவராலும், உபமன்னியு முனிவராலும், பிரமனுலும், நந்திகேசுரராலும் சபிக்கப்பட்ட பிராமணருள்ளே நீயும் அகப்பட்டனையன்றே வாதலின, நினக்கு பரமபதியான மஹாதேவருடைய உண்மை

யொன்றுந் தெரியாது சொல்வேன் கேள் அந்தத் தத்துவப்பொருளாகிய சிவபிராஜ விஷ்ணுவானவர் நேத்திரகமலங்களினுலே பூசித்து வழிப்பட்டமையால், சிவபிரான் அவருக்குச் சர்வஞ்ஞத்துவத்தைக் கொடுத்தார் என்றறிகுதி. நீ யென்ஜ வேத முதலிய வித்தைகளிலே பரீக்ஷிதது்ப் பார்கதி; பின்னரும் சிவபிராஜ விஷ்ணுவா னவா நேத்திரத்திஞலே அர்ச்சித்தாரோ, அன்ஹே? சொல் என்று கேட்டார். அதற்குத் தந்தையானவன் உலகத்தை வஞ்சிக்குமாறு பூசித்தாராதலில், இப்பூசை யதார்த்த பூசை யாகாது என்றன். அதுகேட்ட சிவபக்தசிரோமணியார் இங்ஙனம் ஒருவாறு உத்தரஞ் சொல்லிய பிதாவைப் பார்த்து, விஷ்ணுவுடைய சர்வேசுரத்துவத்தை வேதாகம் முறைப்படி பேசுதி என்று வாதித்தார். பிதாவும் பாலரும் இவ்வாறு வாதிக் கும் போது, அக்கிராமத்திலே யுள்ள வைஷ்ணவர்களும் சிவனடியார்களும் ஒருங்கு கூடினர்கள்.

(உடனே அகர்த்தாவான அரியைக் கர்த்தாவகக் கருதிய பாஞ்சராத்திரிகளின் மனத்திருலிருக்கும் அஞ்ஞானவிருளகலுமாறு எழுந்தருளிய ஸ்வாமி யரதத்தரைப் போல சூரியனுதைய மாயினன். தந்தைக்கு மைந்தனுக்கும் அரி அரர்கஊப்பற்றிய தாரதம்மியவாத நடக்கின்றதென்று பிரஸித்தியாயிற்று. இதனுல் சைவர்களும் வை ணவர்களும் திரளாகச் சேர்நதார்கள். அன்றியுள்ள மதவாதிகளும் வந்து நெருங்கினர் களை. தினேதினே வாதம் விருத்தியாகியது. இதையுணர்ந்த ஊராள்வோனும பிறருங் கூடினர்கள். பின்னரொருநாள வைணவராதியா இங்ஙனம் தந்தையும் மைந்தருமா கிய நீவிர் வெறுமவாதஞ் செய்வதாற் பயனில்ஐல; தீயிலிட்டுப் பழுக்கக்காய்ச்சிய இரும்புப்பீடத்திலேறி நின்று அரியையேனும அரஜயேனும் நியாயமுகத்தால் சிறந்த பொருளென்று தாபித்தால் நாங்களந்த மதத்தை யடைகின்ருேமெனருர்கள். உடனே மஹாப்பிரபுவான அரதத்தர் யானவ்வண்ணமே செய்கின்றேனென்ருர்; இந்த அரியவிடயத்தைக் கண்டு களிக்க அனேகர் விரும்புவார்கள்; அதனுல் பலதேயத்தின ரும் உணர்ந்துவாத்தக்க ஒரு நன்னுளமைப்போமென நாளமைத்தனர்; அத்தினத்திற் திரண்ட சனங்கள் வந்து நெருங்கினர்கள) உடனே வைணவர்கஊப் பார்த்து, வைதிக ரைலவேதியா முதலியோர் பாஞ்சராத்திரியர்காள் வம்மின் எம்மிறைவனுகிய அக்கினச்சுரன் தாலயத்திற்கு அங்கே எங்கள் வைதீகவாரணா உங்களாலிடப்பட்ட ஒழுகக்காய்ந்த இரும்புப்பீடத்திலேறியிருந்து சிவபெருமானே பரமென்று தாபிப்பா ரென்றனர். அதற்கப்பாஞ்சராத்திரிகள் கோபத்துடன் நாங்கள் ஆஜ துரத்தினும் ஆலயம் நுழையேம் என்று நியமம்பூண்டவர்கள்; ஆதலால் அவ்வரனுலய மடை யேம்; எங்கள் பகவானுன ஸ்ரீஹரியின் ஆலயமும் அதிவிசாலமானதே, அதற்குள் வந்திச் சிறுவன் சிவனே பரமென்றுரைத்துத் தாபனஞ் செய்வானுயிற் சரிதானென்று - 'வயம்ருத்ரகுடீம்க்வாபி நபச்யமா:கதாசா' என்பவனவாதி வாக்கினங்களானுரைத்த னர், உடனே அரதத்தர் அதற்குஞ் சம்மதித்து, அவ்வூரிலுள்ள வரதராஜஸ்வாமி ஆலயத்துட்சென்று, அங்கு வீற்றிருக்கும சுவாமியான வரதராசரை யன்புடன் வணங்கி நமஸ்காரஞசெய்து துதித்து, -

**"தேவதேவஜகந்நாதஹரபாதாப்ஜசிந்தக ।**
**ஶிவபூஜாஸக்தசித்தசிவபக்தசிரோமணே ॥**

**மஹாவிஷ்ணுேமஹாபாகசரணுகதவதஸல ।**
**ஸர்வோபநிஷதாமசாரம்சித்ததியவேதயதி ॥**
**ததாதவதஸந்நிதெளதப்தலோகபீடமிதமவிபோ ।**
**இமாம்புசீதளமபூயாதிதயுக்த்வாததபரதக்ஷிணம ॥**
**க்ருத்வாதயாதவாமஹாதேவமபார்வதீஸஹிதமவிபும் ।"**

என்றுரைத்தாங்கு தேவதேஜகனனுதி வாக்கியங்களால் அரியை வணங்கி நினசந்நிதி யிலிருந்து சரவஸாரமான உபநிஷதார்த்தங்களால் சிவபரத்துவஸ்தாபனஞ் செய்யப் போகின்றேன். ஹே ஸ்வாமி' யான் ஏறப்போகின்ற காய்ந்த இரும்பு முக்காலியானது குளிர்ந்த ஜலத்தைப் போல ஆகவேண்டியது. என்றுரைத்து நின்றனர். உடனே வைணவர்கள் தீயிலிட்டு உருக்க காயச்சிய பெரிய இரும்பு முக்காலியைக் கொண்டு வந்து கருடனுக்கும வரதராஜஸ்வாமிக்கும் நடுவில் இட்டார்கள். உடனே அரத்ததா சாரிய சுவாமிகள் அதனைப் பிரதக்ஷிணஞ்செய்து, உமாதேவி சமேதராகிய சிவபெரு மானைத் தியானித்து, அந்த அயபீடத்திருத்து, சைவ வைஷ்ணவர்களுள்ளே சிவநிந்தகர்களாகிய வைஷ்ணவர்களை நோக்கி தத்துவார்த்தமாகிய **சதுர்வேத தாற் பரியசங்கிரகம்** என்னும் **சுருதிசூக்திமா**லையினுலும், அன்றியும் மந்திரசிரேஷ்ட மான கர்த்தாவாக இருத்தலினுலும், தசரதன் பிள்ளையான இராமன் இலிங்கந் தாபித்துப் பூசித்தமையானும், கண்ணன் ஸ்ரீகைலாயத்தையடைந்து துதிக்க அவற்குப் பிள்ளையை அளித்தமையானும், நூற்றிதழ்க் கமலமலர்களாலும், தங்கண்மலராலும் பூசிக்க வவற்குச் சக்கர மீந்தமையாலும் பசுபதி சகல தேவர்களுக்கும் முதல்வனுகி ன்றுன்;



ஹரிதததா எரிகிற இருமபு நாறகாலியின் மீது வீறறிருக்து சைவஸதாபனஞ் செய்தல.

**ஹரிதத்தர் எரிகிற இரும்புநாற்காலியின்மீது வீற்றிருந்து சைவஸ்தாபனஞ் செய்தல்.**

மன்மதனை யழித்தமையாலும், ஆலத்தை யுண்டமையாலும், எமனுடைய கர்வ பங்சஞ்செய்தமையாலும், அசுரர் வாழ்ந்த முப்புரங்களை யழித்தமையாலும், தக்கனுடைய யாகத்தை யழித்தமையாலும், அருச்சுனனுக்கு தன் பெயருள்ள அம்பினை அளித்தமையாலும், நரசிங்கத்தை வதைத்தமையாலும், கண்ணன்கொண்ட (மோகினி) பெண்ணுருவைக் கலந்து சாததனைப் பிள்ளையாகப் பெற்றமையாலும் பசுபதி சகல தேவர்களுக்கு முதல்வனுகின்றுன்.

காசியில் வியாசருடைய தோள்களைத் தம்பிக்கு மாறு செய்தமையாலும், முன்னர் திரிபுரஜயகாலத்தி லரியால் இடபவுருக்கொண்டு தாங்கப்பட்டமையாலும், பிரமகபாலாதிகளாலே அலங்கரிக்கப்படுதலாலும், பக்குவர்களுக்கு ஞானுேபதேசஞ் செய்தலாலும், உலகில் ருச்சித்த வனேகருக்கு வேண்டிய அபீஷடங்களை அளித்தமையாலும், பெண்ணுடம்பு கொண்ட அரிக்குப் பாதியுட லீந்தமையாலும், இன்ன மனேக காரணங்களாலும அரனே முதல்வனென்று குறிக்கின்ற பஞ்சரத்தின மாலையினுலும்,

॥ ओम् नमः शिवाय ॥

## ॥ श्री हरदत्तचार्यकृता पञ्चरत्नमालिका ॥

**गायत्री वल्लभत्वात् दशरथतनय स्थापिताराधितत्वात्**
**शौरेः कैलासयात्लाव्रतमुदितयाऽभीष्ट सन्तानदानात् ।**
**नेत्रेणस्वेन साकं दशशतकमलैः विष्णुनापूजितत्वात्**
**तस्मै चक्रप्रदानादपि च पशुपतिः सर्वदेव प्रकृष्टः ॥१॥**

**कन्दर्पध्वंसकत्वात् गरलकबळनात् कालगर्वापहत्वात्**
**दैतेयावासभूतत्रिपुर विदळनात् दक्षयागे जयित्वात् ।**
**पार्थस्य स्वास्त्रदानात् नरहरि विजयात् माधवे स्वी शरीरे**
**शास्तुस्संपातकत्वादपि च पशुपतिः सर्व देवप्रकृष्टः ॥२॥**

**वाराणस्यां पाराशरि नियमि सुजस्तंभनात् प्राक्पुराणां**
**प्रध्वंशे केशवेनाश्रितवृषवपुषा धारित क्ष्मातलत्वात् ।**
**अस्तोकै ब्रह्माशीषै रनिशगलकृतालक्रिया भूषितत्वात्**
**दानात्प्रज्ञान मुक्त्योरपि च पशुपतिः सर्वदेवप्रकृष्टः ॥३॥**

**भूमौ लोकैरनेकैः सततविरचिताराधितत्वादमीषाम्**
**अष्टैश्वर्य प्रदानात् दशविधवपुषा केशवेनाश्रितत्वात् ।**
**हंसक्रोडाङ्गधारि द्रुहिण सुरहरान्विष्ट शीर्षांत्रिकत्वात्**
**जन्म ध्वंसा द्यभावात् अपि च पशुपतिः सर्वदेवप्रकृष्टः ॥४॥**

वैशिष्टचे योनि पीठायितमुररिपु श्लिष्टभावेन शंभोः
सस्त्रीकार्द्ध प्रतीकायित हरिवपुषाऽलिंगतत्वेन यद्वा ।
अप्राधान्यात् विशिष्टाद्वय समधिगमे दानवानामरातेः
शंभोरुत्कृष्ट भावादपि च पशुपतिः सर्वदेव प्रकृष्टः ॥५॥

॥ ஓம் நமः ஶிவாய ॥

॥ ஸ்ரீ ஹரத3த்தசார்யக்ருதா பஞ்சரத்னமாலிகா ॥

கா3யத்ரீ வல்லப4த்வாத் த3ஶரத2தனய ஸ்தா2பிதாராதி4தத்வாத்
ஶௌரேः கைலாஸயாத்லாவ்ரதமுதி3தயா(அ)பீ4ஷ்ட ஸந்தானதா3னாத் ।
நேத்ரேணஸ்வேன ஸாகம் த3ஶஶதகமலैः விஷ்ணுனுபூஜிதத்வாத்
தஸ்மை சக்ரப்ரதா3நாத3பி ச பஶுபதிः ஸர்வதே3வ ப்ரக்ருஷ்டः ॥1॥

கந்த3ர்பத்4வம்ஸகத்வாத் க3ரலகப3ளனுத் காலக3ர்வாபஹத்வாத்
தை3தேயாவாஸபூ4தத்ரிபுர வித3ளனுத் த3க்ஷயாகே3 ஜயித்வாத் ।
பார்த2ஸ்ய ஸ்கா2ஸ்த்ரதா3னுத் நரஹரி விஜயாத் மாத4வே ஸ்வீ ஶரீரே
ஶாஸ்துஸ்ஸம்பாதகத்வாத3பி ச பஶுபதிः ஸர்வ தே3வப்ரக்ருஷ்டः ॥2॥

வாராணஸ்யாம் பாராஶரி நியமி ஸுஜஸ்தம்ப4னுத் ப்ராக்புராணும்
ப்ரத்4வம்ஸே கேஶவேநாஸ்ரிதவ்ருஷவபுஷா தா4ரித க்ஷ்மாதலத்வாத் ।
அஸ்தோகை ப்3ரஹ்மாஶீஷை ரநிஶக3லக்ருதாலக்ரியா பூ4ஷிதத்வாத்
தா3னுத்ப்ரஜ்ஞான முக்த்யோரபி ச பஶுபதிः ஸர்வதே3வப்ரக்ருஷ்டः ॥3॥

பூ4மௌ லோகைரனேகைः ஸததவிரசிதாராதி4தத்வாத3மீஷாம்
அஷ்டைஶ்வர்ய ப்ரதா3னுத் த3ஶவித4வபுஷா கேஶவேநாஸ்ரிதத்வாத் ।
ஹம்ஸக்ரோடா3ங்க3தா4ரி த்3ருஹிண ஸுரஹரான்விஷ்ட ஶீர்ஷாந்த்ரிகத்வாத்
ஜன்ம த்4வம்ஸா த்3யபா4வாத் அபி ச பஶுபதிः ஸர்வதே3வப்ரக்ருஷ்ட2ः ॥4॥

வைஶிஷ்டசே யோனி பீடா2யிதமுரரிபு ஶ்லிஷ்டபா4வேன ஶம்போ4ः
ஸஸ்த்ரீகார்த்3த4 ப்ரதீகாயித ஹரிவபுஷா(அ)லிங்க3தத்வேன யத்3வா ।
அப்ராதா4ன்யாத் விஶிஷ்டாத்3வய ஸமதி4க3மே தா3னவாநாமராதேः
ஶம்போ4ருத்க்ருஷ்ட பா4வாத3பி ச பஶுபதிः ஸர்வதே3வ ப்ரக்ருஷ்டः ॥5॥

என்னும் பஞ்சரத்தினத்தாலும்,

விஷ்ணுவாதி தேவர்களெல்லாம் முப்புரத்தசுரரைச் செயிக்க வன்மையிலராய், சிவபிரானைச் சரணடைந்து வணங்கி, சுவாமீ! நாங்களெல்லா, பசுக்கள் எங்களும்க்கெல்லாம் ஈசுரர் நீவிரே; அதனுல் உம்மைச் சரணடைந்தேம். பசுபதியே! முப்புரத்தசுரரினின்று விரைந்து காத்தருள்வீர் என்று துதிக்கப்பெற்ற அம்பிகாசமேதராகிய சிவபிரானிடத்தில் என்னிதயமானது இனிமையோடு மகிழ்ச்சி பூண்பதாகும். முப்புரத்தை அழிக்கப்போந்த காலத்திலே பசுபதியாகிய சிவபிரானுக்கு விஷ்ணு

பரணமாகவும், பிரமன சாரதியாகவும், மகாமேரு வில்லாகவும், நாணி சர்ப்பராசனுக வும், சூரிய சந்திரா சக்கரங்களாகவும், பூமிரதமாகவும் அமையக்கொண்டருளிய அம்பிகாசமேத சிவபிரானிடத்திலே என்னிதயமானது இனிமையோடு மகிழ்ச்சி பூண் பதாகும். ஓர்காலத்திலே நாராயணர் பிருகு முனிவருடைய மனைவிமீது தமது சக்கர த்தைப் பிரயோகஞ்செய்து கொன்று விடும்போது, அப்பிருகுமுனிவரானவா சிவமந்தி ரங்கொண்டு தன் மனைவியை எழுப்பிவிட்டுத் தன் மனைவியைக் கொன்ற லட்சுமீ சமேதராகிய அந்த நாராயணரை எந்தப்பெருமானுடைய அருளினுல் தம் சாபத்துக்கு இலக்காக்கினுரோ, சந்திரசேகரராகிய எந்தப்பெருமானை ஆகமாந்தங்களை உணர்ந்த வர் விசுவாதிகர் என்று புகழ்கின்றுர்களோ, அந்த அம்பிகாசமேதராகிய சிவபிரானிடத் தில் என்னிதயமானது இனிமையோடு மகிழ்ச்சி பூண்பதாகும்; எண்ணில்லாத ஆரண ங்களையும் புராணங்களையும் அருளிய வியாசமுனிவர் , ஸ்ரீகாசியிலே ஸ்ரீவிசுவேசர சந்நிதியிலே தமது கையை உயர்த்திச் சிவபிரானிலும் கேசவரே உயாந்தவரென்று கூற, நந்திதேவர் இட்ட சாபத்தினுல் அந்தக்கை நின்றபடியே நிற்குமாறு எந்தப் பெருமானுடைய அருளினுற் சபிக்கப்பட்டாரோ, அந்த அம்பிகாசமேதராகிய சிவபிரா னிடத்தில் என்னிதயமானது இனிமையோடு மகிழச்சி பூண்பதாகும்; ஸ்தாவர சங்கமங்களையுடைய பூமியைப் படைத்தவராகிய பிரமனுக்குத் தலைவராயுள்ள விஷ்ணுவானவர் ததீசிமுனிவரோடு ஓர்கால் யுத்தஞ்செய்து, விரைவிலே (எந்தப் பெருமானுடைய பக்தராகிய) ததீசியினுல் அபசயப்பட்டாரோ அந்த அம்பிகாசமேத ராகிய சிவபிரானிடத்தில் என்னிதயமானது இனிமையோடு மகிழ்சசி பூண்பதாகும்; காதி முதலிய அசுரர்களை அச்சுறுத்தினவரும், தூணினின்று தோன்றிய இரணிய னைக் கொல்லும் பொருட்டு ஸ்தமபத்திலே நின்று தோன்றி இரணியனைக் கொன்ற வருமாகிய நரசிம்மத்தின் கருவத்தை எந்தப்பெருமானுடைய அம்சரும் லோகேஸ்ரு மாயுள்ள சரபமூர்த்தி சிக்ஷித்து அடக்கினுரோ அந்த அம்பிகாசமேதராகிய சிவபிரானி டத்தில் என்னிதயமானது இனிமையோடு மகிழ்சசி பூண்பதாகும்; வைகுண்ட லோகத்தின் முதல்வாயிலிலே நின்ற விடுவேசன் என்பானுடைய பெரிய மார்பைத திரிசூலத்தினுலே பிளந்து தாங்கித்தேவர்களிடத்திலே முன்னர் இரத்தப்பிக்ஷை வாங்கப்பெற்ற பிரமகபாலத்திலே அவன் இரத்ததததை எந்தப் பெருமானுடைய அம்ச ராகிய பைரவமூர்த்தி நிறைக்கப போந்தாரோ, அந்த அம்பிகாசமேதராகிய சிவபிரானி டத்தில் என்னிதயமானது இனிமையோடு மகிழ்ச்சி பூண்பதாகும்; விஷ்ணுவுடைய புதல்வனுகிய மன்மதனை நெற்றிக்கண்ணினுற் பொடி செய்து அவனது சாம்பரைத் தரித்தவரும், பிரமனது ஐந்து சிரசுகளில் ஒன்றைச் சிதைத்து அதனைச் சபாலமாகக் கொண்டவரும், விஷ்ணு மூர்த்தியுடையகண் ஒன்றை மலராகக் கொண்டருளின வருமாகிய அந்த அம்பிகாசமேதராகிய சிவபிரானிடத்தில் என்னிதயமானது இனி மையோடு மகிழ்ச்சி பூண்பதாகும்; ஓர் காலத்துச சமுத்திரத்திலே தோன்றின ஆலகால விஷத்துக்கஞ்சி விஷ்ணு பிரமன் முதலாயினேர் பெருங்கவலையோடு கைலாசபதியை யடைந்தபோது, அவர்களை எல்லாம் அஞ்சற்க என்று அபயஸ்தம் கூறி, அவர்களை தத்தம் இடம் சாரும்படிசெய்து, நஞ்சைத் தமது கண்டத்திலே அடக்கி அருள் செய்தவராகிய அம்பிகாசமேத சிவபிரானிடத்தில் என்னிதயமானது இனிமையோடு மகிழ்ச்சி பூண்பதாகும்; சிவபெருமான் ஓர்கால் சாத்துவிக ராசச தாமச குணம் என்பவற்றைச் சிருஷ்டித்து அவற்றை மூவர்க்கும் அருளிச் செய்ய, சாத்துவிக குணம் ராசசகுணம் என்பவற்றை முறையேயுடைய விஷ்ணுவும் பிரமாவும் தாமசகுண ருத்திரரைத் தனித்தனி தூக்கியெடுக்க வலியிலராயப்போக,

காமசகுணத்தினராகிய ருத்திரர் அந்தப் பிரம விஷ்ணு என்னும் இருவரையும் எந்தப்பெருமானுடைய அருளிஞலே எடுத்து நடித்தாரோ, அப்படிப்பட்ட அந்த அம்பிகாசமேத சிவபிரானிடத்திலே என்னிதயமானது இனிமையோடு மகிழ்ச்சி பூண்பதாகும்; என்னும் -

श्री हरदत्ताचार्यविरचितम्

## साम्बपरब्रह्म स्तोत्राणि

(भविष्योत्तरपुराणम्)

**साम्बो नः कुलदैवतं पशुपते साम्ब त्वदीया वयं**
**साम्बं स्तौमि सुरासुरोरग गणाः साम्बेन सन्तारिताः ।**
**साम्बायास्तु नमो मया विरचितं साम्बात्परं नो भजे**
**साम्बस्य अनुचरोऽस्म्यहं मम रतिः साम्बे परब्रह्मणि ॥ १ ॥**

**विष्णवाद्याश्च पुरत्त्रयं सुरगणाः जेतुं न शक्तास्वयं**
**यं शंभुं प्रणता वयंतु पशवोऽस्माकं त्वमेवेश्वरः ।**
**तेनास्मिन्शरणागतान्पशुपते पाहीत्यवोंचं द्रुतं**
**तस्मिन्मे हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि ॥ २ ॥**

**यस्येषुः कमलेक्षणः पशुपतेरब्जोद्भवस्सारथि**
**यस्य ज्याफणिनामिनोरथपदे यस्येन्दुसूर्यावुभौ ।**
**मेरुर्यस्य शरासनं रथवरो भूमिस्तु यस्याभवत्**
**तस्मिन्मे हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि ॥ ३ ॥**

**यद्भक्तो भृगुरिन्द्रिापतिमहो शापस्थ लक्ष्यं भृशं**
**कृत्वा वां दयितां मृतां स्वमनुभिश्चैवैरयुङ्क्तासुभिः ।**
**यं ताराधिपचूडमागमशिरो विश्वाधिकं गायते**
**तस्मिन्मे हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि ॥ ४ ॥**

**गोविन्दादधिकं न दैवतमिति प्रोच्चार्य हस्तावुभौ**
**उद्धृत्याथ शिवस्य सन्निधिगतो व्यासो मुनीनां पुरः ।**
**यस्यस्तम्भित्पाणिरानतिकृता नन्दीश्वरेणाऽभवत्**
**तस्मिन्मे हृदयं सुखेन रमतां साम्बे पराब्रह्मणि ॥ ५ ॥**

विष्णुस्थावरजङ्गमात्मकजगत्स्वामी विरिञ्चाधिको.
यद्भक्तेन सहासुरेश्वररिपुर्युद्धं दधीचेन सः ।
कृत्वा शीघ्रमहो द्विजादपजयं तस्माद्गतोभूभृशं
तस्मिन्मे हृदयं सुखेन रमता साम्बे परब्रह्मणि ॥ ६ ॥

कादीनाञ्च भयंकरः स्वमहसा क्रूरैश्च कृत्यैर्भृशं
कोपान्धो जितदानवो नरहरिर्यस्यांशभूतेन सः ।
लोकेशश्शरभेण शिक्षितमदोभूल्लीलयाऽर्धक्षणात्
तस्मिन्मे हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि ॥ ७ ॥

विष्वक्सेनमपीन्दिरापतिसमें तं रक्तभिक्षाच्छलात्
संहृत्याथ सभैरवश्शाशिधरो यस्यांशभूतो जटी ।
ब्रम्माद्यामरशिक्षकस्य बलिनो विष्णोर्मदञ्चाहरत्
तस्मिन्से हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि ॥ ८ ॥

येनापादितमङ्गजाङ्गभसितं दिव्याङ्गरागैस्समं
येनस्वीकृतमब्जसंभवशिरस्सौवर्णपात्रैस्समम् ।
येनाङ्गीकृतमच्युतस्यनयनं पूजारविन्दैस्समम्
तस्मिन्मे हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि ॥ ९ ॥

विष्णुब्रह्मसुराधिपप्रभृतयस्सर्वेपि देवा भृशं
संमृताञ्जलधेर्विषात्परिभवं प्राप्तायमेत्येश्वरं ।
स्वस्वथाननियोजिता गतशुचः स्वस्था बभूवुर्ध्रुढाः
तस्मिन्मे हृदयं सुस्खेन रमतां साम्बे परब्रह्मणि ॥ १० ॥

सृष्ट्वा यस्त्रिगुणावितातृमधुपिच्चूलायुधेभ्यश्शिवो
दत्त्वैतानथ तान् गृहीतुमनयोश्शक्त्या पुनर्हीँनयोः ।
ताभ्यां साकमहो गुणत्रयभृते रुद्राय साम्यं ददौ
तस्मिन्मे हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि ॥ ११ ॥

ஸ்ரீ ஹரத3த்தாசார்யவிரசிதம்

# ஸாம்ப3பரப்3ரஹ்ம ஸ்தோத்ராணி

(ப4விஷ்யோத்தரபுராணம்)

ஸாம்போ3 நः குலதை3வதம் பஶுபதே ஸாம்ப3 த்வதீ3யா வயம்
ஸாம்ப3ம் ஸ்தௌமி ஸுராஸுரோரக3 க3ணை: ஸாம்பே3ன ஸந்தாரிதா: ।
ஸாம்பா3யாஸ்து நமோ மயா விரசிதம் ஸாம்பா3த்பரம் நோ ப4ஜே
ஸாம்ப3ஸ்ய அனுசரோ(அ)ஸ்ம்யஹம் மம ரதி: ஸாம்பே3 பரப்3ரஹ்மணி ॥ 1 ॥

விஷ்ண்வாத்3யாஶ்ச புரத்த்ரயம் ஸுரக3ணை: ஜேதும் ந ஶக்தாஸ்வயம்
யம் ஶம்பு4ம் ப்ரணதா வயந்து பஶவோ(அ)ஸ்மாகம் த்வமேவேஶ்வர: ।
தேனுஸ்மின்ஶரணுக3தான்பஶுபதே பாஹீத்யவோஞ்சம் த்3ருதம்
தஸ்மின்மே ஹ்ருத3யம் ஸுகே2ன ரமதாம் ஸாம்பே3 பரப்3ரஹ்மணி ॥ 2 ॥

யஸ்யேஷு: கமலேக்ஷண: பஶுபதேரப்3ஜோத்3ப4வஸ்ஸாரதி2
யஸ்ய ஜ்யாப2ணிநாமினேரத2பதே3 யஸ்யேந்து3ஸூர்யாவுபௌ4 ।
மேருர்யஸ்ய ஶராஸனம் ரத2வரோ பூ4மிஸ்து யஸ்யாப4வத்
தஸ்மின்மே ஹ்ருத3யம் ஸுகே2ன ரமதாம் ஸாம்பே3 பரப்3ரஹ்மணி ॥ 3 ॥

யத்3ப4க்தோ ப்4ருகு3ரிந்த்3ரிாபதிமஹோ ஶாபஸ்த2 லக்ஷ்யம் ப்4ருஶம்
க்ருத்வா வாம் த3யிதாம் ம்ருதாம் ஸ்வமனுபி4ஶ்சைவைரயுங்க்தாஸுபி4: ।
யம் தாராதி4பசூட3மாக3மஶிரோ விஶ்வாதி4கம் கா3யதே
தஸ்மின்மே ஹ்ருத3யம் ஸுகே2ன ரமதாம் ஸாம்பே3 பரப்3ரஹ்மணி ॥ 4 ॥

கோ3விந்தா3த3தி4கம் ந தை3வதமிதி ப்ரோச்சார்ய ஹஸ்தாவுபௌ4
உத்3த்4ருத்யாத2 ஶிவஸ்ய ஸந்நிதி4க3தோ வ்யாஸோ முனீனும் புர: ।
யஸ்யஸ்தம்பி4த்பாணிரானதிக்ருதா நந்தீ3ஶ்வரேணு(அ)ப4வத்
தஸ்மின்மே ஹ்ருத3யம் ஸுகே2ன ரமதாம் ஸாம்பே3 பராப்3ரஹ்மணி ॥ 5 ॥

விஷ்ணுஸ்தா2வரஜங்க3மாத்மகஜக3த்கா2மீ விரிஶ்சாதி4கோ
யத்3ப4க்தேன ஸஹாஸுரேஶ்வரரிபுர்யுத்3த4ம் த3தீ4சேன ஸ: ।
க்ருத்வா ஶீக்4ரமஹோ த்3விஜாத3பஜயம் தஸ்மாத்3க3தோபூ4ப்4ருஶம்
தஸ்மின்மே ஹ்ருத3யம் ஸுகே2ன ரமதா ஸாம்பே3 பரப்3ரஹ்மணி ॥ 6॥

காதீ3னுஞ்ச ப4யங்கர: ஸ்வமஹஸா க்ரூரைஶ்வ க்ருத்யைர்ப்4ருஶம்
கோபாந்தோ4 ஜிததா3னவோ நரஹரிர்யஸ்யாம்ஶபூ4தேன ஸ: ।
லோகேஶஶ்ஶரபே4ண ஶிக்ஷிதமதோ3பூ4ல்லீலயா(அ)ர்த4க்ஷணுத்
தஸ்மின்மே ஹ்ருத3யம் ஸுகே2ன ரமதாம் ஸாம்பே3 பரப்3ரஹ்மணி ॥ 7 ॥

**விஷ்வக்ஸேனமபீந்தி3ராபதிஸமேம் தம் ரக்தபி4க்ஷாச்ச2லாத்**
**ஸம்ஹ்ருத்யாத2 ஸபை4ரவஶ்ஶாஶித4ரோ யஸ்யாம்ஶபூ4தோ ஜடீ ।**
**ப்3ரம்மாத்3யாமரஶிக்ஷகஸ்ய ப3லிஞே விஷ்ணோர்மத3ஞ்ஶ்சாஹரத்**
**தஸ்மின்ஸே ஹ்ருத3யம் ஸுகே2ன ரமதாம் ஸாம்பே3 பரப்3ரஹ்மணி ॥ 8 ॥**

**யேனாபாதி3தமங்க3ஜாங்க3ப4ஸிதம் தி3வ்யாங்க3ராகை3ஸ்ஸமம்**
**யேனஸ்வீக்ருதமப்3ஜஸம்ப4வஶிரஸ்ஸௌவர்ணபாத்ரைஸ்ஸமம் ।**
**யேனாங்கீ3க்ருதமச்யுதஸ்யநயனம் பூஜாரவிந்தை3ஸ்ஸமம்**
**தஸ்மின்மே ஹ்ருத3யம் ஸுகே2ன ரமதாம் ஸாம்பே3 பரப்3ரஹ்மணி ॥ 9 ॥**

**விஷ்ணுப்3ரஹ்மஸுராதி4பப்ரப்4ருதயஸ்ஸர்வேபி தே3வா ப்4ருஶம்**
**ஸம்ம்ருதாஞ்ஜலதே4ர்விஷாத்பரிப4வம் ப்ராப்தாயமேத்யேஸ்வரம் ।**
**ஸ்வஸ்வதா2னநியோஜிதா க3தஶுச: ஸ்வஸ்தா2 ப3பூ4வுர்த்4ருடா4:**
**தஸ்மின்மே ஹ்ருத3யம் ஸுஸ்கே2ன ரமதாம் ஸாம்பே3 பரப்3ரஹ்மணி ॥ 10 ॥**

**ஸ்ருஷ்ட்வா யஸ்த்ரிகு3ணாவிதாத்ருமது4பிச்சூலாயுதே4ப்4யஶ்ஶிவோ**
**த3த்த்வைதானத2 தான் க்3ருஹீதுமனயோஶ்ஶக்த்யா புனஹீம்நயோ: ।**
**தாப்4யாம் ஸாகமஹோ கு3ணத்ரயப்4ருதே ருத்3ராய ஸாம்யம் த3தௌ3**
**தஸ்மின்மே ஹ்ருத3யம் ஸுகே2ன ரமதாம் ஸாம்பே3 பரப்3ரஹ்மணி ॥ 11 ॥**

என்னும் பொருளைத் தருகின்ற இந்த பத்துசுலோகங்களாலும், அரிஹரதாரதம்மிய மென்னு நூலாலும், சிவபரத்துவ ஸ்தாபனஞ் செய்தனர். இதுநிற்க,

ஸ்ரீசுருதிசூதிமாலை முதலிய முதலியவைகளால் மகாதீரராகிய அரதத்தாசாரியர் சிவபெருமானுடைய பரத்துவஞ் சாதித்தபோது, அவருடைய திருவருளினலே ஒழுகக்காய்ந்த அப்பீடமானது சீதளமாகிய சந்தனச சேற்றை ஒத்துக் குளிர்ந்தது. அவர் இவ்வாறு வேதப்பிரமாணங் கொண்டும், புராணப் பிரமாணங்கொண்டும், ஸ்மிருதிப் பிரமாணங்கொண்டும் சிவபிரானுடைய பரத்துவததைள் தாபனஞ் செய்து, பண்டிதர் சபையிலே வைதிகாக்கிரராய் பிரகாசித்தார். சபையிலுள்ள பெரியோரெல் லாம வாசுதேவர்குமாரராகிய அரதத்தாசாரியரைச் சிவபெருமானேயாமென்று துதித்து அவருடைய திருவடித்தாமரைகளிலே வீழந்து நமஸ்கரித்துத் தத்தம் கிரகம் சார்ந்தார். பின்னர் அரத்ததாசாரியர் காவேரிலே போய் ஸ்நானஞ்செய்து, வைதிக சந்தியா கருமங்களை முடித்து, சனங்கள நாற்புடையிலும் சூழ்ந்து நிற்ப, அன்பினேடுஞ் சிவார்ச்சனை செயதார். அதன் பின்னர் தாயானவள் தனது புதல்வரைக் கிட்டித்தழுவி உரசிமோந்து, துனபத்தினுலும் இன்பத்தினுலும் நேர்ந்த கண்ணீரினுலே தனகுமாரனை அபிஷேகித்து, பாலனே நீ மிகுதியும் பசியினுலே வாடினை என்கண்மணியே வீட்டுக்குப் போசனஞ் செய்யுமாறு வருதி என்றுள். இங்ஙனங் கூறிய தம்மினிய தாயாருடைய வசனத்தைச் கேட்டு, அவர் வீடு சார்ந்து சிவபிரானைத் தியானித்துக்கொண்டு சிவநிவேதனத்தை அயின்றுர் அக்காலந்தொடுத்து எக்காலமுந் திரிகாலமுஞ் சிவபூசை சய்து, சிவஸ்தோத்திரஞ் செய்து இன்ப

த்தோடு வசித்தார். அப்போது அவர் பிதாவாகிய வாசுதேவர் தமது புதல்வருடைய அருள்வாக்கின் வன்மையை வியந்து, அவரை நோக்கி யான் அறியாமையினுலே செய்தவைகளை க்ஷமிக்குதிர் என்றார்.



**ஹரிதத்தரின் தந்தை முதலினோர் அவரிடம் உபதேசம் பெற்றுக் கொண்டது**

தபத முத்திரைகளாகிய சங்கு சக்கரங்களை யுடையரும், ஊர்த்துவ புண்டரமுடைய ருமாகிய வைஷ்ணவர்கள், அவரை நோக்கி காருண்ணிய மூர்த்தியே எங்களுக்குப் பிரயாச்சித்தம் என்னை, எங்களுக்குப் பரலோககதி எங்ஙனமாகும்? என்று வேண்டி னுர்கள். அதற்குப் பாலர் ஸ்மிருதிகளும் பெரியோர்களுஞ் சொல்லிய பிரயாச்சித் தமே உங்களுக்காகும் எங்ஙனமெனில், உங்கள் தேகத்தைச் சங்கு சக்கரமுத்திரைக ளினுற் சுட்டமைக்கும் பிராயாச்சித்தம் விபூதி உததூளன திரிபுண்டரமேயாம். எவ்வகைப்பட்ட பாவங்களையும் ஒழித்தற்கும், பிராமணுமுதல் சண்டாளா இறுதி யராம் எல்லோரையும் பாசத்தினின்று முத்தராக்குதற்கும் விபூதியே சிறந்த சாதன மென்று கொண்டு பெரியோர் தரித்தார் என்று திருவாய்மலர்ந்து, சிவபெருமானு டைய செவ்விய ஐந்து முகங்களுள்ளே பாவத்தைப போக்கும் அகோர முகத்தைத் தியானித்து, முன்னே தமது பிதாவுக்கும், பின்னர் வைஷ்ணவப் பிராமணர்களுக்கும் சிவத்துவப் பேற்றிற்கு அறிகுறியாகிய விபூதியிட்டு, திருவருட்பேற்றிற்கு அறிகுறி யாகிய உருத்திராக்ஷமுந்தரித்து, பஞ்சாக்ஷரோபதேசஞ்செய்து, சிவபூசை எழுந்தரு ளச் செய்து, சிவபூசாவிதியும் உபதேசித்தருளினுர். அங்ஙனம் உபதேசிக்கப்பட்ட வைஷ்ணவப் பிராமணர்க்ளெல்லாம் அரத்ததாசாரிய சுவாமிகளால் திரிகாலங்களி லும் உத்தமோததம சிவபுண்ணியமாகிய சிவபூசை செய்யும் பெரும்பாக்கியம் படை த்துக் காலங்கழிப்பாராயினுர்.

# ஹரிஹரதாரதம்மியம்

அரதத்தாசாரியார் பால்பருகிவரும் பாலியாவஸ்தையிலேதானே சிவபெருமானிடத்திலே திருவருட்பிரசாதம் பெற்றமையும், பிறரொருவரிடத்திலே போய் வித்தை கல்லாது சிவப்பிரசாதத்தினலே சகல வேதசாஸ்திரங்களை உணர்ந்தமையையும் சிவலிங்க பூபதி என்னும் அரசன் கேள்வியுற்ருன். கேட்டபோதே சிவபக்தனும், சிவபெருமானுடைய திருவடித்தாமரையேயன்றி மற்றென்றனையும் மறந்து நினையாதவனுமாகிய அவ்வரசன் விம்மிதமடைந்து, அரதத்தாசாரிய சுவாமிகளை அடைந்து, அவரது திருவடித்தாமரைகளைத் தமது சிரசினுற்ருங்கி, எனது நாதரே! மதுராபுரிநாயகராகிய சுந்தரேசப்பெருமான் பாண்டி நாதனுகிய என்னைக் காக்கும்பொருட்டு இந்த வடிவத்தோடி ஈண்டு எழுந்தருளினரோ என்று சொல்லித் துதித்தான் அப்போது அங்குநின்ற வித்துவப் பிராமணர்கள் அரசனை நோக்கி, அரசனே! நீவிர் சொல்லியது ஒக்கும் அங்ஙனமில்லையாயின், வேதாதிகளையெல்லாம் ஓதாதுணர்ந்து எல்லோரையும வாதிலே செயிக்க, அரதத்தாராரிய சுவாமிகளுக்கு வன்மை எங்ஙனம் உண்டாகும் எனஙுர்கள அந்த வித்வான்கள் இங்ஙனம் சொல்லியபோது, "நேத்ரகமலத்தினலே சிவபெருமானை முன்னரே பூசித்த மகாவிஷ்ணுவே லோகத்தைக் காக்கும் பொருட்டும், சிவபக்தியை விளக்கும் பொருட்டும், வைதிக நெறியை நிறுத்தும்பொருட்டும் பின்னரும் பிராமணகுலத்திலே அரதத்தர் என்னும் நாமத்தோடு திருவவதாரஞ் செய்தார்" என்று சிவபெருமானுடைய திருவருளினலே அசரீரிவாக்கு அங்கு எழுந்தது. சனங்கள் அந்த வார்த்தையைக் கேட்டு ஆச்சரியமும் மகிழ்ச்சியு மெய்தி வேதசொரூபியாகிய அவருடைய பாதயுகளங்களிலே வணங்கினர்கள். அந்நகரத்துப் பிராமணர்களும் அவரைத் தன்னியரென்று வணங்கினர்கள். அதன்பினனர் அரசனும் அவரைச் சிவபிரானே என மதித்து வணங்கி மண் பொன் வஸ்திரம் என்பவற்றை உபகரித்து, சுவாமீ! உம்மையன்றி எனக்கு மற்ருேர் தெய்வமில்லை; ஆதலில், அடியேன் மீது நாதராகிய நீவிர் திருவருள் பாலித்தருளல் வேண்டுமென்று பிரார்த்தித்தான். அப்போது ஆசாரிய சுவாமிகள்' அவனை நோக்கி," அரசரே! உம்மை, ஒத்தார் திரிபுவனங்களிலும் இல்லை. நீவிர் சிவகிருபையை எய்தப் பெற்றீராதலில், சைவராதற்குரிய அருள் பூண்டீராயினீர் என்று திருவாய்மலாந்து, அவருக்கு ஸ்ரீபஞ்சாக்ஷரோபதேசஞ் செய்து, ஸ்படிகலிங்கபூசை யெழுந்தருளச் செய்து கொடுத்தார். அரசர் அதுகண்டு மகிழந்து அவருடைய திருவடிகளிலே சுவர்ண புஷ்பங்களை வேண்டிய மட்டும் இறைத்தார். சிவபெருமான் குபேரனேடு சினேகம் பெற்றுற்போல், ஆசாரியசுவாமிகளும் சிவலிங்க பூபதி எனனும் அரசனேடு சிநேகமுற்றிருந்தார். ஆசாரியர் அரசனுக்கு நெற்றியிலே விபூதி தரித்து, அரசரே! நீர் சிவபூசை செய்து, சிவகைங்கரியஞ் செய்து கொண்டிருக்குதிரென்று ஆஞ்ஞை செய்தருளினர். அரசனும் அதற்கியைந்து அன்பினேடு அவரைப் பிரதக்ஷிணஞ் செய்து நமஸ்கரித்து அநுமதி பெற்றுக்கொண்டு தனது சேனையோடு அரண்மனை சார்ந்தான்.

வெள்ளிய பல்லும், வெள்ளிய கோவணமும், வெள்ளிய பூணூலுமுடைராய், தண்டகமண்டலம் - கிருஷ்ணுசனம் - மௌஞ்சிமாலை - உருத்திராக்ஷம் - தர்ப்பை - பவித்திரம் என்பவைகளைத் தரித்து, அரதத்தாசாரியசுவாமிகள் பிரதமாச்சிரமமாகிய பிரமசரியத்தை அநுஷ்டிப்பாராயினர். காலை மாலைகளிலே சமிதாதானஞ் செய்வார். தமது லோக குருவாகிய தக்ஷிணுமூர்த்தி சந்நிதானத்திலே எப்பொழுதும் எழுந்தரு

தெரியவில்லையே. இவன் சந்தேகமில்லாமல் மூடனென்று நினைந்து சில இரசசியம் இன்னும் கண்டு காலாந்தரத்திலே சொல்லுகின்றேன் என்றார். இது நோக்கிக் காலம் பாத்துக்கொண்டிருந்தான், இப்படி வெகு காலமாய் பின்னர், ஒர்நாள் சீஷன்போசனத் தின் பொருட்டு வெளியே போயிருப்ப, யதீசுரருக்குத் தேகவியோக காலம் கிட்டி விட, சீஷனுக்கு யாதோ சொல்லவேண்டியிருந்த தென்பதை அவர் யோசித்து ஸ்ரீபஞ்சாக்ஷரத்தினும் மேலாய் அறியற்பாலது மற்றொன்றில்லை என்று நிலத்தில் எழுதிச் சரீரத்தியாகம் பண்ணினார். அதனை அருகில் நின்ற ஒரு கழைக்கூத்தியான தாசி கண்டு ஓலையில் எழுதிக் காதோலையா யிட்டுக் கொண்டு மணலெழுத்தைக் கையாலழித்து வீடுசார்ந்தாள். சீஷன வந்து பார்த்து, தனது ஆசாரியார் இறந்துகிடத் தலைக் கண்டு துக்கததோடிருப்ப, அங்கிருந்தவர்கள் உமது ஆசாரியர் எழுதிவைத்த இரகசியத்தை ஒர் தொம்பச்சி எழுதிக்கொண்டு போய்விட்டாள் என்று சொல்ல, சீஷன் அவள் வீடு தேடிப் போய், அவளைப் பலவகையாலும் உபசரித்து காதோலையை தால் வேண்டும் என்று கேட்டான், நீ என்னோடிருந்து சாப்பிட்டு என்னோடு கூட உண்பையாயின், நான் காதோலையைத் தருவேன் என்றாள்; அதற்கு அவன் உடன்பட்டு, அவளுக்கு வேண்டிய தொழில்களை யெல்லாஞ் செய்து, அவளைப் பிரீதி செய்து காதோலையை வாங்கிக்கொண்டான் அவன் தன் குரு எழுதிய பத்திரிகையைப் பார்தது, அதிலே எழுதப்பட்ட அக்ஷரங்களைக் கண்டு மகிழந்து, பின்னரும் அவளை இதுகாறுங் கூடியிருந்த தோஷமற யாது பிராயசித்தமாமோ என்று நினைந்து தைப்பூசத்திலே திருவிடைமருதூருக்குப் போய்ச் சுவாமி தரிசனஞ் செய்து, மத்தியார்ச்சுனரோடு காவேரிக்குப்போய் ஸ்நானஞ் செய்து, மகாலிங்க மூர்த்தி தரிசனஞ் செய்து கொண்டு போகும் போது, அரதத்தாசாரியர் கிரகத்துக்கு வந்து அவரை நோக்கி, சுவாமி! எனக்கு அன்னங் கொடுத்தருளல் வேண்டுமென்று பிரார்த்திப்ப, ஆசாரியர் அவரைத தமது ஒரே பந்தியிலிருத்திப் போசனங் கொடுத் தார். போசன முடிந்தபின் அவர் வெளியிலேவர, அதைக்கண்டு கிராமத்தார் இவன் தொம்பாசி சகவாசம் பண்ணினவனென்று அரத்ததாரரியருக்குப் பிரஸ்தாபிததார்கள். பின்னர் அவர்கள் திரியம்பகரை நோக்கி நீ எந்தப்பந்தியிலிருந்து சாப்பிட்டாயெனறு வினவ, அவர் உள்ளவாறு சொல்ல, அதைக் கேட்டு அவர்கள் அசாரியரிடத்திலே போய், மகாபாதகனுகிய இவனோடு நீ சாப்பிட்டது நிந்தையாமன்றோ என்றார்கள்; அப்போது அவர் அவர்களை நோக்கி, தைப்பூசத்திலே மகா காவேரியிலே ஸ்நானம் பண்ணி மகாலிங்கமூர்த்தி தரிசனம் பண்ணியிருக்கின்றார்; ஆதலினால் அவர் மகாபா தகங்களினின்று நீங்கினார் என்றார். கோடி சென்மங்களிலே செய்த பாவம் சிவதரிசன த்தினாலே அக்கினியிலிட்ட பஞ்சு போல நசித்துப்போம் என்றார். இந்த வாக்கிய த்தைக் கேட்டு அவர்கள் பின்னுஞ் சொல்வாராயினர். அவளோ தாசி, அகோசாத்தி ரம் அவன் அவளோடு இருந்தமையால், அவையெல்லாம் கேவலம் காவேரி ஸ்நான த்தால எவ்வாறு நீங்கும் என்றார்கள். உடனே அரதத்தாராரியர் அந்தப்பிராமணரைத் திரியம்பகரே என்றழைத்து, நீர் இவர்களோடு திருவிடைமருதூருக்குச் சென்று, நான் புஷ்யநக்ஷத்திரத்திலே காவேரியில் ஸ்நானஞ் செய்து உம்மைத் தரிசனம் பண்ணி னமையால் என் பாவம் போய்விட்டதோ, சுவாமீ! சொல்லும் என்று கேளும் என்றார். இங்ஙனம் அரத்ததாசாரியர் அறிவுறுத்தக்கேட்ட திரியமபகர் அப்பிராமணர்களோடு திருவிடைமருதூருக்குப் போயிருந்த சமயத்திலே, ஆலயம் சிவனடியாரால் நிறைந்

திருந்தது திரியம்பகர் சுவாமியைப் பார்த்து, தேவாதி தேவரே தயாசமுத்திரரே, புஷ்யநக்ஷத்திரத்திலே காவேரி ஸ்நானத்தினுலும், உமது தரிசனத்தினுலும் அவ்வே சியோடு யான் சங்கமஞ் செய்துண்டு வாழ்ந்த தோஷம் போய்விட்டதா சொல்லும் என்று பிரார்த்தித்தார் அது கேட்ட பக்தரக்ஷகராகிய மருதப்பெருமான் அவரை நோக்கி, ஏ குழந்தாய்! நீ செய்த அந்தபாவம் தீர்ந்து போய்விட்டது என்றுர். சரணு சதரக்ஷசராகிய சிவபெருமானுடைய வாக்கியத்தை அவர்கள் கேட்டு இது எதிரொலி வாக்கியமேயன்றி, ஈசுவரனுடைய வாக்கியமன்று என்று மறுத்தார்கள். இதைக் கேட்டு திரியமபகர் கண்ணீர் வார அழுது, மீட்டும் ஆசாரியரிடம் வந்து இவர்கள் அதனை ஒப்புக்கொண்டிலா என்று விண்ணப்பஞ் செய்தார். அப்போது அரதத்தாசாரி யர் அவரோடு தாமுங்கூட ஆலயத்துக்குப் புறப்பட்டுப் போய், அந்தச சபையிலே சுவாமியைப் பார்த்து பின்னுங் கேளும் என்றுர். அவரும் அப்படியே முன்போல் வணங்கி வேண்டினுர். சுவாமியும் மகா மேக கோஷம் போல, மகாலிங்க தரிசனத்தினுலும், காவேரி ஸ்நானத்தினுலும் உன்பாவம் போயது போயது என அசரீரிவாக்கினுல் அருளினுர் உடனே எல்லாரும் ஆச்சரியப்பட்டு அரதத்தாசாரி யரைப் புகழ்ந்தார்கள். இது நிற்க,

அரதத்தாராரியருடைய சகோதரியாருக்கு ஓர் முடப்புதலவர் அவதரித்திருந் தார். இவர் ஓர் நாள் தமது மாமனுருடைய பாதங்களிலே வீழந்து வணங்கி, சுவாமி உமது அருளினுலே காசி மகாக்ஷேத்திரத்து மணிகர்ணிகையிலே ஸ்நானஞ் செய்ய விரும்புகின்றேன் என்று ஆசையோடு வேண்ட, ஆசாரியர் கிராமத்திலேயுள்ள சரசிலே ஸ்நானஞ் செய்யுமாறு ஆஞ்ஞாபித்தார் மேன்மை தங்கிய புத்தியையுடைய இவர் உடனே அதில் ஸானஞ்செய்ய, அவர் மணிகர்ணிகையிலே தோன்றி, பின்னர் கங்காஸ்நானஞ் செய்து, விசுவேசுரர் தரிசனஞ் செய்து கொண்டிருந்தார். இங்ஙனம் சிலவருஷம் கழித்தபின், ஒர் நாள் விசுவேசுரர் ஆலயத்துக்குச சமீபத்திலே ஒருவர் தமது பாரியாரோடு சொக்கட்டான் ஆடிக்கொண்டிருந்தார். அப்போது அவர் இவரை நோக்கி, ஒ பிராமணேத்தமரே! நுண்ணறிவுடையவரே' நுமது கிராமத்திலே காசிபகோத்திரரும், நல்லோரும், வைதிகருமாகிய அரதத்தர் எனபவர் ஒருவர் இருக்கின்றுரா? என்று கேட்டார். அதற்கு அவர் நான் வசிக்கும் கஞ்சாபுரத்திலே அரதத்தர் எனப் பெயரிய என் மாதுலர் வசிக்கின்றுர். அவர் சைவேந்திரா க்ஷேமத்தோடிருக்கின்றுர் என்றுர். அப்போது அவர் இவரது வார்த்தையைக்கேட்டு சந்தோஷமுற்று, காசியிலே ஒருவர் அவரது க்ஷேமம் விசாரித்தார் என்று சொல்லுதிர் என்றுர்; அவரோடு அங்கிருந்த பாரியும் புன்முறுவலோடு நானும் விசாரித்தேன் என்று சொல்லுதிர் என்றுர். அதைக்கேட்ட மருகனுர் நான் நீங்கள் இருவருங்கேட்ட வசனம் சொல்வேனென்று சொல்லி, நான் இனி எப்படி அங்கே போகும் வன்மையுடையவனுவேன் என்றுர். அதற்கு அவர் நீர் எப்படி இங்கு வந்தீரெ ன்று கேட்க, அவர் என் கிராமத்திலே பிரமதீர்த்தம் என்று ஒன்றுளது அதிலே ஸ்நானஞ் செய்யுமாறு என் மாமனுர் ஆஞ்ஞாபிக்க, அப்படியே ஸ்நானஞ்செய்து இங்கே மணிகர்ணிகையிலே வந்து தோனறினேன. இனி அவ்வாறுபோகச் சக்தியு டையேனல்லேன் என்றுர். அதைக்கேட்ட பெரியவர் நீர் இப்பொழுதும் போய் மணிகர் ணிகையிலே ஸ்நானம் செய்யும் என்றுர். அவர் அவ்வாறு மணிகர்ணிகையிலே ஸ்நானஞ்செய்து, உடனே பிரமதீர்த்தத்திலே தோன்றி, மகிழச்சியோடும் மாமனுரை

அடைந்து வணங்கி, சுவாமீ! உமது கிருபையினுல் கங்காஸ்நானஞ் செய்து போந்தேன் என, ஆசாரியர் அவரை நோக்கி, காசியிலே யாராயினும் என்ஊ அறிந்தார் உளரோ? என்று கேட்ப, அதற்கு மருகஞர் ஆம் காசியிலே விடரூபத்தோடு சொக்கட்டான ஆடிக்கொண்டிருந்த தம்பதிகள் தங்கள் க்ஷேமத்தை விசாரித்தார்கள் என்ருர் அதைக் கேட்ட அரதத்ததர் அவர்கள் கேட்டார்களா! கேட்டார்களா!! என்று சொல்லிக் கண்ணீர்வார ஆனந்தபரவசராய் நிருத்தனஞ்செய்தார். இதைக் கேட்ட கிராமத்தாரெல்லாம் வந்து ஒருங்கு கூடிச் சிவாஞ்ஞையினுலே மணிகர்ணிகை யிலே ஸ்நானஞ் செய்து, பிரமதீர்தத்ததிலேவாது தோன்றினமையால், இத்தீர்த்தத்து க்கும் மணிகர்ணிகை என்று பெயர் வழங்குக என்றும், இதிலே ஸ்நானஞ்செய்தவர் களுடைய பாவமெல்லாம் ஒழியும் என்றும் ஓர் அசரீரிவாக்கு எழுந்தது. அரதத்தாசா ரியர் முதலிய யாவரும் அற்புதமாகிய இவ்வசரீரி வாக்கைக் கேட்டு, இது அடியார்கள் பொருட்டுச் செய்யப்பட்ட சிவலீஊ என்று அறிந்து கொண்டார்கள். அரதத்தாசாரியரிடத்திலிருந்து அவர் மருகஞர் யாவும் அறிந்து சர்வஞ்ஞராயினர். இவர் தமது மாமஞர் செய்த சுருதி சூக்தி மாஊக்கு வியாக்கியானஞ் செய்து மிகக்கீர்த்தி படைத்தார். சனங்கள் இவருடைய பக்தி விஷயத்தை நோக்கி இவருக் கும் அரதத்ததர் என்று பெயர் கொடுத்தார்கள்.

அக்கஞ்சாபுரத்திற் சிவப்பிரியரென்னு மொரு மறையவ ரருமையாகப்பெற்ற சுமதி, தருமபாலன் என்னும் இரண்டு சிறுவர்களும் ஒரே தினத்தில் வாந்திபேதியா லும் பாம்புகடியாலும் இறந்தமையாலவர் மிகவுந் துக்கித்து இறந்த இருமக்களுடல ங்கஊயும் தகனஞ்செய்ய இட்டமில்லாதவராக அழுது கொண்டிருந்தனர். இதஊ யுணர்ந்து அரதத்ததர் அவ்விடத்திற் கெழுந்தருளி பிரேதங்கஊ வைத்திருப்பது சரியல்லவென்றுரைத்துப் புத்திரசோகத்தாலவர் அவ்வண்ணஞ் செய்யாமையால், மந்திரவிபூதியை அவ்விறந்த இருவருடலின் மீது மிட்டனர்; உடனே அவர்கள உயிர் பெற்றெழுந்து அஞ்சலியஸ்தராக நின்று, சுவாமீ! நாங்கள் முற்பிறப்பில் இச்சிவப்பிரி யருக்கு அடிமைகளான நந்தனும் வீரனுமாக விருந்தேம், இவரெங்களுக்குச் சரியான கூலிகொடாமையினு லிவர் மக்களாகப் பிறந்தேம் , கடனெழிந்தமையாலுடலிழந் தேம்; உம்மாலிடப்பட்ட மந்திர விபூதியினுல் உயிர்பெற்றெழுந்தேமென்று அநேக விடயங்கஊக் கூறினுர்கள். அப்பொழுது சிவகணங்கள் விமானத்துடனுகாயத்திற் றேன்றி அரதத்தருடைய விபூதிப்பேற்றினுல் உங்களுக்குச சிவலோகங் கிடைத்தது என்றனருடனே அவ்விருவரும் அவ்வுடலங்கஊ விட்டு தேவ உருவமெய்திச் சிவலோகமடைந்தார்கள். இந்த ஆச்சரியத்தைக் கண்டவர்களுங் கேட்டவர்களு மானந்த மடைந்தார்கள்.

இப்படி இருக்குங்காலத்தில் ஓர் நாள் திருடன் ஒருவன் இராசாவின் கிரகத் திலே திருடிக்கொண்டு புறப்பட்டுப்போக காவற்காரர்கள் அவனைத் தொடர்ந்து வர, அதுகண்ட கள்வன் ஓடிவந்து அரதத்தாசாரியரை நமஸ்கரித்து, சுவாமீ! காவற் காரர்கள் தொடர்ந்து வருகின்ருர்கள்; என்ஊக்கண்டால் கொன்று போடுவார்கள்; காத்துக்கொள்ளல் வேண்டுமென்று வேண்ட, உடனே அவர் அந்தத்திருடனுக்கு விபூதிதாரணஞ்செய்து யஞ்ஞோபவீததாரணஞ் செய்து, தாலபாத்திரத்திலே போச னங் கொடுத்து உண்பித்தார். உண்டுக்கொண்டிருக்கும்போது, முன்னே ஓடிவந்த

கள்வன் எங்கே என்று காவற்காரர்கள் அரதத்தாசாரியரைக் கேட்டார்கள். அதற்கு அவர் நமது பிள்ளை உள்ளே உண்டு கொண்டிருக்கின்றுன், ஐயமுளதேல் உள்ளே பிரவேசித்துப் பார்த்துக்கொள்க என்றுர். அவர்கள் எங்குஞ் சுற்றிப் பார்த்தும் மற்றெரு வரையுங் காணுது தம்வழியே போய் விட்டார்கள்.



**ஹரிதத்தர் இறந்த பிராமணவணயெழுப்பி சிவலோகத்திற்கனுப்பியது**

அரதத்தாசாரியர் சர்வகர்த்தாவாகிய சிவபெருமானையே பூரணபாவனு தியானஞ் செய்து கொண்டிருந்தார். அப்போது சிவபெருமான் அவருக்குச் சாயுச்சி யங்கொடுக்கவேண்டி, தாம் பிருங்கி நந்தி மகாகாளர் பிரமா விஷ்ணு முதலாயினே ரோடு வாத்திய கோஷங்கள் முழங்க, அட்டதிக்குகளெல்லாம் அளவிலாப் பிரகாசம் விளங்க, சடையிலே அமைந்த கங்கைப்பிரவாகத்திலே சந்திரன் விளங்க, காதிலே சர்ப்பங்கள் இரத்தின குண்டலங்களாய் விளங்க, தமது மடித்தலத்திலே உமாதேவி யார் அமர, கபோலங்கனிலே தமது குண்டலங்கள் பிரதிவிம்பிப்ப, பவளக்கொடியின் மத்தியில் விளங்கும் முத்துக்கள் போல உதடுகளின் மத்தியிலே தந்த வரிசைகள் பிரகாசிப்ப, மந்தரசத்தினுலே முகம் சோபிக்க, மான் மழு வாதம் அபயம் விளங்க, உருத்திராக்ஷ மாலாதாரணராய் இடபாருடராய் இடபத்தின் பிடரியிலே சர்ப்பகங்கள் அணிந்த முகம் அமைய, உருகும் நெய்க்கட்டிபோல சச்சிதானந்த சொருபமாகிய சிவபிரான் அர்தத்தாசாரியருக்குச் சாய்ச்சியம் கொடுக்கவெண்ணி குருவடிவத்தோடு எழுந்தருளினுர். இவ்வாறு தமக்கு முன் எழுந்தருளி மோக்ஷங் கொடுக்க விருமபும் சுவாமியை ஆசாரியர் நோக்கி, அவரை ஆராமையினுலே மீட்டும் நமஸ்கரித்துத் தோத்திரம் பண்ணினுர். பண்ணவே, ஆசாரியர்மீது சிவபிரான் பிரீதி செய்து, ஏ அரதத்த பக்தசிரோமணியே! உனது திரிகால பூசை செபம் ஸ்தோத்திரம் தியானம் என்பனவற்றுல் நம்மை வழிபட்டனை; உனக்கு வேண்டிய வரத்தைக் கேள் என்றுர். அதற்கு ஆசாரியர் உமாசமேதராகிய கைலாசபதியை நோக்கி, சுவாமீ! நீர் இப்போது அடியேனுக்குப் பிரசனனராய் வரங்கொடுப்பது மெய்யேயானுல், எனக்கு இருபுறத்து

முள்ள பதினன்கு வீட்டுக்காரரையும் மீண்டு வாரா நெறியாகிய முத்தியிலே சேர்த்தருளும் லோகநாதரே! உமக்கு நமஸ்காரம் என்றர். இங்ஙனம் பிரார்த்திக்கச் சிவபிரான் அங்ஙனமாகுக என்று அங்கீகாரஞ்செய்ய, ஆயிரங்கிண்கிணி சாலங்களாலும் நவரத்தினக் கால்களாலும் அலங்கரிக்கப்பட்ட கோடிசூரியப் பிரகாசமாகிய விமானமொன்று வந்திறங்கிற்று. அதிலே பதின்மூன்று வீட்டுக்காரரும் அவர்கள பந்துக்களும் சிநேகிதர்களும் வந்தேறினர்கள். சுவாமி அரதத்தரை நோக்கி, பதின்மூன்று வீட்டுக்காரர்கள் வந்து ஏறினர்கள். மற்றேர் வீட்டுக்காரர் எங்கே என்று சிவபிரான் அரதத்தாசாரியரை வினவ, அவர் பதினன்காம் வீட்டுக்காரி ஓர் கிழவி, அவள் சரீரமெலலாம திரைந்து வெளுத்து நடுங்கப்பெற்றவள், நெடுங்காலத்தாள்; ஒவ்வோர் நாளும் விக்கினேசுரருக்கு மோதகம் நிவேதிப்பவள் என்று கூறி, அவளை அழைத்து வருமாறு ஒருவரை அனுப்ப, அக்கிழவி அழைக்கவந்தவரை நோக்கி, நான் விநாயகக்கடவுள் பொருட்டு அடுப்பிலே மோதகம் பாகமாமாறு வைத்தேன், அது நிவேதிக்கப்பட்டபின் வருவேன், போகின்றவர்கள் கைலைக்கு முந்திப் போகலாம். நான் விக்கினேசுவரருக்கு நிவேதனம் பண்ணிவிட்டுப் பின்பு வருகின்றேன் என்று சொல்லியனுப்பினள். அவர் அவள் வார்ததையை ஆசாரியருக்குச் சொல்ல, அவர் நாங்கள் இப்போது பிரஸ்தானமாவேம், அக்கிழவி விக்கினேசுவரருக்குப் பூசை செய்து சொண்டு வருகின்றளாம் என்றர். அப்போது சுவாமி புன்சிரிப்படைந்து பக்கத்லிருந்த கணபதியை நோக்கி, அக் கிழவியுடைய பூசையை அங்கீகரித்துக்கொண்டு அவளை கைலைக்கு இட்டுக்கொண்டு வருக என்று அவரை ஆலயத்தின் புறத்திலே இருக்கசசெய்தார். அரதத்தாசரியர் விமானத்தில் ஏறும் பொழுது, அவருடைய வைவசுதான்னம் நாடோறும் புசித்துவந்த ஒரு சுவானமானது இரக்கத்தினலே அழ, அதனையும் எடுத்து இரதத்தின் மேலேற்றி வைத்துத்தாமும் ஏறினர். சிவபிரான் அரதத்தாசாரியர் முதலிய பக்தர்களோடு கைலையை யடைந்தாா. இதற்குள்ளே மோதகம் பாகஞ்செய்து முடித்து, அவற்றை மற்றைய உபகரணங்களோடு கொண்டு போந்து, சர்வகாசமாக விநாயகருக்குப் பூசைசெய்து முடிப்ப, அவ்விநாயகர் அவளை நோக்கி உனது பூசைகொண்டு பிரீதியுற்றேம். உனக்கு வேண்டிய வரத்தைக் கேளென்ன, அவள் லோகோபகாரமாக ஓர் வார்ததைக் கேட்கின்றள், சுவாமீ! இப்படிப்பட்ட ஓர் கிழவி பூசித்து வந்தாளென்ற புகழ் நிலைக்குமாறு நீர் இவ்விடத்திலே சாந்நித்தியராயிருந்து, உமக்கு மோதக முதலியன வைத்து நிவேதித்து உம்மைப் பிரதக்ஷிண நமஸ்காரஞ் செய்கின்றவர்களுக்குக் கைலாயத்தைக் கொடுத்தருளல் வேண்டு மென்று உரைத்து, தனக்குக் கைலாய பிராப்தியைத் தந்தருளல் வேண்டு மென்று பிர்ர்த்தித்தாள். அதற்கிசைந்து விநாபகர் அவள் கைலாசத்தை அடையத்தக்க சக்தியைக் கொடுத்து அவர் ஆங்கே எழுந்தருளி யிருந்தார். இரதத்தின் மீதிவர்ந்து போந்தவர்கள் பாதித்தூரஞ் செல்லற்கு முன்னரே இவள் அவர்களைக் கண்டு சேர்ந்தாள். அங்குளளோா நீ இவ்வளவு வேகமாய் வந்தாயோ என்று கேட்ப, அவள் "குதிரையுங் காதம்கிவியும் காதம்" என்பது அறியீர்களோ என்றள். அந்த வாத்தையைக் கேட்டுக்கொண்டு அவர்கள் எல்லோரும் அழியாததும், பழிப்பற்றதும், ஆனந்தமே உருவமானதும் , ஞானிகளுள்ளமபோல வெண்ணிறம் பொருந்தியதும், பாவிகளா லடையக்கூடாததும; அருவியை ஒலியாலும், ஐராவதத்தை மதநீராலும், சந்திரனைக் களங்கத்தாலும், அன்னத்தை நடையாலும் அறிய வேண்டிய வெண்மையையுடையதும், பகலு மிரவு மற்றதும், பரமேசுவரனையே ஒத்ததுமான ஸ்ரீ

கைலாசத்தை அடைந்தார்கள். பதினுன்கு வீட்டுக்காரரும் சந்திரகலா சூடராகிய சம்புவுடைய சாரூபத்தைப் பெற்றார்கள்.

## சரித்திரம் முற்றிற்று.

**ஸ்ரீ அரதத்தாசாரியரடிமலர்வாழ்க**

---





**ஹரிதத்தர் சிவலோகத்திற்கெழுந்தருளியது.**

# பாயிரம்

## விநாயகர்

சீர்பூதத் திருமறு மார்புடையவனே பரமெனனச் செருககுற்றோர்கள்
கார்பூதத் சிந்தையிடி விழுமாறு கண்ணன கொளகரிய பொல்லா
நீர்பூதத் விழியினமஃலபடாபென்னுமுருவமதை நீக்கியாண்ட
வேர்பூதத் வைங்கரத்துப் பெம்மான் தடிமலரை யிறைஞ்சி வாழ்வாம்.

## பசுபதி

என்றஃலகளமுதலபலவிலங்குமெழிலுறப்புடனேயேயநதநினனை
ஒன்றியுணர்ந்தேத்தாமலுறபொல்லார்கெடுகவெனவுயாமால்கூறி
நின்றுபணிந்திடுகஞ்சபுரமதனிலமரெணடோளநிமலனசெய்ய
பொன்றிகழுமடிமலரைமுடிமலராவெநநாளும்பொருத்திவாழ்வாம்.

## அம்பிகை

எழிலுறுவைகுநதமதிலேயந்தவனேபரமெனனவிசைப்பேராசிநதை
வழியிலுறுமகநதையுடனவாழ்நாளுமகனறெழியவலியபொல்லா
மொழியதனுலரிமகஊயிறக்குமாறுரைசெய்தமுகினமெனகூந்தற்
பழிதபுநல்லுமையவடனவனசமலரடியிஊணயைபணிந்துவாழ்வாம்.

## குமாரசுவாமி

எந்தமரியேபரமென்றிசைக்குமவாமொழிப்பொருளகளில்லாதோடச்
சந்தமுறுமரிகன்றனறஃலநான்குநனிகுலுங்கத்தட்டிக்குட்டிக்
கந்தகிரியுவளகத்திறகாவலுடனேவைத்துக்கடனீர்வைப்பி
லெந்தவுயிரும்படைத்தவிஊயபெருந்தகையடியையிறைஞ்சிவாழ்வாம்.

## ஸ்ரீஞானசம்பந்த சுவாமிகள்

ஆழிதரித்தறுசெங்கையண்ணலயனமுதலானோரங்கைகூப்பி
யேழிசையின்றவப்பயனே யெழிலுறுமாமறைப் பொருளே யெந்தன்சிந்தை
வாழுறுநல்லிறையவனேயெனவென்பைமடமாதாவகுத்துதந்த
காழியாகோனடிமலரையகத்துன்னிப்பவத்துன்பங்கழித்துவாழ்வாம்.

## ஸ்ரீ திருநாவுக்கரசு சுவாமிகள்

கரியநிறத்திருமாலுந்தேவாகோனுங்காணாத்திருவுருவிற்கண்மூன்றுற்ற,
பெரியவனைவிடமுண்டன்றன்னைப்பேணுதார்கொடியரெனப்பேசும்வாய்மை,
உரியமறைப்பொருளனைத்துந்தமிழிலாக்கி யுறுவாசிகாமணியாகியுற்றுநின்ற,
வரியதிருவாகீசவடிகள்செய்யவடிமலரைமுடிமலராவமைத்துவாழ்வாம்.

## ஸ்ரீ சுந்த்ர்ரமூர்த்தி சுவாமிகள்

தேனுறுங்குல்லைமுடிநல்லோன்றன்னைத்தினநாடுமடியவாகளசிந்தையையந்,
தானுறவிழிமலர் ற்பூசையாற்றத்தனியாழியவறகிநத்தகைவன்றன்னை,
ஊனுறியொளிர்வடிவேனமுருகையீனறவுத்தமனைப்பத்தியுடனுவந்துபாடி,
வானுறுபுகழ்படைத்தசுந்தரேசவளளலடியிணைமலரைவழுந்திவாழ்வாம்.

## ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள்

பந்தமுறுமானசொற்றபொல்லாக்கொள்கைப் படிற்றொழுக்கப் புத்தரினம்பாறியோட,
நிந்தையறுமறையிலுரைபொருளாமெங்கள்நிமலனு ருவித வென்னநின்றுகாட்டி,
அந்தமிலதீர்மானமதத்தையழித்த வெங்களணணலதிருவாதவூரடிகள் செய்ய,
சந்தமலரடியணையனமலாகடுவித்தாழ்ந்திரைஞ்சியாழந்தபிறப்பகற்றிவாழ்வாம்.

## அரதத்தாசாரிய சுவாமிகள்

ஏறுகிப்பூண்ணீயாமெனபாகியனபாகியெழிலகொணமேனி
நீறுகிப்பூந்தொடையாநிலையாகிக்கலையாகிநிமலனபாலோர்
கூறுகிப்பவளவிதழ்க்கொம்பாகியம்பாகிக்குலவியீசன்
பேறுகியுறத்தவஞ்செயசக கரமாலடிமலரைப்பேணி வாழ்வாம்.

## ஆசாரியர்

பந்தவியலொடுமுத்தியியலீதென்னப் பகர்ந்தருளிச்சிவானந்தப் பரவைமூழ்கி,
நந்திலிலாதிருக்குமுயாமநுவுமீந்துநாயேன்றனுடலாதி மூன்றுங்கொண்டு,
நிந்தையறுமுறுவாசிகாமணிகளபோற்றநின்றசிவஞானியெனநிகிலங்கூறு,
மெந்தைதிருவடிமலர்கடமமையென்றுமேததியெழினமலர்தூவியிறைஞ்சிவாழ்வாம்.

## அவையடக்கம்

மந்தியும்புகுந்தாரவறிகலா
துந்துகோட்டிலுறுங்கனியுண்குவான்
சிந்துநீட்டுஞ்செழுங்கரமேயென
வெந்தையார்புகழ்யான்சொல்வேய்ந்ததே.

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம் .
**சிவாய நம:**

# ॥ हरिहरतारतम्यम् ॥

॥ ஹஸிஹஜதாஜதஜ௵ ॥

# ஹரிஹாதாரதம்மியம்.

**சுலோகம்.**

**एकस्समुद्रसलिले वटपत्र शायी**
**त्वन्यस्समुद्रशरधिस्त्रिपुर प्रभेत्ता ।**
**को वानयोरधिकइत्यनुचिन्त्य वृद्धाः,**
**सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥ १ ॥**

ஷகஸ்ஸமுஜஸலிலெ வடவகு ஶாயீ
க்வநூஸ்ஸமுஜஶரயிஷிவுர வூஹெத்தா ।
கொ வாநயொாயிகஊதூநுவிஷூ வூஜாஃ,
ஸதூம் ஸுவநு தஜிஜம் வயஜாஶுயாஜஃ ॥ க ॥

**ஏகஸ்ஸமுத்³ரஸலிலே வடபத்ர ஶாயீ**
**த்வன்யஸ்ஸமுத்³ரஶரதி⁴ஸ்த்ரிபுர ப்ரபே⁴த்தா ।**
**கோ வானயோரதி⁴கஇத்யனுசிந்த்ய வ்ருத்³தா⁴:**
**ஸத்யம் ப்³ருவந்து தமிமம் வயமாஶ்ரயாம: ॥ 1 ॥**

## மொழிபெயர்ப்பு

**மன்னுங் கடலி னீரினிடை மருவுஞ் சிறிய வாலிஇலமேற்**
**றுன்னுங் கரிய மேகமெனத் துலங்கி யொருவன் றுயிலுற்றுன்**
**பன்னுங் கடஇலத் தூணியெனப் படுத்தே யொருவன் பகையட்டா**
**னென்னு மிவருட் சிறந்தவன்யா ரிசைத்தாற்பெரியீரிறைஞ்சுதுமே.** (1)

## வடமொழி - பதப்பொருள்

| | | |
|---|---|---|
| **ஏக:** | = | ஒருவன், |
| **ஸமுத்³ரஸலிலே** | = | கடல் நீரில், |
| **வடபத்ர ஶாயீ** | = | ஆலிஇலயிற்கிடக்கிறவன், |
| **அந்ய:து** | = | இன்ஞெருவனுனல் |

| | | |
|---|---|---|
| **ஸமுத்[3]ரஶரதி[4]** | = | அந்தக்கடலை அம்புக்கூடாகவுடையவனும் |
| **த்ரிபுர ப்ரபே[4]த்தா** | = | திரிபுரங்களைப் போதித்தவனுமாகவுள்ளவன் |
| **அநயோ:** | = | இவ்விருவருக்குள் |
| **அதி[4]க** | = | சிறந்தவன் |
| **கோவா** | = | யாவன? |
| **இதி** | = | இதனை |
| **வ்ருத்[3]தா[4]:** | = | பெரியவர்கள் |
| **அநுசிந்தியா** | = | ஆலோசித்து |
| **ஸத்யம்** | = | உண்மையை |
| **ப்[3]ருவந்து** | = | சொல்லலாம் |
| **தமிமம்** | = | அந்த இவனை |
| **வயம்** | = | நாங்கள் |
| **ஆஶ்ரயாம:** | = | ஆஶ்ரயிக்கின்றோம். |

## பொழிப்பு

ஒருவன் கடலின் நீரிலே ஒரு ஆலிலையின் மீது கிடந்தான், இன்னொருவன் அக்கடலையே அம்புக்கூடாக உடையவனும் திரிபுரங்களைப் பேதித்தவனுமாக உள்ளவன்; இவ்விருவருக்குள் (யார் சிறந்தவனென்று கேட்குமெமக்கு) இவர் சிறந்தவரென்று ஞானிகளாகிய நீங்கள் கூறுவீர்களானல், உங்களாற் சொல்லப்படு பவரையே நாங்கள் சரணமாக அடைகின்றேம்

## விதப்பு.

கடலி லாலிலையிற்கிடந்தானென்றது- ஹரியை; எங்ஙனேயென்னின், பிரமப்பிரளயகாலத்தில் உண்டாகிற சமுத்திர நீரினடுவிலோ ராலிலையிற் குழந்தை யுருவமாக ஹரி கிடந்தமையால். இதனை -

"*அண்டபித்திகையினளவுநீரலதறிந்துகூறவொருபொருளிலை*
*கண்டுபுத்திமிகநொந்திளைப்பினிருகணகவற்சியுறுபோதினிற்*
*கொண்டலொத்ததிருமேனியோடொருகுருந்துபச்சையிலைமீதுவந்*
*தண்டிநிற்கவதுகண்டெனக்குமனமாதரத்தின்மகிழ்வானதே*"

என்னும் பாரதம் ஆரணியபருவத்தாலுணர்க.

ஒருவன் அக்கடலை அம்பராத்தூணியாக்கி திரிபுரதகனஞ் செய்தானென்றது - ஹரனை; ஹரன் திரிபுரசங்காரஞ் செய்தகாலத்தில், மேருவாகிய வில்லில் நாரயண ஞகிய அம்பினை வைத்துவிட்டனன். இதனை -

"*மேருமாமலைவலியையோர்வில்லதாததிரட்டி*
*யோருஞ்சேடனைநாரியாபபொறித்துலகளந்த*
*காருலாவுடல்விண்டுவைக்கணைவடிவாக்கி*

*நேருமங்கிமாருதமுனையிறகதாநிறைத்தார்*" எனவும்,

"*வளைத்தவெஞ்சிலைதாங்கினேன்மால்கணைசெலுத்தி*
*இளைத்தநுண்ணிடைபங்கர்பார்ததிளநகைவிளைப்பத*
*திளைத்தழுவெயிற்றீமலிந்தொருகணஞ்செலாமுன்*
*றெளைத்ததீமையோர்மாய்ந்தனசாம்பராயொழிந்தே*"

எனவும் வரும் ஸ்ரீமகாபாரதங் கனனபருவக்கவியாலுணாக.

வ்ருத்தா வென்றது - ஞானவைராக்கியாதி நற்குணமுடையவர்களை. ஒருபொருளினுயர்வையோ தாழ்வையோ கூறவேண்டுமாயின், ஞானமுடையோர் களாலன்றி யேனையோர்களால் ஆகா. அளவையை முன்னே யுணராளேல், பதார்த்த நிச்சயம எவ்வாற்றிவான்? அறியினும் நூலாதரவில்லாதவன்தறிவு முற்றநில்லா. ஆதலாலிவ்விடத்தில் வ்ருத்தாவென்றது - விதவான்களையே இவ்விடத்தளவை யென்றது - அட்டாதச வித்தைகளை. கற்றவர்களே நடுவுநிலைமைக் குரியவர்களே னையரல்லா ஏனெனி லவர்களிடத்து நூலாதாரமின்மையால், இதனை -

"*அரங்கின்றிவட்டாடியற்றேநிரம்பிய*
*நூலின்றிக்கோட்டிகொளல்*" என்றும்,

"*கல்லாதான்சொற்காமுறுதன்முலையிரண்டு*
*மில்லாதான்பெண்காமுற்றற்று*"

என்றும் நாயனர் திருவாய்மலர்ந்தருளி யிருத்தலாலுணர்க.

ஸத்யம்ப்ருவந்து என்றது - தம்மதம் பிறர்மதம் என்னும் தாரதம்மியங்களி னுலும், பொய்யென்றுணர்ந்தாலும் நமது மதமானல் மௌனஞ் சாதித்தாலும், அவ்வாறிருக்கினும் இது தான் சரியானது என்று கூறுதலும் ஆகிய குணங்களைச் சிலரிடத்துக் காண்கின்றோம். அவ்வாறுள்ளவர் ஒருதலையாகவே தீருமானஞ்செய்வ துலகத்திற் சில விஷயங்களிற காண்கின்றோம், அப்படிப்பட்டவர்களையல்ல நாம் வினவுவது என்றதாம்.

“சமஞ்செய்துசீர்தூக்குங்கோல்போலமைந்தொருபாற்
கோடாமைசான்றோர்க்கணி" என்னுந் திருக்குறளின்படி,

தம்மதம் வேறு மதமென்று பாராது உண்மை கூறுமவர்களைச் சுட்டியே யவ்வாறு கூறியது

தமிமம்வயமாசரயாம என்றது - மெய்யறிவுடையோர்களாற் கூறப்படுவது உண்மைப் பொருளாதலால், அவ்வுண்மையின்வழி நிற்பதே தக்கோருககழகு என்பதாம் இதனை

"பொருளல்லவற்றைபபொருளென்றுணரு

மருளானுமாணுப்பிறப்பு" என்னுந் திருக்குறளின்படியென்றுணர்க.

## தாத்பர்யம்.

கடலினடுவிற் றிருமால் கண்ணுறங்கினு . சிவபெருமானவரையே அம்பாகக் கொண்டு திரிபுரசங்காரஞ் செய்தனர் என்பதே.

## தாரதம்மியம்.

ஒருவருக்குள்ள அம்பராத்தூணி அம்பு என்னும் இவைகளைவிட அவைகளையு டையவர் சிறந்தவரென்பது தேற்றம். ஒருவனது செருப்புங் குடையும் அம்புமெல்லா மவனிட்டம்போல் உபயோகிக்கப்படுபவை. அதுபோல திருமாலுஞ் சிவபிரானுல் உபயோகப்படுத்தப்பட்ட ஒருவஸ்துவேதவிர வேறின்மையினுற் சிவபெருமானே சிறந்தவரென்றறியப்படுவதனுல், நாம் தாழ்வுபொருந்திய திருமாலைப் பொருளல்ல வென்று தள்ளி உயர்வு பொருந்திய ஹரனைச் சரணமாக அடைகின்றேம். - என்றவாறு. (1)

**सूनुञ्चकार चतुराननमेव चैकः,**
**सूतञ्चकार चतुराननमेव चान्यः ।**
**को वानयोरधिकः इत्यनुचिन्त्य वृद्धाः,**
**सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥ २ ॥**

**ஸூநுஞ்சகார சதுராநநமேவ சைகஃ,**
**ஸூதஞ்சகார சதுராநநமேவ சாந்யஃ ।**
**கோ வாநயோரதிகஃ இத்யநுசிந்த்ய வ்ருத்தாஃ,**
**ஸத்யம் ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாமஃ ॥ ௨ ॥**

**ஸூனுஞ்சகார சதுரானனமேவ சைக꞉,**
**ஸூதஞ்சகார சதுரானனமேவ சான்ய꞉ ।**
**கோ வானயோரதி⁴க꞉ இத்யனுசிந்த்ய வ்ருத்³தா⁴꞉,**
**ஸத்யம் ப்³ருவந்து தமிமம் வயமாஶ்ரயாம꞉ ॥ 2 ॥**

## மொழிபெயர்ப்பு.

**ஐந்தி லொன்று குறைந்தமுகத் தவனை மகனு வாண்டுள்ளா**
**னிந்த வுலகி லொருவன்மற் றெருவ னெழில்கொள் சாரதியா**
**வந்த மகனை யேயுடையானதனுற் சிறந்தா னுரென்னுச்**
**சிந்தை புரிந்து பெரியவர்நீர் செப்பி ல்வரைச் சேருதுமே.** (2)

## பதப்பொருள்

**ஏக:ச** = ஒருவனுனல்,

**சதுராననமேவ** = நான்குமுகமுள்ளவனையே,
**ஸூனும** = பிள்ளையாக,
**சகார** = செய்து கொண்டான்,
**அன்ய ச** = மற்றெருவனேவென்றால்,
**சதுராननமேவ** = அந்த நான்குமுகமுள்ளவனையே,
**ஸூதம** = சாரதியாக,
**சகார** = செய்து கொண்டான்,
**அநயோ:** = இவர்களுக்குள்,
**அதி⁴க:** = சிறந்தவன்,
**கோவா** = எவன்?,
**இதி** = இதனை,
**அநுசிந்தியா** = ஆலோசித்து,
**வ்ருத்தா:** = பெரியவர்கள்,
**ஸத்யம்** = உண்மையை,
**ப்³ருவந்து** = சொல்லலாம்; சொன்னுல்,
**வயம்** = நாங்கள்,
**தம் இமம்** = அப்படிப்பட்ட அந்த இவனை
**ஆச்ரயாம:** = அடைகின்றேம்.

## பொழிப்பு.

ஒருவன் நான்முகமுள்ளவனைத் தனது மகனுய்ப் பெற்றுன்,
இன்னெருவன் அந்த நான்முகனையே சாரதியாகக்கொண்டான்;
இவர்களிலார் சிறந்தவர்கள் அறிவுடையவர்களே கூறுங்கள்!
நாங்களந்தப் புருஷனைச் சரணமாக அடைந்து வணங்குகின்றேம்.

## விதப்பு

ஒருவன் நான்குமுகமுள்ளப் பிள்ளையைப் பெற்றுனென்றது -
திருமால் நான்முகனை மகனுப்பெற்றதை இதனை -

"*வெண்டிருக்கனகடல்நெடுவேலிமுதுலகம்*
*உண்டுபைத்தலைநாகபோகத்தினிலுறங்கும்*
*தண்டுழாய்முகிலுந்தியந்தடத்தினிற்றுளைத்தாட்*
*புண்டரீகமொன்றலர்ந்ததுபுவியெலாமபூப்ப*' எனவும்,

"*நீலமால்வரைநெற்றியிற்பொடித்தசெங்கதிரே*
*போலவான்சுடர்பொழிதருமுளரியம்பொகுட்டின்*
*மேலதாகவந்தெழுந்ததுவெயில்விரிபசும்பொற்*
*கோலமேவியகுலமறைமழலைவாய்ககுழவி*" எனவும்,

"*கொங்குவிம்மியகொழுமடற்றுமரைக்குழவி*
*யெங்குவந்தனகெவ்வழியிருந்தனமென்று*
*வங்கண்மாதிரமனைத்தையும்பார்த்ததுபரர்ப்பத*
*திங்கள்போற்றிகழ்திருமுகநான்செனச்சிறந்த*" எனவும்

வரும் பாகவதச்செய்யுட்களா லுணர்க.

அவன்போலறையொருவனென்றது - வேதாமங்களிலே கேட்கப்படுகிற ஹரனை தனது சூதனுவுறுவானந்தச் சதுர்முகலென்றது -

ஹரியின் மகனுகிய சதுர்முனென் றழைக்கப்படுகிற பிரமனை ஹரன் தன திரதத்திற்குச சாரதியாகக் கொண்டதை -

"*உருகெழுநிலமொருவையமு*
*மிருசுடரிருபுடையாழியுஞ்*
*சுருதிகடுகளறுவாசியும்*
*மருமலரனையவனவலவனும்*" என்ற காஞ்சிமானமியத்தாலும்,

"*மறுவிலாமறைநான்குநலவடங்களாப்பிணித்து*
*நிறுவியேசமயங்களாறையுமபரிகளாநிரப்பித்*
*தெறுவிலாப்பெருங்குடிலைமுட்கோலெனத்திருத்தி*
*அறிவினீண்டவமபுயத்தனைப்பாகனுவமைத்தார்*"

என்று கூறப்படுகிற ஸ்ரீமகாபாரதத்தாலுமுணர்க

## தாத்பர்யம்.

ஹரிமைந்தனை ஹரன் சாரதியாககொண்டான் என்பதாம்.

## தாரதம்மியம்

ஒருவன் தன் மகனை வேறொருவனுக்குத தேரோட்டும்படி விடுவானுயின், தேரையுடையவனைக்காட்டிலும் தேரோட்டுபவனும் அவன் றந்தையுஞ் சிறந்தவர்க ளல்லரென்பது தேற்றம். ஆதலால் சதுர்முகனை மைந்தனுகவுடைய ஹரியினும் சதுர்முகனைச் சாரதியாகவுடைய ஹரன் சிறந்தவன் இவ்விஷயத்தால் ஹரிஹரரென்னும இருவருககுட்சிறந்தவன் யாவன் என்று ஆயுமிடத்தில் ஹரனே

என்று அறியப்படுகின்ருன். ஆதலால், இவ்விஷயத்திலிழிந்த அரியை அப்பிரதான மாக அகற்றி, உயாந்த ஹரஊ நாங்கள் சரணமாக அடைந்து வணங்குகின்ரேம். - என்றவாறு. **(2)**

**एकः पुनर्भुवि दधौ नवनीतखण्डं**
**न्यो दधौ नवसुधामयचन्द्रखण्डम् ।**
**को वानयोरधिकः इत्यनुचिन्त्य वृद्धाः**
**सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥ ३ ॥**

ஏகஃ புநர்பு4வி த3தௌ4 நவநீதக2ண்ட3ம்
ந்யோ த3தௌ4 நவஸுதா4மயசந்த்3ரக2ண்ட3ம் ।
கோ வாநயோரதி4கஃ இத்யநுசிந்த்ய வ்ருத்3தா4ஃ
ஸத்யம் ப்3ருவந்து தமிமம் வயமாஶ்ரயாமஃ ॥ 3 ॥

**ஏகஃ புனர்பு4வி த3தௌ4 நவனீதக2ண்ட3ம்**
**ந்யோ த3தௌ4 நவஸுதா4மயசந்த்3ரக2ண்ட3ம் ।**
**கோ வானயோரதி4கஃ இத்யனுசிந்த்ய வ்ருத்3தா4ஃ**
**ஸத்யம் ப்3ருவந்து தமிமம் வயமாஶ்ரயாமஃ ॥ 3 ॥**

## மொழிபெயர்ப்பு

**வண்ணக் கடலே யுடையாக வஊந்த வுலகில் வெண்ணெய்தஊ**
**உண்ண வெடுத்தா ஞெருவனமற் ௌருவ னழகா ரமுதுடனே**
**நண்ணு மதியின் கஊயொன்றை நயந்து தஊயின் மீதணிந்தான்**
**எண்ணி லிவரு ளுயாந்தவனயா ரிசைத்தாற் பெரியீரிறைஞ்சுதுமே.**

## பதப்பொருள்

| | | |
|---|---|---|
| **ஏக:புந:** | = | ஒருவஞனல், |
| **பு4வி** | = | உலகத்தில், |
| **நவனீதக2ண்ட3ம்** | = | வெண்ணெயத்துண்டை, |
| **த3தௌ4** | = | தரித்தான், |
| **அந்யோ:** | = | மற்ௌருவன், |
| **நவஸுதா4மய** | = | புதிய அமிர்தமயமான |
| **சந்த்3ரக2ண்ட3ம்** | = | நிலாத்துணடத்தை |
| **த3தௌ4** | = | தரித்தான், |
| **அந்யோ:** | = | இவ்விருவருக்குள், |
| **அதிக:** | = | சிறந்தவன், |
| **கோவா** | = | எவன்? |

| | | |
|---|---|---|
| **இதி** | = | இதனை, |
| **அனுசிந்த்ய** | = | ஆலோசித்து, |
| **வ்ருத்³தா⁴:** | = | பெரியவர்கள், |
| **ஸத்யம்** | = | உண்மையை, |
| **ப்³ருவந்து** | = | சொல்லலாம், |
| **தமிமம்** | = | உங்களாற் சொல்லப்பட்ட அந்த இவனை, |
| **வயம்** | = | நாங்கள், |
| **ஆஶ்ரயாம:** | = | ஆச்ரயிக்கின்றோம். |

## பொழிப்பு

ஒருவன் (புதிய) வெண்ணெய்த துண்டை (கையில்) வைத்திருக்கின்றான், இன்னொருவன் புதிய சந்திரகலையந்த் (தலையில்) வைத்துக்கொண்டிருக்கின்றான்; இவ்விருவருக்குள் சிறந்தவரை பெரியவர்களாகிய நீங்கள் சொல்லுவீர்களாயின, நாங்களந்த மஹாபுருஷனைச் சரணமாக அடைந்து வணங்குகின்றோம்.

## விதப்பு.

ஒருவனுலகிற் புது வெண்ணெ யுறு துண்டெடுத்தானென்றது - ஹரியை, அது அவ்வரி அவ்வண்ணஞ் செய்திருத்தலால் ஹரி துவாபரயுகத்தில் மதுராநகரத்திற் பிறந்து, கஞ்சலுக்குப்பயந்து, தனது தந்தையாலிரவிலாயர்சேரியிற் கொண்டுவரப் பட்டு, அசோதையின் பிரசவ்வீட்டி லவளை யறியாதிடப்பட்டு, அங்கிருந்த பெண் குழந்தையை யாதவ க்ஷத்திரியராகிய வசுதேவர் தன வீட்டிற்கு எடுத்துக்கொண்டு வரப்பட்டதற்குப் பின்பு, அசோதை தனது குழந்தையே இது என்று கருதி எடுத்துக் கண்ணனென்று பெயரிட்டு வளர்த்துக் கொண்டுவருங்காலத்தில், இக்கண்ணன் வெண்ணெயுண்பதி லதிகவிருப்பமுள்ளவனாய் வீட்டிலுள்ள வெண்ணெயை யுண்பது வும் போதாமல், அயல்வீடுகளிலுஞ் சென்று வெண்ணெய் திருடியுண்டு, நவநீத சோரன் - வெண்ணெய் திருடி என்னும் பெயருமபெற்றனன் இவைகளை -

“*எறித்தவெண்டிங்களூறமின்றுளியமுதமென்னத*
*தெறித்தவெண்டயிர்நுண்புள்ளிதிருமுகஞ்சிறப்பநின்றம்,*
*உறைப்பசுங்கொண்டலன்னானுடைத்தன்னறடந்த்தாழி*
*மறைத்தனள்வைத்தவெண்ணெய்வாரினானேடினானல்*" என்று

"*களவுசெய்மால்காணுமற்காலமார்மனைகடோறுந்*
*தளவலர்நகையார்வைத்தவுறிதனைத்தடவிமல்கு*
*மளைநெய்பால் வெண்ணெயெல்லா மசோதைசேய் கலனார்தன்மெய்*
*ஒளிவிழக்கவினைக்காட்டவுண்டையாற்றெறித்தேயுண்டான்*"

என்றும் வரும் பாகவதங்களின் செய்யுட்களாலுணர்க. இச்சரித்திர பிரிவை பாகவ தாதிபுராணங்களில் காண்க.

மற்றெருவன் புதியகலை மதித்துண்டைத்தரித்தான் என்றது - ஹரனை, அது அவ்வரன் அவ்வண்ணஞ் செய்தமையால்.

முன்னெரு காலத்தில் பிரமபுத்திரனுகிய தக்கன் என்னும் உபப்பிரமா தன் புத்திரியர்களில் அசுவனி முதல் இரேவதி ஈருகிய இருபத்தேழு பெண்களையும் அழகிய (சோடச பதினுறு) கலைகளையுடைய சந்திரனுக்குக் கல்யாணஞ் செய்து கொடுத்தனன் அச்சந்திரன் அவ்விருபத்தேழுமாதாகளில் சிலரிடத்தில் அதிக விருப்பத்தையும், பலரிடத்தில் அதிக வெறுப்பையும் பொருந்தினவனுக இருந்தான் அதனுல் அவன் மனைவியர்கள் தங்கள் தந்தையினிடத்திற்சென்று சந்திரனது பக்ஷ பாதங்களை யெடுத்துக் கூறினுர்கள். அவனும் உடனே குபிதனுய் மருகனுகிய சந்திர னைக்குறித்து நின்னழகு கெட்டொழிக, குறைந்தழிக என்று சபித்தனன், பின்னர் தக்கனிடத்து நின்றுங் கிடைத்த சாபத்தினுற் சந்திரன் ஒளிகுன்றினவனுய் மிகவும் பயந்து இனி யெனசெய்வதென றஞ்சி யிந்திரனையடைந்து, தேவராஜ! மாதுலனுகிய தக்கனிட்ட சாபத்தா லொளியிழந்தவனுயினேன் நீ விரைவில் அவன் சாபத்தை ஒழித்தருள் என்னலும். அவ்விந்திரன, சந்திர! யான் தக்கனுக்குக் கீழ்ப்படிந்து நடப்பவன், அது பற்றி யவனென் சொல்லை யொரு பொருளாக மதியான், நீ நின்கவலையை நீக்கித் தரும்படி யவன் றந்தையாகிய பிரமனை வேண்டிக்கொள் என்றனன் உடனே சந்திரனிந்திரனைவிட்டுப் பிரமனிடஞ்சென் றவனது கால்களில் வணங்கி, ஐய! எனது கவலையை யொழித்தருள்க வென்றனன். விதாதா- பிரமன். குமுதநணப? நின்சோக மொழித்தற்கியானருகனல்லேன். தக்கன் என்மகனுக விருந்தாலும் என்னை மதியான். ஆதலா லவனிட்ட சாபத்தை யானெவ்வாறு நீக்குவேன், நின் கவலையை யொழித்தற்கென்னு வியலா. அதற்குத்தக்கவன் சர்வபூத தயாபரனுகிய ஹரனே ஆம். அதனுல் நீ அவரிடஞ்செல் என்றனன். உடனே சந்திரன் கைலைமலையை யடைந்து, அங்கு நந்திதேவரருளினுல் உள்ளே புகுந்து, ஸ்ரீகண்ட மூர்த்தியை வணங்கி, பெருமானே! அந்தோ? என் உடலழகெல்லாம் தக்கனு லழிந்து வருகின்றதாற் றேவரீரை சரணமாக அடைந்தேன் அடியேனை இரக்ஷிக்கவேண்டும் என்று கதறியழுது குறைகூறினுன் சந்திரனது தத்கால நிலைமையைக்கண்ட கருணைக்கடலாகிய ஸ்ரீ-அரனென்று திருநாமமுள்ள சிவபெருமானுர் அவனை ஆதரித்து அபயாத்தமளித்து, ரோகணிகாந்தநீ தக்கனது சாபத்திறகாக அஞ்சறக நின்னை யாமாதரிப்பேமென்று கூறி யவனித்ட தபபோழ்கிருந்த ஒற்றைக்கலையை வாங்கித் தனது திருமுடியினமீது ஓராபரணமாகத் தரித்து அழிவற்ற யாமிதனைத் தரித்தமையால் இனி உன்னுடலிலுள்ள கலைகள் முறையே நிரம்புதலும், பின்னர்க் குறைதலுமாகிய தன்மையையடைந்து இவ்வுலகததிற சுக்கில க்ருஷ்ணவென்னும் பெயரோடு கூடிய பக்ஷமாகவாகி விளங்கக்கடவதென்றருளிச்செய்தனர். இதனுற் சிவபெருமானும், பிறைசூடி - சந்திரசேகரன் என்னு மபிதான முற்றவனுயினுன். இதனை - எனவரும் சிவரகஸ்யகண்ட சுலோகங்களாலும்,



"இன்னபலகிளைகண்மல்கவிருந்திருக்கக்கனபின்னாத்
துன்னியநாணமீந்த்துட்டொகைபெறமிருபானேழு
கன்னியாதம்மைநல்கிக்கடிமணவிரியினீராற்
றன்னிகரில்லாப்பொற்பிற்றணமதிக்கடவுட்கீந்தான்

கந்தபினமதியைநோக்கியார்க்குமோர்பெற்றித்தாக
வாயந்திடுமார்வமுயத்துமருவுதிசிலாபாலன்பிற
றேய்நதொருசிலரையெள்ளிச்சுளிகிறபாயல்ஊயென்னு
வாயந்திவைபுகன்றுதேற்றியஊயரோடகலச்செய்தான்.

இன்னணபுணர்ச்சிபோற்றிமேகியதிங்கட்புத்தேன்
பன்னியரஊயாதம்மிற்பழுதிலாவாரருனும்
பின்னவடானுமாற்றப்பேரெழிலுடையராக
வன்னவாதிறத்துமேலாமாவமோடணுகலுற்றன்.

ஏஊயர்தம்பாற்சேரானிருதுவின்வேஊபூத்த
தேனிமிரசொல்லார்மாட்டுச்சேருருக்கணவரேபோல்
வானிடைமதியப்புத்தேண்மறுத்தனன்றிரியும்வேஊ
யானதோர்பான்மைநோக்கியவரெலாம்முனிந்துபோனர்.

போந்தவர்தக்கன்றன்பாற்பொருமியேபொலம்பூட்கொங்கை
யேந்திழைமாதர்தங்கள்கேள்வனதியற்கைகூறக்
காந்தியவுளத்தனுகக்கனனறவன்கஊகளெல்லாந்
தேயாதிலவாகவென்றுதீமொழிச்சாபஞ்செய்தான்.

செப்பருந்திருவிலவைகுஞ்சிறுவிதியென்பான்சொற்ற
விபபெருஞ்சாபந்தன்னுலென்றமெஞ்சந்த்திங்கள்
ஒப்பருங்கஊகளவைகரகோரொருகஊயாய·:காப
பொய்ப்பெருஞ்செல்வம்பெற்றேனபுகழெனக்குறைந்தவன்றே

*மூன்றுறழைந்துவைகன்முடிந்துழிமதியமென்போ*
*ஞன்றதன்கலையின்மூவைந்தழிதலுமவனேயென்னச்*
*சான்றுரைசெயதல்போலோர்தண்கலையிருத்தலோடு*
*மான்றனன்மெலிந்துவெள்கிவானவாகோனையுற்ருன்*

*தக்கனெனபவன்சாபத்தாற்றண்கலையனைத்தும்போகி*
*யிக்கலையொன்றுநின்றதீதுமின்றிறக்குமென்னின்*
*மிக்கவென்னியல்புகுன்றும்வியன்பெயாதொலையும்யாண்டும்*
*புக்கதொல்புகழும்போகும்புகல்வசையாகுமன்றே*

*ஈங்கினிச்செயலதென்ஞேவுணர்கிலேனெற்கோர்புந்தி*
*தீங்கறவுரைத்தியென்னச்செப்பின்னிரங்கியேங்கித்*
*தாங்கருமபையுள்வேலைசார்தலுந்தழுவியெற்கோர்*
*பாங்கனையஞ்சலெனஞவிவைசிலபகாதலுற்ருன்*

*இதுபழியொன்றுநிற்கவின்றுநீதக்கனறனஞற்*
*புதியதோரகுறையும்பெற்ருய்பொலிவோடுதிருவுந்தீர்ந்தாய்*
*மதியினைமதியதற்ருய்மற்றினிவல்லைசென்று*
*விதியொடுபகர்திசேயைவேண்டியீதகற்றுமென்ருன்.*

*தாமரையென்னுந்தண்பூந்தவிசிடைதிகழ்ந்தவண்ணன்*
*மாமலரடியின்வீழாமாதுலன்வெகுண்டுசொற்ற*
*தீமொழியுணர்த்தியுன்றன்சேயினைத்தெருட்டித்தீயேன்*
*றேமுறுகவலைமாற்றித்துடைத்தியிச்சாபமென்ருன்.*

*அன்னதுமொழிந்ததிங்கட்கம்புயன்மொழிவானீண்டுத்*
*தன்னுளநெறிப்பாலன்றிச்சார்கிலன்றக்கனென்பா*
*னென்னுரையிறையுங்கொள்ளான்யானவன்மாட்டுஞசெல்லேன்*
*முன்னுளனல்லன்யார்க்குமுதல்வனேயாகிநின்ருன்.*

*ஆதலினீண்டுநின்ருதிநாயகன்*
*காதலினமேயவககைலயுற்றவன்*
*பாதமிங்கரணெனப்பற்றிவல்லைநின்*
*பேதுறவொழிமதிபெருந்தணமாமதி*

*என்றலுமயனபதமிறைஞ்சியெம்பிரா*
*னனறிவைபுகன்றனைஞானமூர்த்திபாற*
*சென்றடைவேனெனச்செப்பிவெள்ளியங்*
*குன்றினையணைந்துபொற்கோயிலெயதினன்*

*நங்கஊயஇலத்திடுநண்ணலன்ணே*
*யிங்கிவண்டுதுமெனறிருட்கள்சூழ்ந்தென*
*மங்குலினிறங்கொடுவடிவம்வேறதாந்*
*திங்கணின்றெம்பிராறகிஊயசெப்புவான்*

*வனறிற்றறக்கனமுனவழங்குதீச்சொலாற*
*றுன்றிடுங்கஇலயெலாந்தொஇலந்துபோந்திட*
*வொன்றிவணிருத்தலாலுதுவுந்தேயந்திடு*
*மின்றினிவிஊயினேனியாதுசெய்வதே*

*எஞ்சியவிக்கஇலயிருக்கத்தேயதரு*
*விஞ்சியகஇலயெலாமேவநல்குதி*
*தஞ்சநின்னலதிஇலயென்ந்த்தணமதி*
*யஞ்சஇலயென்றனன்ருளிஞழியான்*

*தீர்ந்தனவன்றியேதிங்கடன்னிடை*
*யாரந்திடுகஇலயிஊயங்கையாற்கொளா*
*வார்ந்திடுசடைமிசைவயங்கச்சேர்த்திஞன்*
*சாந்திலதவ்விடைத்தக்கன்சாபமே.*

*நின்னதொல்கஇலயைந்துமுப்பகலிடைநிரம்பிப்*
*பின்னரவ்வழிதேய்ந்துவந்தோர்கஇலபிரியா*
*தின்னபான்மையேநிகழுமெக்காலமுமென்ருன்*
*முன்ஊயாவிதோறிருந்தெலாமியற்றியமுதல்வன்"*

என்னுங் கந்தபுராணக்கவிகளாலு முணர்க.

## தாரதம்மியம்.

அரி வெண்ணெயையும், அரன் சந்திரகஇலயையுந் தரித்தனர் என்பதாம் வெண் ணெயோ விரைவிலழிந்து படும்பொருள், சந்திரகஇலயோ நித்தியமான பொருள் அழிவுபடும் பொருஊயுடையவஊக் காட்டிலும், நித்தியமான பொருஊயுடைய வனே சிறந்தவனென்பதுதேற்றம். ஆதலால் வெண்ணெயையேந்திய ஹரியிலும் சந்திரகண்டந்தாங்கிய ஹரனே சிறந்தவன் ஆதலால், நாங்களரியை இவ்விஷயத் திற சிறந்தவனல்லவென் றெழித்துச் சிறந்தவஞன ஹரஊயே சரணமாக விடைந்து வணங்குகிரேம் - என்றவாறு **(3)**

**एकोऽस्ति नन्दकुटिलव्रजमन्दिरेषु**
**चान्योऽस्ति मेरुशिखर स्थितकन्दरेषु ।**
**को वानयोरधिकः इत्यनुचिन्त्य वृद्धाः**
**सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥४॥**

𑌏𑌕𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 𑌨𑌨𑍍𑌦𑌕𑍁𑌟𑌿𑌲𑌵𑍍𑌰𑌜𑌮𑌨𑍍𑌦𑌿𑌰𑍇𑌷𑍁
𑌚𑌾𑌨𑍍𑌯𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 𑌮𑍇𑌰𑍁𑌶𑌿𑌖𑌰 𑌸𑍍𑌥𑌿𑌤𑌕𑌨𑍍𑌦𑌰𑍇𑌷𑍁 ।
𑌕𑍋 𑌵𑌾𑌨𑌯𑍋𑌰𑌧𑌿𑌕𑌃 𑌇𑌤𑍍𑌯𑌨𑍁𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯 𑌵𑍃𑌦𑍍𑌧𑌾𑌃
𑌸𑌤𑍍𑌯𑌂 𑌬𑍍𑌰𑍁𑌵𑌨𑍍𑌤𑍁 𑌤𑌮𑌿𑌮𑌂 𑌵𑌯𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑌾𑌮𑌃 ॥௪॥

**ஏகோ(அ)ஸ்தி நந்த³குடிலவ்ரஜமந்தி³ரேஷு**
**சான்யோ(அ)ஸ்தி மேருஶிக²ர ஸ்தி²தகந்த³ரேஷு ।**
**கோ வானயோரதி⁴க: இத்யனுசிந்த்ய வ்ருத்³தா⁴:**
**ஸத்யம் ப்³ருவந்து தமிமம் வயமாஶ்ரயாம: ॥4॥**

## மொழிபெயர்ப்பு.

**அழிந்த சாணங் கோமயமென் றறையு மவற்று லழகினங்க**
**ளொழிந்த விடையர் குடிலகளிடத் துற்று ரெருவன் மற்றெருவன்**
**கழிந்த கருமைப் பொற்கிரியின் கண்ணு குகையன் காதன்மை**
**யிழிந்த விவருட் சிறந்தவன்ய ரிசைத்தாற் பெரியீ ரிறைஞ்சுதுமே.**

## பதப்பொருள்.

| | | |
|---|---|---|
| **ஏக:** | = | ஒருவன், |
| **நந்த³குடிலவ்ரஜமந்தி³ரேஷு** | = | இடையர்களுடைய (அல்லது, நந்தனுடைய) அபரிசுத்தமான மாட்டு கொட்டில்களை யுடைய வீடுகளில், |
| **அஸ்தி²** | = | இருந்துகொண்டிருக்கிறுன், |
| **அந்ய:ச** | = | இன்னெருவனுனல் |
| **மேருஶிக²ர ஸ்தி²தகந்த³ரேஷு** | = | மேருமலையிலுள்ள சிகரத்திலுள்ள குகை களில், |
| **அஸ்தி²** | = | இருக்கிறுன், |
| **அநயோ:** | = | இவ்விருவருக்குள், |
| **அதிக:** | = | உயர்ந்தவன், |
| **கோவா** | = | யாவன்? |
| **இதி** | = | இதனை, |
| **அனுசிந்தியா:** | = | ஆலோசித்து, |
| **வ்ருத்³தா⁴:** | = | பெரியவர்கள், |
| **ஸத்யம்** | = | யதார்தத்தை, |

| | | |
|---|---|---|
| **ப்³ருவந்து** | = | சொல்லுங்கள், |
| **தமிமம்** | = | உங்களாற் சொல்லப்பட்ட அந்த புருஷனையே |
| **வயம்** | = | நாங்கள், |
| **ஆஶ்ரயாமः** | = | ஆச்ரயிக்கின்றோம் |

## பொழிப்பு

ஒருவன் நந்தவிரச மந்திரமென்னுங் கன்றுகளோடு கூடிய மாட்டுத்தொழுவத்திலிருப்பவன், அல்லது நந்தகோபனுடைய ஒழுங்கீனமான குடிசைகளில் வசிப்பவன், இன்னொருவன (பொன்மயமான மஹா) மேருமலையின் சிகரத்திலுள்ள குகையினிடத்தை இடமாகக்கொண்டவன், இவ்விருவர்களில் யாவர் சிறந்தவர்? உண்மை ஞானத்தையுடைய நீவிர் கூறுவீர்களாயின், நாங்கள் அம்மஹாபுருஷனைச் சரணமாகவடைந்து வணங்குகின்றோம்.

## விதப்பு.

ஒருவனநந்தவிரசமந்திரத்திலிருந்தானென்றது - ஹரியை, அது அவ்வரி அவ்வண்ணமிருத்தலால்.

(ஹரியாகிய) கண்ணன் நந்தகோபனுடைய கன்றுகளுங் காலிகளும் பொருந்திய ஒழுங்கீனமான தழைகளிட்டிழைத்த வீடுகளிலிருந்தனன்; மாடமாளிகைகளோடு கூடியதன்றே நந்தகோபனது வீடுகளெனின், அன்றென்பேம். யாதாலெனில், நந்தகோபன் முல்லைநிலத்தலைவன்; முல்லைநிலத்தினர்களுக்கு நாகரீகமான வீடுகளுமுடைகளுமில்லை. இதனை -

"*முடையுறிபொறுத்தசுவலினுவெளுத்தநறியாதளவிள*
*முகையெனுமெயிற்றினவழிவிரவுகொச்சையுடையமொழியச்ர்*
*முடலைப்படுநெட்டையுடலினரழுக்குறுமுறுகுமறுவையா*
*முருகொழுகுவெட்சியிதழிநறைக்ககுபிடவமதுமலா*
*இடைவிரவியிட்டகுழையினுகுலத்தினமுதன்மையறன்வழி*
*யெமதுமகள்சுறகமிதுவெனவிதிப்பமுதலுமொருபகல்*" எனவும்,

"*தளவுகாட்டுமவெணமுறவறவழுந்துவாவாயசோதைபச்சைத்*
*தழைக்கூரையினின்முடைப்பகுவாயத்தடந்த்தாழிநெட்டுறியின்*" எனவும்,

"*கோதூளிமொயப்பமருணமாலையிற்கொண்டலவண்ணன்*"
எனவும் வருவனவற்றுலுணர்க

ஸ்ரீஹரியானவர் - நந்தகோபனது வீடுகளிலிருந்தாரென்பதை -

"*வாயால்வீழ்குருதிந்திநிகராயோடவடவரைபோலமாண்டுவிழப்பெகஜனக்கொன்ற,*
*தூயோஜனத்துதித்தனர்களமுனிவரெல்லாஞ்சுருதியுறத்தும்புருநாரதர்கள்பாட,*
*வோயாமலமலாமாரிசொரிந்தார்வாஞேருயாதேவதுந்துபிசங்கொலிப்டவெய்தி,*
*ஆயோாகளநந்தன்மகிழ்வெய்தப்புக்காரசோதையுரோகணியாகத்தஜணத்தாரன்றே.*"

"*படர்சுடர்விட்டொளிகாலுஞ்செம்மணிச்சூட்டரவரசாமபரமன்றுனும்,*
*தொடர்சுடர்விட்டொளிமாழைமலராதனத்தவடன்றுடோய்வானும்,*
*அடர்சுடர்விட்டொளிர்வானத்தண்டாபுகழண்டாபிரானகத்துளாயர்,*
*பிடர்சுடர்விட்டொளிர்மணிப்பொன்ணிப்பூவைகளிதூங்கப்பிறங்குவாரால்*"

என்னும் பாத்மோத்தரபுராணத்தாலும்,

"*தந்தமுறியிலவர்வைத்ததயிர்பால்வெண்ணெயெட்டாமற்*
*குந்தியுரலின்மிசையேறியினங்கோவியர்முன்கூத்தாடி*
*நந்தன்மஜனயில்சோதையிருநயனங்களிக்கவிஜளயாடு*
*மைந்தனிருதாளொருநாளுமறவாதாரேபிறவாதார்*"

என்று ஸ்ரீமஹாபாரதத்திலும வருதஜலக்கொண்டுணர்க.

ஒருவன் மேருசிகரத்திலுள்ள குகையி லிருக்கினறு னென்றது ஹரஜன, அது அவ்வரன் அவ்வண்ணமிருத்தலால் இதஜன -

"*சிகரியெண்ணில்சேர்ந்தெழுந்துயாந்துமீச்சென்றே*
*பகருமுக்குவடுயாந்துறுமபங்கயனறிருமால்*
*முகங்கஜளந்துளானமூவர்க்குமுதன்மைசாலபதிகள்*
*அகநெடுந்தஜலமூன்றினுமாமெனவறிவாய்*" என்று பாரதத்திலும்,
"*மேருவரையதற்குநடுப்பிரமனமூதூர்மிக்கமஞேவதியதற்குமேஜலத்திக்கி,*
*ஞரணனவாழ்வைகுண்டமவடகீழ்பாலிஞதனமாசோதிட்கந்திசைகளெட்டுஞ்,*
*சீரியவிந்திரன்முதலாமெணமாதேயந்தெற்குமுதல்வடக்களவுமருங்குதன்னி,*
*னேரியதோரதேயமதுசெவ்வேபோகுநெடும்பூழையொன்றுளதுநிஜனகமாதோ*"

என்று ஸ்ரீகந்தபுராணத்திலும்,

"*மாதிரத்தஜலவாதத்தமதிசையின் மருவியகுவட்டிடைவதிவ,*
*ரோதியசிரத்திஞப்பணுங்குடாதுமுதீசியின்குணக்குமுச்சிகர,*
*மேதகவிளங்குமயனரியீசனவிளம்பியமுறையின்வீற்றிருப்பா,*
*ரேதமில்வற்றின்பெயர்மஞேவதிவைகுண்டமேசோதிவெற்பெனக*"

என்று தணிகைப்புராணத்தும்,

"*தண்ணறுங்கமலத்துறைதஇலவனுள்விரும்பும்*
*எண்ணரும்புகழீசனுமாயனுமிருப்பக்*
*கண்ணகனறிருகடிநகரிரண்டெழில்கலந்து*
*விண்ணுயர்ந்தவமமேருவின்முகட்டினில்விளங்கும்*"

என்று பாகவதத்தும் வருதலாலுணர்க.

## தாத்பர்யம்.

ஒருவனிடைக்குடிலிலும், மற்றொருவன் மேருமஇலயிலும் இருக்கின்றுர்கள் என்பதாம்.

## தாரதம்மியம்

உவஇலக்குடிலென்று பிறர் கூறியபடி காணப்படும் இடையர் சேரியிலுள்ள நந்தனது வீட்டை யிடமாகக்கொண்டிருப்பவஇனக்காட்டிலும், பொன்மயமான மஹா மேருமஇலயை இருப்பிடமாகக்கொண்டிருப்பவனே இவ்விருப்பு முறையிற் சிறந்தவ ஞகின்றுன் அதனுல் இம்முறையிற் ருழ்வடைந்த ஹரியைத் தாழ்ந்த பொருளாக வும், ஹரஇனச் சிறந்த பொருளாகவுமறிந்த நாங்க ளரியையொழித் தரஇன வணங்கு கின்ருேம் - என்றவாறு.

**एकः सहस्रकमलैर्यसुपाच्र्य तस्था**
**वन्यस्तु वैरुपचितस्तुमुमोद तस्मात् ।**
**को वानयो रधिकः इत्यनुचिन्त्य वृद्धाः**
**सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥५॥**

**ஏக꞉ ஸஹஸ்ரகமலைர்யஸுபாச்ர்ய தஸ்தா**
**வன்யஸ்து வைருபசிதஸ்துமுமோத தஸ்மாத் ।**
**கோ வானயோ ரதிக꞉ இத்யனுசிந்த்ய வ்ருத்³தா꞉**
**ஸத்யம் ப்³ருவந்து தமிமம் வயமாஶ்ரயாம꞉ ॥௫॥**

**ஏக꞉ ஸஹஸ்ரகமஇலர்யஸுபார்ச்ய தஸ்தா[2]**
**வன்யஸ்து வைருபசிதஸ்துமுமோத[3] தஸ்மாத் ।**
**கோவானயோ ரதி[4]க꞉ இத்யனுசிந்த்ய வ்ருத்[3]தா[4]꞉**
**ஸத்யம் ப்[3]ருவந்து தமிமம் வயமாஶ்ரயாம꞉ ॥5॥**

## மொழிபெயர்ப்பு

**தேனுர் கமல மாயிரத்தாற் சிறந்த பூசை தஇனயொருவன்**
**வானேர் புகழ்ச் செய்தானவ வளங்கொ ணறிய கமலத்தைத்**

**தானே யேற்றுப் பின்னெருவன் றவரு மகிழ்ச்சி தனையுற்றுன்**
**ஏனே யிவருட் சிறந்தவனயா ரிசைத்தாற் பெரியீ ரிறைஞ்சுதுமே.**

## பதப்பொருள்.

| | | |
|---|---|---|
| **ஏக:** | = | ஒருவன், |
| **ஸஹஸ்ரகமலை:** | = | ஆயிரந்தாமரைமலர்களால், |
| **யம்** | = | எவனை, |
| **உபார்ச்சிய** | = | அர்ச்சித்து, |
| **தஸ்தௌ** | = | இருந்தானே, |
| **ஸ:** | = | அந்த, |
| **அநய:து** | = | இன்னெருவன், |
| **தை:** | = | அந்தத் தாமரைப்புட்டங்களால், |
| **உபசித:** | = | பூஜிக்கப்பட்டவனுய், |
| **தஸ்மாத்** | = | அந்த பூஜையினுலே, |
| **முமோத³** | = | சந்தோஸித்தான், |
| **அநயோ:** | = | இப்படிப்பட்ட இவ்விருவருக்குள், |
| **அதிக:** | = | சிறந்தவன், |
| **கோவா** | = | எவனென்று, |
| **இதி** | = | இதனை, |
| **அனுசிந்த்ய** | = | ஆலோசித்து, |
| **வ்ருத்³தா⁴:** | = | பெரியவர்கள், |
| **ஸத்யம்** | = | யதார்தத்ததை, |
| **ப்³ருவந்து** | = | சொல்லுங்கள், |
| **தமிமம்** | = | உங்களாற் பெரியவனென்று கூறப்பட்ட அந்தச் சிறந்தவனை, |
| **வயம்** | = | நாங்கள், |
| **ஆம்ரயாம:** | = | கர்த்தாவாக வாசரயிக்கின்றேம் |

## பொழிப்பு.

ஒருவன் ஆயிரந் தாமரைமலர்களால் அர்ச்சனை செய்தனன், அவனைப்போல் விளங்கவெடுத்துக்காட்டிய வின்னெருவன் முன்சொன்னவனுற் செய்யப்பட்ட பூசை யைப்பார்த்து மகிழுகின்றுன்; இவர்களில் யார் சிறந்தவரென்று கேட்குமெமக்குச் சத்தியமும் கல்வியுந் தவமுமுள்ள பெரியவர்களாகிய நீங்கள் இவர் சிறந்தவரெ ன்று சொன்னுல், நாங்களந்த மஹாபுருஷனை ஆச்ரயிக்கின்றேம்.

## விதப்பு.

ஒருவனுயிரந் தாமரைமலர்களாற் பூசித்தானென்றது- ஹரியை. அது அவ்வரி அவ்வண்ணஞ் செய்திருத்தலால். இதனை -



என்று ஸ்ரீ மஹாஸ்காந்தத்திலும்,

"*மாயிருங்கமலப்போதுகைக்கொண்டுமாக்ஷிசான்ற*
*வாயிரந்திருநாமத்தானித்தலுமருச்சித்தேத்தி*
*மேயினன்திருமாலனஞேனபத்தியின்விஊவுகாண்பான்*
*பாயிரமறைக்டேறுப்பரம்பொருளொருநாளங்கண்*" என்று காஞ்சிமான்மியத்திலும்,

"*வடகிழக்காசைதன்னிலவாளியொன்றேடுந்தீர*
*நெடியவனெயதித்தூயவிலிங்கமொன்றியற்றிநீரார்*
*கடிமலராதிகொண்டுகவினுறுபூசைசெய்தான்*
*படியிலப்பரஊனச்சுந்தரேசப்போபகருகிறபார்*" என்று சுருதிபுமான்மியத்திலும்,

"*பூவாயிரீந்தோட்டிருங்கமலப்போதாயிரத்தால்வழிபட்டா*
*ஞவேறுயாததோனிவனிஊமையறிவாஞேக்கியக்கமலத*
*தோவாவொருபூக்கிடையாதுவருந்தப்புரிந்தாஞெருநாளிற்*
*தேவாதிபன்றுட்கொருநயனமலரிற்சாத்திக்குறைதீர்ந்தான்*"

என்று உபதேசகாண்டத்திலும் வருதலால், திருமால் சிவபெருமாஊ ஆயிரங்கமலத் தாற் பூசித்தனரென றறியப்படுகின்ருர்.

"ஒருவனதற்குமகிழ்வாகி யுறைந்தானென்ப" என்றது - ஹரியாற் செய்யப்பட்ட பூசைக்கு மகிழ்ந்த ஹரஊ இதஊ -

"*திருவிஞயகனவ்வழியருச்சஊதிருத்தக்*
*கருமணிக்களத்தெம்பிரான்கருஊமீக்கூர்ந்து*
*பொருவிடைப்புறத்தினிதெழுந்தருளினன்புகுந்தான்*
*குருதிவெண்ணிணத்திரியானிருகரங்குவித்தான்*"
என்று உபதேசகாண்டத்திலும்,

"*ஆங்கவஊ நோக்கி நின்பூசைக்ககமகிழ்ந்தே முனக்கிஞ்ஞான்று,*
*தேங்கமவ்விழியளித்தேம்பதுமாக்கனெனும்பெயரிற்றிகழ்வாயவ்வூர்,*
*பாங்குபெறுதிருமாற்பேறெனப்பொலிகவென்றருளிப்பானுகோடி,*
*தாங்குகதிரச்சுதரிசனப்பெயராழித்தனிப்படையுமுதவியெங்கோன்*"

என்று காஞ்சிமான்மியத்திலும் வருதலாற் சிவபெருமாஞகிய ஹரனே மாயோன் செய்த பூசையை மகிழ்ந்து நின்றவஞக வறியப்படுகின்றுன்.

## தாத்பர்யம்

திருமா லாயிரந் தாமரைமலர்களாற் பூசைசெயதவர்; சிவபெருமா னப்பூசையையேற்று மகிழ்ந்தவர் என்பதாம்.

## தாரதம்மியம்.

உலகத்திற் கண்கூடாகப் பூசைசெய்பவனிலும், பூசையை யேற்றுக்கொள்பவனே சிறந்தவனென்பது தேற்றம் ஆதலால் ஆயிரந்தாமரைமலர்களாற் பூசைசெய்த ஹரி, அப்பூசையை யேற்றுககொண்ட ஹரன் என்னும் இருவர்களில் ஹரனே சிறந்தவனென்று அறியப்படுதலால், இவ்விடயத்திற்ருழவடைந்த ஹரியை அப்பிரதானமாக வொதுக்கி, மஹாபுருஷனுகிய ஹரஜனயே சிறந்த பொருளாக வறிந்து நாங்கள் அவ்வரனுகிய சிவபெருமாஜனச் சரணமாக வடைகின்றேம்.

**गाढ़ान्धकार घननील शरीर एको**
**ज्योत्स्नातिनिर्मल विशुद्ध शरीर एकः ।**
**कोवानयो रधिकः इत्यनुचिन्त्य वृद्धाः**
**सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥ ६ ॥**

**஗ாஊாஙகார வநநீ஬ ஶரீர ஏகொ**
**ஜ்யொத்ஸ்நாதிநிர்஬ விஶுஃ ஶரீர ஏகஃ ।**
**கொவாநயொ ரயிகஃ ஐத்யநுசிந்த்ய வ்ருஃாஃ**
**ஸத்யம் ப்ருவந்து தமிமம் வயமாஶ்ரயாமஃ ॥ ௬ ॥**

**கா3ஃடா3ந்த4கார க4னநீல ஶரீர ஏகோ**
**ஜ்யோத்ஸ்னுதிநிர்மல விஶுத்3த4 ஶரீர ஏகஃ ।**
**கோவானயோ ரதி4கஃ இத்யனுசிந்த்ய வ்ருத்3தா4ஃ**
**ஸத்யம் ப்3ருவந்து தமிமம் வயமாஶ்ரயாமஃ ॥ 6 ॥**

## மொழிபெயர்ப்பு.

மதியு முடுவு மில்லாமன் மறைக்குள் கொண்மூ வுறுமிரவி
லதிக மான கருகிறத்தை யடைந்தா ஞெருவ வயலோருவன்
துதிசெய் மதியின் கிரணமெனத் துலங்கு முருவனிவர் தம்மி
லதிக மெவரோ வவர்தம்மை யறைந்தாற் பெரியீ ரடைகுதுமே.

## பதப்பொருள்.

| | | |
|---|---|---|
| **ஏகஃ** | = | ஒருவன், |
| **கா3ஃடா3ந்த4கார** | = | காடாந்தகாரத்தைப்போல கனமானதும், |

| | | |
|---|---|---|
| **க⁴னநீல ஶரீர:** | | நீலமானதுமான சரீரத்தையுடையவன்; |
| **ஏக:** | = | இன்னொருவன், |
| **ஜ்யோத்ஸ்னதி** | = | நிலாவைப்போல மிகவும், |
| **நிர்மல** | = | பரிசுத்தமானதும், |
| **விஶுத்³த⁴** | = | சுத்தமானதும், வெண்மையானதுமான |
| **ஶரீர:** | = | சரீரத்தினையுடையவன், |
| **அநயோ:** | = | இவ்விருவருக்குள், |
| **அதிக:** | = | சிலாகனீயமானவன், |
| **கோவா** | = | யாவன்? |
| **இதி** | = | இதனை-என்று, |
| **அநுசிந்தியா** | = | ஆலோசித்து, |
| **வ்ருத்³தா⁴:** | = | பெரியவர்கள், |
| **ஸத்யம்** | = | இதன் உண்மையை, |
| **ப்³ருவந்து** | = | சொல்லலாம் சொன்னால் |
| **தமிமம்** | = | உங்களா லக்கிரனுகக்கூறப்பட்ட அந்த விவனை |
| **வயம்** | = | நாங்கள், |
| **ஆஶ்ரயாம:** | = | ஆஶ்ரயிக்கின்றோம். |

## பொழிப்பு.

ஒருவன் காடாந்தகாரமான திருமேனியையுடையவன், மற்றொருவன் நிலவைப்போல சொலிக்கின்ற திருமேனியையுடையவன்; இவ்விருவர்களிற் சிறந்தவனை நீங்கள் சொன்னால், அறிவிற் சிறந்தவர்களே! நாங்களந்த மகாபுருஷனைச் சரணமாக அடைகின்றோம்.

## விதப்பு.

காடாந்தகாரமான சரீரத்தை யுடையவனென்றது - ஹரியை, அது அவ்வரி அவ்வாறான சரீரத்தோடு இருத்தலால். இதனை -

"*கருவிமாமுகிற்கொழுந்தெனக்கண்கவர்மேனி*
*திருவில்கான்றொளிசிந்திடச்செய்யதாமரைக்கண்*
*அருள்பொழிந்திடவற்புதக்குழவியாய்ததோன்றும்*. என்றும்,

*கண்ணேமணியேகருநாயிறுபோலவாய்*
*உண்ணேயொழியவுனைப்பெற்றேனுனுவந்து*
*மண்ணேமகிழ்வளராமற்போக்குவனே*
*பெண்ணுகயான்பிறந்துபீழையினைப்பெற்றேனே*" என்றும் பாகவத்ததும்,

"*பெரியவனைமாயவனைப்பேருலகமெல்லாம்*
*விரிகமலவுந்தியுடைவிண்ணவனைக்கண்ணுந்*

*திருவடியுங்கையுமெழில்சிறந்தகனிவாயுஞ்செய்ய*
*கரியவனைக்காணாதகண்ணென்னகண்ணே*
*கண்ணிமைத்துக்காணபாரதங்கண்ணெனனகண்ணே'*

என்று சிலப்பதிகாரத்திலும் வருதலைக்கொண்டுணர்க

ஒருவனிலவினிற்மாகவுற்ற வொளிகொளுருவுடையான் என்றது - ஹரனை, அது அவ்வரன் அவவண்ணமிருத்தலால். சிவபெருமான் சுத்த ஸ்படிகம் போன்ற வெண்ணிறமுடையவனாதலால், வெண்ணிறமுள்ள சந்திரிகை போன்ற வுருவின னென் றுரைக்கப்பட்டது. இதனை -

"*ஒளிவளர்விளக்கேயுலப்பிலாவொன்றேயுணர்வுசூழ்கடந்ததோருணர்வே,*
*தெளிவளர்பளிங்கினறிரண்மணிக்குன்றேசித்தததுட்டித்திக்குந்தேனே,*
*அளிவளருள்ளத்தானந்தக்கனியேயம்பலமாடரங்காக,*
*வெளிவளர்தெய்வக்கூத்துகந்தாயைத் தொண்டனேன் விளம்புமா விளம்பே'*

என்று திருவிசைப்பாவிலும்,

**ओतं येन जगच्चराचरमिदं प्रोतं च सर्वं सदा**
**च्योतन्ते पशवोऽपि पाशनिकराद् यस्य प्रसादेन तत् ।**
**ओमित्यादिमनूच्चरध्वनिगतं ज्योतिष्मतां द्योतकं**
**व्योमव्यापि परं शिवाख्यमकलं ज्योतिः प्रपद्ये धिया ॥१॥**

ஒதம் யெந ஜமஹ்ராவாமிஉம் ப்ராதம் வ ஸவம் ஸஊ
வெ்யாதஹெ் வஶவொ௨வி வாஶநிகமாஃ் யஸ்ய ப்ரஸாஒெந தக் ।
ஒமிக்யாஉிஉந௨ஹ்ராயஙிமஹம் ஜெ்யாதிஷ்தாம் ஜெ்யாதகஂ
வெ்யாஊவ்யாவி வமஂ ஶிவாவ்யஉகஒஂ ஜெ்யாதிஃ ப்ரவெ்ஜெ யியா ॥க॥

**ஓதம் யேன ஜக³ச்சராசரமித³ம் ப்ரோதம் ச ஸர்வம் ஸதா³**
**ச்யோதந்தே பஶவோ(அ)பி பாஶநிகராத்³ யஸ்ய ப்ரஸாதே³ன தத் ।**
**ஓமித்யாதி³மனூச்சரத்⁴வனிக³தம் ஜ்யோதிஷ்மதாம் த்³யோதகம்**
**வ்யோமவ்யாபி பரம் ஶிவாக்²யமகலம் ஜ்யோதிঃ ப்ரபத்³யே தி⁴யா ॥1॥**

என்று ஶித்தாந்தசாராவளியிலும்,
"*உலகெலாமுணர்ந்தோதற்கரியவன்*
*நிலவுலாவியநீர்மலிவேணியன்*
*அலகில்சோதியன்மபலத்தாடுவான்*
*மலர்சிலம்படிவாழ்த்திவணங்குவாம்"*

என்று பெரியபுராணத்திலும் வருதலைக்கொண்டுணர்க.

## தாத்பர்யம்

அரி கறுப்பன், அரன் வெளுப்பன் என்பதாம்.

## தாரதம்மியம்

உலகத்திற் கருநிறமுள்ளவனை விட வெண்ணிறமுள்ளவன் சிறந்தவனுக அறியப்படுகிறுன், என்று மகாகவியாகிய காளிதாசனுரைத்தபடி, ஹரி இவ்விஷயத்தில் தாழ்ந்தவனுகிறுன் ஆதலால் கருநிறமுள்ள திருமாலைக்காட்டிலும், வெண்ணிற முள்ள ஹரனே இவ்விஷயத்திற் சிறந்தவன், அதனுல் நாம் தாழ்ந்த ஹரியை அப்பிரதானுக வொதுக்கி உயாந்த ஹரனைப் பிரதானமாகக்கொண்டு அவ்வரனையே சரணமாகவடைந்து வணங்குகின்றோம். **(6)**

**एकः कुमारमभजत्सुतरामनङ्ग मन्यः**
**प्रयाति किल शक्तिधरं कुमारम् ।**
**कोवानयो रधिकः इत्यनुचिन्त्य वृद्धाः**
**सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥७॥**

**ஏகஃ கூமாரமஹஜத்ஸூதராமநங்க மந்யஃ**
**ப்ரயாதி கில ஶக்திதரம் கூமாரம் ।**
**கொ வாநயொ ரயிகஃ இத்யநுசிந்த்ய வ்ருத்தாஃ**
**ஸத்யம் ப்ருவந்து தமிமம் வயமாஶ்ரயாமஃ ॥எ॥**

**ஏகஃ குமாரமப$^{4}$ஜத்ஸுதராமனங்க$^{3}$ மன்யஃ**
**ப்ரயாதி கில ஶக்தித$^{4}$ரம் குமாரம் ।**
**கோவானயோ ரதி$^{4}$கஃ இத்யனுசிந்த்ய வ்ருத்$^{3}$தா$^{4}$ஃ**
**ஸத்யம் ப்$^{3}$ருவந்து தமிமம் வயமாஶ்ரயாமஃ ॥7॥**

## மொழிபெயர்ப்பு.

**மின்னுர் பூண்க ளிலங்கொருவன் மிகவு மனங்க மானுனைத்**
**தன்னேர் மகனுத் தானுற்றுன் றன்போ லொருவன் ருரணியில்**
**ஒன்னுர் குடரை மாலையிடு மொளிர்வேற குமரன் றனையுடையா**
**னினனேதம்மிற் சிறந்தவனயா ரிசைத்தாற்பெரியீரிறைஞ்சுதுமே.**

## பதப்பொருள்

| | | |
|---|---|---|
| **ஏக:** | = | ஒருவன், |
| **ஸுதராம்** | = | மிகவும், |
| **அனங்க$^{3}$** | = | அங்கமில்லாதவனுக விருக்கிற |

| | | |
|---|---|---|
| **குமாரம்** | = | மகனை, |
| **அபஜத** | = | அடைந்தான், |
| **அந்ய:** | = | மற்றொருவன், |
| **ஶக்தித⁴ரம்** | = | வேற்படையைத் தரித்திருக்கிற, |
| **குமாரம்** | = | குமாரனை, |
| **ப்ரயாதிகில** | = | அடைந்திருக்கிறனல்லவா, |
| **அநயோ:** | = | இவ்விருவருக்குள், |
| **அதிக:** | = | சிறந்தவன், |
| **கோவா:** | = | எவன், |
| **இதி** | = | இதனை, |
| **அனுசிந்த்ய** | = | ஆலோசித்து, |
| **வ்ருத்³தா⁴:** | = | பெரியவர்கள், |
| **ஸத்யம்** | = | உண்மையை, |
| **ப்³ருவந்து** | = | சொல்லலாம் சொன்னால், |
| **தமிமம்** | = | உங்களாற் சொல்லப்பட்ட அந்த இவனை, |
| **வயம்** | = | நாங்கள், |
| **ஆஶ்ரயாம:** | = | ஆஶ்ரயிக்கின்றோம். |

## பொழிப்பு

ஒருவன் அனங்கனென்று சொல்லப்படுகிற மகனையுடையவனாக இருக்கின் றன், அவனைப்போன்ற இன்னொருவன் சக்திதரனாகிய மகனையுடையவனாக இருக்கி ன்றன்; இவ்விருவர்களிற் சிறந்துள்ளவனை பெரியவர்களே நீங்கள் சொன்னால் நாங்களந்த மகாபுருஷனைச் சரணமாக அடைகின்றோம்.

## விதப்பு.

அனங்கனை மகனாகவுடையானென்ற தரியை, அது அவ்வரி அவ்வண்ணமு டையவனாக விருத்தலால்

ஹரி தனக்குப் புத்திரப்பேறில்லாதிருந்தகாலத்தில் அரனை நோக்கி அநேகாலந் தவஞ்செய்தனன் ஹரியின் தவத்துக்கிரங்கி ஹரன் உமாதேவியாருடன் அரிக்குக் காக்ஷியளித்தனன். உடனே அவ்வரி வணங்கி வேதமந்த்ரிங்களாற் றுதித்தனன். சிவபெருமன், ஹரியே! நின் தவத்துக்குந்தேம், காக்ஷியளித்தேம், வரங்கேள் தருகின்றோம் என்றனர். திருமால், சுவாமின்! கிருபைக்கடலாகிய தேவரீரது கருணையால் அடியேனொரு புத்திரனுடையவனாக வேண்டுமென்றனன்.

ஹரன் ஹரியைப் பார்த்து நீ யவ்வாறே மகனையுடையவனாவை என்றனன். அப்பொழுது அருகிலிருந்த உமாதேவியார், நாரண! நின்னிடத்துண்டாகும் அம்மகன் இவ்விறைவனாலேயே இறந்துபடுவானாக என்றனள். உடனே ஹரி, ஹே கல்யாணீ! அடியேன் சிவபெருமானது வருகையா லானந்தம் கொண்டு நின்னை வணங்காதிருந் தேனே அன்றி அகம்பாவத்தாலன்று. ஆதலா லெனதிப்பெரிய குற்றத்தை மன்னித்து,

"*எண்ணில்கோடிசிரங்கள்கரங்களிலங்கவுலப்பிலதாங்*
*கண்ணிறைதீயுலகெங்கும்வஊந்திடமூச்சுமிழ்காலறைய*
*மண்ணொடுவிண்ணிஊநுகரவிரித்திடுவாய்புகையாயெழவே*
*விண்ணவர்முனிவரஊந்துநடுங்கினர்மேவவுமிடமிலதாய்*"
என்று பாகவதத்தும் வருதலாலுணர்க.

ஒருவன் சங்கரனென்று பிரஸித்தியானவனென்றது - ஹரஊ, அது அவ்வரன் அவ்வாறு ஜீவர்களுக்கு இன்பங் கொடுக்கின்றவஞதலால்.

சங்கரன் - சுகத்தைச் செய்பவன். ஹரியடைந்த அகமபாவமுதலியவைகளா லும், ஆலாலவிஷமுதலியவைகளாலும் ஆன்மகோடிகளுக்குண்டான துனபங்கஊ ஹரனகற்றி இன்பத்தை யுண்டாக்கிஞனென்று நூல்களில் விஸ்தாரமாகக் கேட்கப்படுகின்றன. இதஊ -

என்னும் பைப்பலாதசுருதியாலும்,

"*இன்பந்தருவன்குயிலேயேழுலகும்முழுதாளி*
*யன்பனமுதளித்தூறுமானந்தன்வான்வந்ததேவன்*
*நன்பொன்மணிச்சுவடொத்தநற்பரிமேல்வருவாஊக்*
*கொமபின்சுழற்றுங்குயிலேகோகழிநாதஊக்கூவாய்*"
என்னுந் தமிழ்வேத்ததாலும், இதர நூற்பிரமாணங்களாலும் உணர்க.

## தாத்பரியம்.

ஹரி ஜனங்கஊ வருத்தி ஜஞர்த்தனஞஞன், ஹரன் ஜனங்கஊச் சுகப்படு த்திச் சங்கரன் ஆஞன் என்பதாம்.

## தாரதம்மியம்.

ஜனங்கஊப் பீடிப்பவஊவிட ஜனங்கஊச் சுகப்படுத்துபவன் சிறந்தவஞத லால், நாங்களும் சனங்கஊப் பீடிக்கிற ஜஞர்த்தன நாமஞன ஹரியை அப்பிரதான மாக வகற்றிச் சனங்களுக் கின்பத்தைக் கொடுக்கின்ற ஹரஊப் பிரதானமாகக்கருதி வணங்குகின்ரேும். **(28)**

**भक्तं बलिं पुनरधः कृतवनि हैको**
**भक्तं कुबेरमकरोदधिकं श्रियाऽन्यः ।**
**कोवानयोरधिकः इत्यनुचिन्त्य वृद्धाः**
**सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥ २९ ॥**

ஹக்ஷதம் ஙஸ்லிம் ஶுநரய: க்ரூதவநி ஹைஹகொ
ஹக்ஷதம் கூஙெரஜகரொதூயிகூம் ஶ்ரியா(அ)ந்ய: ।
கொவாநயொரயிக: ஐத்யநுஶிந்த்ய வ்ருஷா:
ஸத்யம் ஞ்ருவந்து தஜிஜம் வயஜாஶ்ரயாஜ: ॥ உகூ ॥

**ப$^{4}$க்தம் ப$^{3}$லிம் புனரத$^{4}$: க்ருதவனி ஹைஹகோ**
**ப$^{4}$க்தம் குபே$^{3}$ரமகரோத$^{3}$தி$^{4}$கம் ஶ்ரியா(அ)ன்ய: ।**
**கோவானயோரதி$^{4}$க: இத்யனுசிந்த்ய வ்ருத்$^{3}$தா$^{4}$:**
**ஸத்யம் ப்$^{3}$ருவந்து தமிமம் வயமாஶ்ரயாம: ॥ 29 ॥**

## மொழிபெயர்ப்பு.

**தன்றுள் வணங்கும் பலி தன்னைத் தரைக்கீ ழாரத தாளூன்றி**
**நின்று ெருவன் மற்றெருவன் நிகரி லடியை நேசித்த**
**குன்று வியலான் றனைவசுவிற் குறையாக் குபேர ஞக்கிஞன்**
**என்று லிவருட் சிறந்தவன்யா ரிசைத்தாற் பெரியீ ரிறைஞ்சுதுமே.**

## பதப்பொருள்.

| | | |
|---|---|---|
| **ஏக:புந:** | = | ஒருவஞனல், |
| **பக்தம்** | = | பக்தஞன, |
| **பலிம்** | = | பலியை, |
| **இக** | = | இந்த உலகத்தில், |
| **அத:க்ருதவாந்** | = | கீழே போகச்செய்தான், |
| **அந்ய:** | = | இன்னெருவன், |
| **பக்தம்** | = | பக்தஞன, |
| **குபேரம்** | = | குபேரஊன, |
| **அதிக:** | = | மிகுதியான, |
| **ஸ்ரீயா:** | = | சம்பத்துடையவஞக, |
| **அகரோத்** | = | செய்தான்; |
| **அநயோ:** | = | இவ்விருவருக்குள், |
| **அதிக:** | = | சிறந்தவன், |
| **கோவா** | = | யாவன்? |
| **இதி** | = | இதஊன, |
| **அநுசிந்தியா** | = | ஆலோசித்து, |
| **வ்ருத்$^{3}$தா$^{4}$:** | = | பெரியவர்கள், |
| **ஸத்யம்** | = | உண்மையை, |
| **ப்$^{3}$ருவந்து** | = | சொல்லலாம் சொன்ஞல், |
| **தமிமம்** | = | அந்த விவஊன, |
| **வயம்** | = | நாங்கள், |
| **ஆஶ்ரயாம:** | = | ஆஶ்ரயிக்கின்ரேம். |

## பொழிப்பு.

ஒருவன் அன்பனுன மாவலியை இந்த உலந்த்திற் கீழே போகச் செய்தான், இன்னொருவன் அன்பனுன குபேரஊ மிகுதியான சம்ந்த்துடையவனுக செய்தான், இவ்விருவரிற் சிறந்தவஊப் பெரியவர்களான நீங்கள் உண்மையாகச் சொன்னுல், நாங்களந்த மஹாபுருஷஊச் சரணமாகவடைந்து வணங்குகின்றேம்.

## விதப்பு.

ஒருவன் பக்தனுன பலியைக் கீழேபோக்ச்செயதானென்றது - ஹரியை, அது அவ்வரி அவ்வாறு செய்தமையால்.

மாவலி ஹரியினிடத்து அன்புள்ளவன், இவன் தனது குலப்பகைஞர்களாகிய தேவர்களிடத்திலன்றிப் பிறரிடத்தி லதிக பிரியமுடையவனுகவிருந்தவன், அவனெ ருகாலத்திலொரு யாகஞ்செய்ய வுத்தேசித்தது யாகாரம்பஞ்செய்து யாகம் நடத்திக் கொண்டிருக்குங்காலத்துத் தேவர்களின் தூண்டுதலா லரி யொரு குள்ளப்பிராமணப் பிரமசாரியாய் அம்மாவலியின் யாகசாஊயை யடைந்தனன. உடனே யாக தீக்ஷை யுடனிருக்கும் பலிச்சக்கரவர்த்தி வந்த வந்தணஊ யுபசரித்தனன். அப்பொழுது அந்தணனுகிய ஹரி நானின்ஊ வெகு நல்லவனெனறு கேள்வியுற்று வந்தேன், வந்த எனக்குத் தவமியற்றவிருத்தற்கு மூன்றடிமண் வேண்டும், நீ தருதியோவென, அன்னேன் அவ்வாறே தருகின்றேனென் றுரைத்துத் தாரை வார்த்தனன். தாரை நீரைக் கையிலேற்றவுடனே குள்ளனுக நின்ற ஹரி நீண்ட வுருவுடையனுகித் தனதிரண்டு காலடிகளால் மூவுலகங்கஊயும் அளந்து மூன்றுவதடி மண்ணெங்கெ ன்றதற்கு, மாவலி அண்ணலே! மூன்றுவதடிக்கிடம் என்றஊ என்றுரைத்து வணங்கினன். பின்ன ரம்மாயோ னவஊ வருணபாசத்தாற் கட்டி வருத்தினுன். இதஊ யுணர்ந்துவந்து துதித்த பிரகலாதன் பொருட்டு அம்மாவலியை விட்டு இனி நீ இங்கிராதே கீழுலகத்திலிரு என்று அவஊக் கீழ்நிஊயில் இருக்குமாறு புரிந்த னன். இதஊ -

"*உரவுநீருலகமெல்லாமோரடியாயதோங்கும்*
*இருவிசும்படியொன்றுயதேஊயோரடிமற்றெங்ஙன்*
*தருதிநீதாராயென்னிற்சார்குவைநரகமென்னு*
*வருணபாசத்தால்வீக்கமாவலிகட்டுண்டானுல்.*

*குருவெகுண்டதனுற்புன்கண்குறுகினன்போலுமென்னுப்*
*பிரகலாதப்பேரன்பன்பெருமஊக்கண்டுநெஞ்சம்*
*உருகுறப்புளகமெய்தியுவப்பினேடேத்தாநிற்ப*
*மருவிரிதுளவமாஊமலரவன்வழந்திச்சொல்வான்.*

*உன்பதநீரினுட்டியுற்றநீர்தஊயிற்றுங்கி*
*மன்பெருஞ்செல்வமெல்லாம்வழங்குமாவலிதானென்றும்*

*இன்பமேபெறுதலல்லாலிடருற்றகியாவன்கொல்லோ*
*அன்பனென்றுரைத்துப்பாசமவ்வழிநீக்கினுனல்.*

*வீக்கியவருணபாசம்விட்டொழிந்தவுணர்வேந்தன்*
*மாக்கண்வெம்முலேயாள்செய்யமலர்மகள்கொழுநபச்சைத்*
*தேக்கமழ்துளவத்தாரோய்செப்புமோரடியென்சென்னி*
*மீக்கண்வைத்தளத்தியென்னவிமலனங்குவந்துவிள்ளும்*" என்று பாகவத்ததும்,

"*மன்னிலங்குபாரதத்துத்தேரூர்ந்துமாவலியைப்*
*பொன்னிலங்குதிண்விலங்கில்வைத்துப்பொருகடல்சூழ்*
*தென்னிலங்கையீடழித்ததேவர்க்கிதுகாணீர்*
*என்னிலங்குசங்கோடெழில்தோற்றிருந்தேனே*"
என்று நாலாயிரப்பிரபந்தததும வருதலேக்கொண்டுணர்க.

ஒருவன் பத்தனுன குபேரனேச் சகலசம்பத்தும் உடையவனுகச் செய்தா னென்றது - ஹரனே, அது அவ்வரன் அவ்வாறு தன் பத்தனுன குபேரனுக்குச் சகல செல்வங்களேயுங் கொடுத்தலால்.

விஸ்ரவஸ் மகரிஷியின் சந்ததியான வைச்ரவணன் என்னும் குபேரன் சிவதீ க்ஷையுடன் சித்தவடமென்று வழங்குகின்ற சித்தவடக்ஷேத்திரத்தில் ஹரனே வழிபட்டு அன்புபாராட்டிப் பூசித்தனன். அவனன்புக்கிரங்கிய ஹரன் அவனுக்கு வடதி சையின் ஆதிபத்தியமும, நவநிதி நாயகத்துவமும், யக்ஷாதிபதித்துவமும், நரவாகன மும், இன்னம வேண்டிய ஆயுதவாகனுதிகளும் அளித்தனன். இதனே-

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

என்று சிவரகஸ்யகணடத்தும்,

"*சித்தவடச்சிததேசுரர்பொற்சேவடியெண்ணிப்*
*பத்திபயக்கச்சென்றுகுபேரன்பணிதந்தான்*
*அத்தனேயொக்குந்தோழமைகொண்டானருள்பெற்றுன்*
*நத்தமுதற்கோமாநிதியெல்லாநனிபெற்றுன்.*

*எண்ணிநினைந்தவரம்பலயாவையுமெய்துற்றுன்*
*மண்ணியபுட்பகம்வாகனமாகவழங்குற்றுன்*
*றிண்ணியவெங்கதையாயுதமெய்துசிறப்புற்றுன்*
*அண்ணனெடுங்குடை யுத்தரதேயமளிக்கின்றுன்."*

என்று கந்தபுராணத்தும் வருதலைக்கொண்டுணர்க.

## தாத்பரியம்.

ஹரி தன் பக்தனுன பலியைக் கீழே தள்ளினுன், ஹரன் தன் பக்தனுன குபேரனை கௌரவப்படுத்தினுன் என்பதாம்.

## தாரதம்மியம்.

தன்னிடத்திலன்புவைத்த வொருவனை எவ்வளவு தாழ்ந்த தன்மையி னிற்பவனும் வஞ்சித்துக் கீழ்ப்படுத்த மாட்டான். இது இவ்வாறிருக்க, இவ்வரி தன்னை வழிவழி யடிமையாக வணங்கு மரபில் வந்தவனும் நீதிமானுமாகிய மாவலியைக் கீழ்ப்படுத்தியது எவ்வளவும் உசிதமான விஷயமல்ல. தன்னை வணங்கிய குபேரனுக்கு ஐசுவரியாதிகளை யளித்த ஹரன் மாவலி விஷயத்தி லிழிவு புரிந்த ஹரியைவிட உயாந்தவனெனபது சொல்லாமலே யமைந்த விஷயம். ஆதலால் அன்பன் விஷயத்திற் கெடுதி புரிந்த ஹரியை அப்பிரதானமாக அகற்றி அன்பன்விஷயத்திலுயாவு புரிந்த ஹரனைச் சிறந்தவனுக வறிந்து நாங்களந்த ஹரனையே சரணமாக அடைந்து வணங்குகின்றேம். **(29)**

**व्याध्यादिनीचहृतनैजवधूक एको**
**व्याधायितोपि निगमश्वभिराश्रितोऽन्यः ।**
**कोवानयोरधिकः इत्यनुचिन्त्य वृद्धाः**
**सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥ ३० ॥**

வ்யாத்⁴யாதி³நீசஹ்ருதநைஜவதூ⁴க ஏகோ
வ்யாதா⁴யிதோபி நிக³மஶ்வபி⁴ராஶ்ரிதோ(அ)ன்ய: ।
கோவானயோரதி⁴க: இத்யனுசிந்த்ய வ்ருத்³தா⁴:
ஸத்யம் ப்³ருவந்து தமிமம் வயமாஶ்ரயாம: ॥ ௩௦ ॥

**வ்யாத்⁴யாதி³நீசஹ்ருதநைஜவதூ⁴க ஏகோ**
**வ்யாதா⁴யிதோபி நிக³மஶ்வபி⁴ராஶ்ரிதோ(அ)ன்ய: ।**
**கோவானயோரதி⁴க: இத்யனுசிந்த்ய வ்ருத்³தா⁴:**
**ஸத்யம் ப்³ருவந்து தமிமம் வயமாஶ்ரயாம: ॥ 30 ॥**

## மொழிபெயர்ப்பு.

**பண்டங் கிளிமென் மொழிமனைமார பலரை வியாதப் பாதகர்கள்**
**கண்டங் கடையப் பெற்றவனுய் கண்டா னெருவன் கரையொருவன்**
**புண்டங்கிலைவேல்வேடுவனுயப்போந்துமறைநாயொடுபொலிந்தான்**
**எண்டங் கிவருட் சிறந்தவன்யா ரிசைத்தாற்பெரியீ ரிறைஞ்சுதுமே.**

## பதப்பொருள்.

| | | |
|---|---|---|
| **ஏக:** | = | ஒருவன், |
| **வ்யாத்⁴யாதி³நீச ஹ்ருதஜைஜவதா⁴க** | = | வேடர்முதலிய நீச்சனங்களால் அபகரிக்கப்பட்ட தன்னதான மனைவியரை யுடையவன், |
| **அந்ய:** | = | இன்னொருவன், |
| **வ்யாதாயிதோபி** | = | வேடனுனலும், |
| **நிக³மஶ்வபி⁴:** | = | வேதங்களாகிய நாய்களாலே, |
| **ஆஶ்ரித:** | = | ஆச்ரயிககப்பட்டவன், |
| **அநயோ:** | = | இவ்விருவருக்குள், |
| **அதிக:** | = | சிறந்தவன், |
| **கோவா** | = | யாவன்? |
| **இதி** | = | இதனை, |
| **அநுசிந்தியா** | = | ஆலோசித்து, |
| **வ்ருத்³தா⁴:** | = | பெரியவர்கள், |
| **ஸத்யம்** | = | உண்மையை, |
| **ப்³ருவந்து** | = | சொல்லலாம் சொன்னல், |
| **தமிமம்** | = | அந்த விவனை, |
| **வயம்** | = | நாங்கள், |
| **ஆஶ்ரயாம:** | = | ஆஶ்ரயிக்கின்றேம். |

## பொழிப்பு.

ஒருவன் தன் மனைவியரை வேடர் முதலிய இழிஞர்களு மபகரிக்கு மியல் பின்னுயினன், இன்னெருவன் தான் வேடனுனலும் வேதங்களாகிய நாய்களாலே ஆச்ரயிக்கப்பட்டவனுகவிருக்கின்றன்; இவ்விருவரிற் சிறந்தவனைப் பெரியவர்களான நீங்கள் சத்தியமாகச் சொன்னல், நாங்களந்த மஹாபுருஷனைச் சரணமாகவடைகின்றேம்.

## விதப்பு.

ஒருவன் வேடர் முதலிய இழிஞர்களாலே அபகரித்த மனைவியரை யுடையவனென்றது - ஹரியை, அது அவ்வரி அவ்வண்ணம் வேடர்களா லபகரிக்கப்பட்ட மனைவியரை யுடையவனுதலால்.

ஹரி கண்ணனுகத் தோன்றி இறந்து பட்டபினபு, அவன் மைத்துனனுன பார்த்தன் அக்கண்ணன் மனைவியரிற் றீயில் விழுந்திறந்தவர்கள் தவிர வுள்ள மற் றையவர்களை அழைத்துக்கொண்டு அத்தினபுரியைக் கருதிவருங்காலத்தி லிடையி லொரு விடத்திற் றங்கியிருந்த வொரு இராத்திரியில் அநேகம் வேடர்களான திருட ர்கள் வந்து ஆளுக்கொருத்தியை யிழுத்துக்கொண்டு போய்விட்டார்கள். பின்னர் அவவேடர்களுடன் போர்புரியத் திறமற்றவனுகப் பார்த்தனும் தன்னூரடைந்தனன் இதனை -

"ஈரெண்ணுயிராமுதலேழைமார்களைச்
சீரிலாவேடுவர்சினத்திற்கைக்கொளப்
போரினுன்மிகுந்தக்காண்டீவம்பூங்கணை
வீரமோடென்வலிவிசையங்கைக்கொடு"
என்று ஸ்ரீ பாகவதத்தில் வருதலைக்கொண்டுணர்க.

ஒருவன் வேடனுனலும் வேதங்களாகிய நாய்களாற் சூழபெற்றுனென்றது - ஹரனை, அது அவ்வரன் அவ்வாறிருந்திருத்தலால்.

ஹரன் பாசுபதாத்திரத்தைக்கருதித் தன்னைக் குறித்துக் காமியார்த்த தவம்புரிந்த அருச்சுனனுக் கருள்புரியும்பொருட்டு வேடரூபமடைந்து சென்றபோழ்து, வேதங்களும் நாயரூபமடைந் துடன்வரச் சென்றனன் இதனை -

[illegible] ॥ என்று

என்று ஸ்ரீமஹாபாரத்ததும்,

"மிக்கவனறவஞ்சோதிப்பானவேட்டுவக்கோலமாகித்
திக்கெலாமனங்கோலந்தொடருமோர்தேவதேவர்
மைக்குழலன்னம்பின்னேதொடரமற்றெருகோலத்தைப்
புக்குந்த்தொடர்வார்போலப்புகுந்தனர்பொருவில்லேந்தி"
என்று குற்றுலபுராணத்தும்,

“அநந்தவேதமுமிறைவனேவலினுன்ஞானிகளாயருகுசூசு
அநந்தகோடியிற்கோடிகணநாதர்வேட்டுவராயருகுபோத
வநந்தனுலினித்தரிக்கவரிதரிதிப்பூதலமென்றமரர்கூற
வநந்தமாமுகமாகியடிச்சுவடுநோக்கினுனடவியெல்லாம்.”
என்று பாரதத்தும் வருதலைக்கொண்டுணர்க.

## தாத்பரியம்.

ஹரியின் மஜனவியரை வேடர் முதலிய இழிந்தவர்கள் இழுத்துக்கொண்டு போயிஞர்கள், ஹரன் வேடவுருவடைந்தும் வேதங்களாகிய நாயகளாற் சூழப்பெற்ருன் என்பதாம்.

## தாரதம்மியம்.

நல்ல ஜாதியர்களாற் கைக்கொள்ளப்பட்டாலும் ஒருவன் மஜனவியைப் புகழுவோ ரிவ்வுலக முதலிய வெவ்விடங்களிலு மில்ஜல, அநேக மஜனவியரை வேடர் முதலிய நீசஜனமிகளால் அபகரிக்கப்படும் துர்ப்பாக்கியத்திஜனயுடையவஜன இந்த உலகத்தில் எவன் சிறந்தவஞக வுள்ளவனென்று கூறுவான். இதஜன யுத்தேசிக் குங்கால் வேடர் முதலிய நீசர்களா லபகரிக்கப்பட்ட மஜனவியரையுடைய ஹரி இவ்விஷயத்திற் பலராலும் இகழப்பட்டவஞகின்ருன்; வேடரூபத்தை யடைந்தாலும், ஹரன் கௌரவஹானி யில்லாமலிருத்தலால், இவ்விஷயத்திற சிறந்தவஞகின் ருன். ஆதலால் நாங்கள் மஜனவியைப் பறிகொடுத் திழிவடைந்த ஹரியை அப்பிரதானமாக வொதுக்கிக கிராதரூபத்திலும் மஜனவியுடனும், வேதங்களான நாய் களுடனுமிருக்கும் ஹரஜனச் சரணமாக வடைந்து வணங்குகின்ருேம்.- என்றவாறு.

(30)

**एकस्य सेवकजना भृशदग्धगात्रा**
**अन्यस्य शुभ्रमृदुपूतविभूतिरेखाः ।**
**को वानयोरधिकः इत्यनुचिन्त्य वृद्धाः**
**सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥ ३१ ॥**

**ஏகஸ்ய ஸெவகஜநா ஹ்ருஶஜ்ஹுாக்ரா**
**கநுஸ்ய ஶுஹ்ரஜ்ஶுவுதவிஹுதிரெவாஃ ।**
**கொவாநயொரயிகஃ ஐத்யநுவிந்த்ய வ்ருஜாஃ**
**ஸத்யம் ஸ்ருவநு தமிமம் வயமாஶ்ரயாமஃ ॥ ௩க ॥**

**ஏகஸ்ய ஸேவகஜனா ப்4ருஶத3க்3த4கா3த்ரா**
**அன்யஸ்ய ஶுப்4ரம்ருது3பூதவிபூ4திரேகா2: ।**
**கோ வானயோரதி4க: இத்யனுசிந்த்ய வ்ருத்3தா4:**
**ஸத்யம் ப்3ருவந்து தமிமம் வயமாஶ்ரயாம: ॥ 31 ॥**

## மொழிபெயர்ப்பு.

மணிநீர் வையத் தொருவனடி மருவிச் சேவை புரியடியர்
திணிதோண் முதல் விடமெல்லார் தீயாற் சுட்டுத் திரிதருவோர்
கணிசே ரொருவன் றிருவடியர் கனமா நீறு காணுதலோர்
எணிலா ரிவருட் சிறந்தவர்களிசைத்தான் பெரியீரிறைஞ்சுதுமே.

## பதப்பொருள்.

| | | |
|---|---|---|
| **ஏகஸ்ய** | = | ஒருவனுடைய, |
| **ஸேவகஜந:** | = | அடிமைகள், |
| **ப்⁴ருஶத³க்³த⁴கா³த்ர:** | = | மிகவும் சுடப்பட்ட சரீரமுடையவர்கள். |
| **அந்யஸ்ய** | = | மற்றொருவனுடைய, |
| **ஸேவகஜநா:** | = | அடிமைகள், |
| **ஶுப்⁴ரம்ருது³பூதவி பூ⁴திரேகா²:பூத** | = | வெண்மையாயும் மிர்துவாயும், பரிசுத்தமாயுமிருக்கிற விபூதிரேகையோடு கூடினவர்கள், |
| **அநயோ:** | = | இவ்விருவருக்குள், |
| **அதிக:** | = | சிறந்தவன், |
| **கோவா** | = | யாவன்? |
| **இதி** | = | இதனை, |
| **அநுசிந்தியா** | = | ஆலோசித்து, |
| **வ்ருத்³தா⁴:** | = | பெரியவர்கள், |
| **ஸத்யம்** | = | உண்மையை, |
| **ப்³ருவந்து** | = | சொல்லலாம் சொன்னால், |
| **தமிமம்** | = | அந்த விவனை, |
| **வயம்** | = | நாங்கள், |
| **ஆஶ்ரயாம:** | = | ஆஶ்ரயிக்கின்றோம். |

## பொழிப்பு.

ஒருவனுடைய பக்தசனங்கள் சுடப்பட்ட சரீரத்தினையுடையவர்கள், மற்றொருவனுடைய பத்தசனங்கள் மிகவும் வெண்மையான பஸ்மதாரிகளாக வுள்ளவர்கள், இவ்விருவர்களுட் சிறந்தவனை இவனென்று பெரியவர்களான நீங்கள் கூறுவீர்களானால், நாங்களந்த மஹாபுருஷனைச் சரணமாக வடைகின்றோம்.

## விதப்பு.

ஒருவனுடைய பக்தஜனங்கள் சுடப்பட்ட சரீரங்களையுடையவர்களென்றது - ஹரியை, அது அவ்வரி பக்தர்கள் அவ்வாறு சுட்டுக் கொள்ளுதலால். இதனை -

"*சென்னியோங்குதண்திருவேங்கடமுடையாயுலகு*
*தன்னைவாழநின்றநம்பிதாமோதராசதிரா*
*என்னையுமென்னுடமையுநின்சக்கரப்பொறியொற்றிக்கொண்டு*
*நின்னருளேபுரிந்திருந்தேனினியென்திருக்குறிப்பே*'

என்னும் நாலாயிரப்பிரபந்தத்தாலுணர்க.

ஒருவனுடைய பக்தசனங்கள வெண்மையும் மிருதுவுந் தூய்மையுமானதான விபூதியைத் தரிக்கப்பெற்றவர்களாக விருக்கின்றுர்கள் என்றது - ஹரஊன, அது அவ்வரபத்தர்கள் அவ்வாறு தரிததுக் கொள்ளுதலால். இதஊன -

"எவரேனுந்தாமாகவிலாடத்திட்ட திருநீறுஞ்சாதனமுங் கண்டாலுள்கி, யுவரா தேயவரவரைக்கண்டபோதேயுகந்தடிமைத்திறநிஊனந்தங்குவந்து நோக்கி, யிவர் தேவ ரவர்தேவரென்று சொல்லியிரண்டாட்டாதொழிந்தீசன்றிறமேபேணிக், கவராதேதொ ழுமடியார் நெஞ்சினுள்ளேகன்றுப்பூர்நடுதறியைக்காணலாமே" என்று வருந் திரவிட சூகத்த்தாலுணர்க

## தாத்பரியம்.

ஹரிபத்தர் சுடப்பட்ட உடம்பினர், சிவபத்தர் விபூதிதாரண சரீரிகள் என்ந்தாம்.

## தாரதம்மியம்.

மிகவுஞ் சுடப்பட்ட சரீரத்திஊனயுடைய பக்தர்கஊள யுடையவஊனக்காட்டிலும், மிகவும் பரிசுத்தமான விபூதியைத் தரித்த பக்தர்கள் கஷ்டமில்லாதவர்களாதலாலே சுடப்பட்ட தேகங்கஊள யுடையவர்கஊள பக்தர்களாகவுடையவஊனவிட தூய்மையான விபூதிதாரிகளான பத்தர்கஊளயுடையவன் சிறந்தவனுதலால், இவ்விஷயத்திற் றுழ்வடைந்த ஹரியை அப்பிரதானமாக வகற்றிச் சிறந்த ஹரஊன நாங்கள் வணங்கு கின்றேம். - என்றவாறு. **(31)**

**एको नितान्तमभवद्वटपत्रशायी**
**ह्यन्योहि तादृशमहावटमूलवासी ।**
**कोवानयोरधिकः इत्यनुचिन्त्य वृद्धाः**
**सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥ ३२ ॥**

**ஏகொ நிதாஜஶஹவஉடவகுஶாயீ**
**ஹ்யநொ்ாஹி தாஜ்ஶஉஹாவடஶூஶுவாஸீ ।**
**கொவாநயொரயிகஃ ஐதநுஊிஜ வ்ஞாஃ**
**ஸதஂ ஶுவஜு தஶிஂ வயஶாஶுயாஶஃ ॥ ௩௨ ॥**

**ஏகோ நிதாந்தமப⁴வத்³வடபத்ரஶாயீ**
**ஹ்யன்யோஹி தாத்³ருஶமஹாவடமூலவாஸீ ।**
**கோவானயோரதி⁴க꞉ இத்யனுசிந்த்ய வ்ருத்³தா⁴꞉**
**ஸத்யம் ப்³ருவந்து தமிமம் வயமாஶ்ரயாம꞉ ॥ 32 ॥**

## மொழிபெயர்ப்பு.

**தரள மிப்பி யீனறிறைக்குந் தணணீ ருலகிற் சாரொருவன**
**விரள மொன்றி வடத்திஇலயில் வீழ்வா ஞவான் வேறெருவன்**
**கரள மொன்று களத்தோடக்கல்லா னிழலின கண்ணுறுவான்**
**சரள மொனற லெவரிடைநீர் சாற்றிற் பெரியீர் தாழுதுமே.**

## பதப்பொருள்.

| | | |
|---|---|---|
| **ஏக:** | = | ஒருவன், |
| **நிதாந்தம்** | = | எப்பொழுதும், |
| **வடபத்ரஶாயீஅ ப⁴வத்³** | = | ஆலிஇலயிற்படுத்துக்கொள்ளுகிறவஞஞன், |
| **அந்ய:** | = | இன்னெருவன், |
| **தாத்³ருமமஹாவட மூலவாஸீ** | = | அப்படிப்பட்ட ஆலமரத்தினடியிலிருக்கிறவஞக |
| **அபவத்** | = | ஆஞன், |
| **அநயோ:** | = | இவ்விருவருக்குள், |
| **அதிக:** | = | சிறந்தவன், |
| **கோவா** | = | யாவன்? |
| **இதி** | = | இதஊன, |
| **அநுசிந்தியா** | = | ஆலோசித்து, |
| **வ்ருத்³தா⁴:** | = | பெரியவர்கள், |
| **ஸத்யம்** | = | உண்மையை, |
| **ப்³ருவந்து** | = | சொல்லலாம் சொன்ஞல், |
| **தமிமம்** | = | அந்த விவஊன, |
| **வயம்** | = | நாங்கள், |
| **ஆஶ்ரயாம:** | = | ஆஶ்ரயிக்கின்றேம். |

## பொழிப்பு.

ஒருவன் சதா ஆலிஇலயிற் கிடைப்பவஞகவாஞன், இன்னெருவன் அவ்வாலி னடியிலிருப்பவஞகவாஞன், இவ்விருவருக்குள் பெரியவர்களே! யாவன் சிறந்த வன்? நீங்கள் உண்மையைச் சொல்லுங்கள். நாங்கள் உங்களாற் சொல்லப்பட்ட அந்த மஹாபுருஷஊனச் சரணமாக வடைகின்றேம்.

## விதப்பு.

ஒருவன் எப்பொழுதும் ஆலிஇலயிற் கிடந்தானென்றது - ஹரியை, அது அவவரி அவ்வாறு கிடத்தலால். இதஊன -

"*பாலகனென்றுபரிபவஞ்செய்யேல்பண்டொருநாள்*

*ஆலினிஜலவளர்ந்தசிறுக்கனவனிவன்*
*மேலெழப்பாயந்துபிடித்துக்கொள்ளுமவெகுளுமேல்*
*மாஜலமதியாதேமாமதீவிரைந்தோடிவா"*

என்னு நாலாயிரப்பிரபந்தத்தாலுணர்க.

ஒருவன் அவ்வாலின் கீழிருந்தானென்றது - ஹரஜை, அது அவ்வரன் அவ்வாறிரந்த்தலால். இதஜை -

"ஓரானீழலொணகழலிரண்டு - முப்பொழுதேத்திய நால்வர்க்கொளிநெறி - காட்டிஜை" என்று திருஞானசம்பந்தப்பெருமான் றிருவாயமலர்ந்த திரவிடவேதத் தாலும்,

என்று உபநிஷத்துக் கூறுதலாலுணர்க.

## தாத்பரியம்.

ஹரி ஆலிஜலயிற் கிடந்தான், ஹரன் ஆனிழவி லிருந்தானென்பதாம்.

## தாரதம்மியம்.

ஒரு ஆலிலையிற் கிடந்து வீணே உறங்குபவஜைக்காட்டிலும், ஆலினடியில் ஞானேபதேசியாக இருப்பவன் சிறந்தவன் இதஞல் ஆலிஜலயிற் கிடந்த ஹரியை விட ஆலினடியிலிருந்த ஹரன் சிறந்தவஞதலால், இவ்விஷயத்திற் ருழ்வடைந்த ஹரியை அப்பிரதானமாகவகற்றி இவ்விஷயத்திற் சிறந்த ஹரஜைப் பிரதானமாக நியாயமுகத்தாலுணர்ந்து நாங்களந்த மஹாஞகிய ஹரஜைச் சரணமாக வடைந்து வாழ்கின்றேம். என்றவாறு. **(32)**

**एको दधौ सितमृदं तिलकं ललाटे।**
**ह्यन्यो दधौ हुतवहं तिलकं ललाटे।**
**को वानयोरधिकः इत्यनुचिन्त्य वृद्धाः**
**सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥ ३३ ॥**

**ஷகொ உயள ஷிதஜூஃம் திஃகஂ ஃஃாடெ ।**
**ஹாநெ௱ா உயள ஹுதவஹஂ திஃகஂ ஃஃாடெ ।**
**கொ வாநயொாயிகஃ ஐதாநுஷிஜூ வூஊாஃ**
**ஷதாஂ ஶுவஜூ தஜிஂ வயஜாஶ்ரயாஜஃ ॥ ௩௩ ॥**

**ஏகோ த$^{3}$தௌ$^{4}$ ஸிதம்ருத$^{3}$ம் திலகம் லலாடே ।**
**ஹ்யன்யோ த$^{3}$தௌ$^{4}$ ஹுதவஹம் திலகம் லலாடே ।**
**கோ வானயோரதி$^{4}$கஃ இத்யனுசிந்த்ய வ்ருத்$^{3}$தா$^{4}$ஃ**
**ஸத்யம் ப்$^{3}$ருவந்து தமிமம் வயமாஶ்ரயாமஃ ॥ 33 ॥**

## மொழிபெயர்ப்பு.

கொண்டற கச்சுக கிரிமுஜலயார் கோதை யிடத்திற் கூறெருவன்
மண்டுற் றிடுமோர் நெற்றியிஞன் மற்று மொருவன குற்றமிலா
தொண்டுற் றிடுமவ் வுதவகஜன ஒருநற் றிலத மாவுடையான்
கண்டுற் றிவருட் சிறந்தவஜனக் கரைந்தாற் பெரியீர் காணுதுமே.

## பதப்பொருள்.

| | | |
|---|---|---|
| **ஏக:** | = | ஒருவன், |
| **லலாடே** | = | நெற்றியில், |
| | | |
| **ஶிதம்ருதம்** | = | வெள்ஜள மண்ஜண, |
| **திலகம்** | = | திலகமாக, |
| **ததௌ** | = | தரித்தான், |
| **அந்ய:** | = | இன்னெருவன், |
| **ஹுதவம்** | = | அக்கினியை, |
| **லலாடே** | = | நெற்றியில், |
| **திலகம்** | = | திலகமாக, |
| **ததௌ** | = | தரித்தான், |
| **அநயோ:** | = | இவ்விருவருக்குள், |
| **அதிக:** | = | சிறந்தவன், |
| **கோவா** | = | யாவன்? |
| **இதி** | = | இதஜன, |
| **அநுசிந்தியா** | = | ஆலோசித்து, |
| **வ்ருத்$^{3}$தா$^{4}$ஃ** | = | பெரியவர்கள், |
| **ஸத்யம்** | = | உண்மையை, |
| **ப்$^{3}$ருவந்து** | = | சொல்லலாம் சொன்ஞல், |
| **தமிமம்** | = | அந்த விவஜன, |
| **வயம்** | = | நாங்கள், |
| **ஆஶ்ரயாமஃ** | = | ஆஶ்ரயிக்கின்றேம். |

## பொழிப்பு.

ஒருவன் சிலதாக வெள்ளை மண்ணை நெற்றியிலணிந்தான், மற்றொருவன் திலதமாக அக்கினியை நெற்றியிலணிந்திருக்கின்றான், இவ்விருவருட் சிறந்தவனைப் பெரியவர்களே நீங்கள் கூறினால், நாங்களந்த மஹாபுருஷனைச் சரணமாக உடைந்து வாழ்கின்றோம்.

## விதப்பு.

ஒருவன நெற்றியில் மண்ணைத்ததரித்திருக்கின்ற னென்றது - ஹரியை, அது அவ்வரி அவ்வாறு தரித்திருத்தலால். இதனை, -

“*பூப்பிட்டானைப்புரநதருளென்றுமுன்*
*கூப்பிட்டானைத்தன்குக்கியுட்கூவெலாம்*
*ஆப்பிட்டானையகிலகனந்தரைக்*
*காப்பிட்டானைக்காப்பிட்டனள்காரிகை*” என்று பாத்மோத்தரத்தும்,

"ஆவினீரதனால்மஞ்சனமாட்டியதினுறுமண்கொடுவிளக்கிச்
சாய்பன்னிரண்டுநாமமுஞ்சாத்திச்சதுமறையோதும்வேதியர்கள்
நாவின்மந்திரநீருடலெலாந்தெளித்துநவையில்கோதானமுநல்கிக்
காவிகொள்விழியார்கருப்புரதீபங்காட்டினர்கவினுரப்பலகால்"
என்று பாகவதத்தும் வருதலைக்கொண்டுணர்க.

ஒருவனக்கினியைத் திலகமாக வுடையவனாக விருக்கின்றானென்றது - ஹரனை, அது அவ்வரன் அவ்வாறு நெற்றியில் திலதம்போன்ற அக்கினிக்கண உடையவனாக இருத்தலால். இதனை -

என்று பைப்பலாத சுருதியிலும்,

“*சுற்றுமமரர்சுரபசிநின்றிருப்பாதமல்லால்*
*பற்றொன்றிலோமென்றழைப்பப்பரவையுணஞ்சையுண்டான்*
*செற்றங்கனங்கனைந்தீவிழித்தோன்றன்றில்லையம்பலவன்*
*நெற்றியிற்கண்கண்டகண்கொண்டுமற்றினிக்காணப்தென்னே*”
என்று திரவிடசுருதியிலும்,

"சந்தனக்களபந்துதைந்தநன்மேனித்தவளவெண்பொடிமுழுதாடும், செந்தழலுருவிற்பொலிந்தநோக்குடையதிருநுதலவர்கிடம்போலும், இந்தனவிலங்கலெறி புனந்தீப்படடெரிவதொததெழுநிலைமாட, மந்தணரழலோம்பலை புனற்களந்தையணி திகழாதித்தேச்சரமே" என்று திருவிசைப்பாவிலும் வருதலைக் கொண்டுணர்க.

## தாத்பரியம்.

ஹரி நெற்றியில மண்ணைத் தரித்தான், ஹரன் நெற்றியி லக்கினிக் கண்ணைத் தரித்தான் என்பதாம்.

## தாரதம்மியம்.

ஒருவன் சாமான்யமாக வெல்லாராலும் தரிக்கத்தக்க வொரு வஸ்துவைத் தரித்திருப்பானுயின் அவனை யாவரும் மதிப்பாகக்கொள்ளார்கள்; பிறராற் றரிக்க முடியாத வஸ்துவை ஒருவன் தரித்திருப்பானுயின் அவனை அனைவருஞ் சிறப்பாக வே கொள்வார்கள் என்பது நியாயமாதலால், கேவலம் மண்ணை நெற்றியிலணிந் துள்ள ஹரியை நாம் அந்த விஷயத்தில் எப்படி சிறந்தவனுகச் சொல்லலாம். இது எல்லாராலும் ஆகும் விஷயம் இதனு லிவ்விஷயத்திற் முழ்வடைந்த ஹரியை அப்பிரதானமாக அகற்றி, உயாந்த ஹரனை நாங்கள் வணங்குகின்றோம் - என்றவாறு.

**(33)**

**एको दधाति तुलसीदलमालिकां हृद्य**
**न्यो दधाति हि विधातृ कपालमालाम् ।**
**कोवानयोरधिकः इत्यनुचिन्त्य वृद्धाः**
**सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥ ३४ ॥**

**ஏகொ உயாதி துலஸீஉலஊாலிகாஂ ஹூஉ்ய**
**நெ்யா உயாதி ஹி வியாதூ கவாலஊாலாஂ ।**
**கொவாநயொரயிகஃ ஜத்யநுவிந்த்ய வூஊாஃ**
**ஸத்யஂ ஸ்ருவந்து தஊிஊஂ வயஊாஶ்ரயாஊஃ ॥ ௩௪ ॥**

**ஏகோ த$^{3}$தா$^{4}$தி துலஸீத$^{3}$லமாலிகாம் ஹ்ருத்$^{3}$ய**
**ந்யோ த$^{3}$தா$^{4}$தி ஹி விதா$^{4}$த்ரு கபாலமாலாம் ।**
**கோவானயோரதி$^{4}$கஃ இத்யனுசிந்த்ய வ்ருத்$^{3}$தா$^{4}$ஃ**
**ஸத்யம் ப்$^{3}$ருவந்து தமிமம் வயமாஶ்ரயாமஃ ॥ 34 ॥**

## மொழிபெயர்ப்பு.

**பச்சென்றெளிரும்வடத்திலையைப்பறித்துக்கட்டும்பலதொரைடயல்**
**வைச்சொன் றகலத் தானெருவன் வையந் தன்னை யீன்றபுதர்**
**உச்சந் தலைகள் பலவணியா வுகந்துதிரியு மொரு பெரியோன்**
**இச்சந் தர்களுட் சிறந்தவன்யா ரிசைத்தாற் பெரியீ ரிறைஞ்சுதுமே.**

## பதப்பொருள்.

**ஏக:** = ஒருவன்,

| | | |
|---|---|---|
| **ஹ்ருதி** | = | மார்பில், |
| **துலஸீத3லமாலிகாம்** | = | துளசியிலைமாலையை, |
| **த3தா4தி** | = | தரிக்கிறான், |
| **அந்ய:** | = | மற்றொருவன், |
| **விதா4த்ருகபாலமாலாம்** | = | பிரமர்களுடைய கபாலமாலைகளை, |
| **த3தா4தி** | = | தரிக்கிறானல்லவா, |
| **அநயோ:** | = | இவ்விருவருக்குள், |
| **அதிக:** | = | சிறந்தவன், |
| **கோவா** | = | யாவன்? |
| **இதி** | = | இதனை, |
| **அநுசிந்தியா** | = | ஆலோசித்து, |
| **வ்ருத்3தா4:** | = | பெரியவர்கள், |
| **ஸத்யம்** | = | உண்மையை, |
| **ப்3ருவந்து** | = | சொல்லலாம் சொன்னால், |
| **தமிமம்** | = | அந்த விவனை, |
| **வயம்** | = | நாங்கள், |
| **ஆஶ்ரயாம:** | = | ஆஶ்ரயிக்கின்றோம். |

## பொழிப்பு.

ஒருவன் மார்பிற் றுளசிமாலையை யணிந்திருக்கின்றான், இன்னொருவன் பிரமர்களின் கபாலங்களை மார்பிலணிந்து கொண்டிருக்கின்றான், இவ்விருவரில சிறந்தவனைப் பெரியவர்களாகிய நீங்கள் சொன்னால், நாங்களந்த மஹாபுருஷனைச் சரணமாகவடைந்து வாழ்கின்றோம்.

## விதப்பு.

ஒருவன் துளசிமாலையை மார்பிலணிந்திருக்கின்றானென்றது - ஹரியை, அது அவ்வரி அவ்வாறு தரித்திருத்தலால்.

பூர்வத்தில் ஶ்ரீகைலாயமலையில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானைத் தரிசிக்குமபொருட்டுச் சென்ற இந்திரன் செருக்குடையனா தலையுணர்ந்த சிவபெரு மான் ஒரு பூதரூபத்துடன் கோபுரவாசலில் நின்றனன் அப்பொழுது அங்குவந்த இந்திரன் பூதனைப்பார்த்து பூத ஈசற்குச் சமயமென்னை என்றனன். அதற்குப் பூதனென் றும் பேசாது வாளா இறுமாந்து நிற்பதைக்கண்ட அவ்வலாரி தன்கை வச்சிரத்தால் அப்பூதனை அடித்தான். பூதன்மீது பட்ட வச்சிரம் நுறுங்கிப் பாழாகவே இந்திரன் அச்சமுற்றனன்; இறைவனும் மிக்க கோபத்துட னெதிரே தோன்றினன். உடனே இந்திரன் அந்தோ! இறைவனென்று அறியாது தகாத காரியஞ்செய்தோமே என அச்சுற்று வீழ்ந்து வணங்கி வேண்டிக்கொண்டனன். இந்திரன் வேண்டுகோளுக் கிறங்கிய சிவபெருமான் தன்னிடத்துண்டாகிய சீற்றத்தை கடனடுவில்விட்டு இந்திரனமீது கருணைகாட்டிச் சென்றனன்.

## ஹரிஹரதாரதம்மியம்

பின்னரக்கோப மொரு கொடிய அசுர வடிவத்தை யடைந்து மஹாவீரனுய் வெகுகால மருந்தவஞ்செய்து பெரிய வரங்களைப்பெற்று மிகவுஞ்சிறந்தவனுய் அனேககாலமிருந்தனன் அவன் மனைவி ப்ருந்தையென்று பேருள்ளவள்; மஹா சுந்தரி. அசமானமான லாவண்யமுள்ள அப்ருந்தையைக்கண்டு காதலுற்ற ஹரி, சலந்தரன் தன்னுல் வெல்லக்கூடாத பராக்கிரமியா யிருத்தலைத் தானவெனுெடு பலதரம் போர் புரிந்து தோற்றமையா லுணர்ந்தவனுதலால் அவன் மரணத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தனன் சிலகாலங் கழித்து அந்தணவுருவத்துடன் வந்த சிவபெருமானு லமைக்கப்பெற்ற சக்கந்த்தினுல் இருபிளவாகி விழுந் தழிந்தனன் சலந்தரனென்பதை யுணர்ந்தான். உணர்ந்து, இதைவிட வேறே தருணம் இல்லை யென்று ஒரு வயோதிகனுன முனியைப்போல வேஷந்தாங்கி ப்ருந்தை யுலாவும் பூங்காவனத்தி லிருந்தனன்.

கணவனது மரணத்தையுணராத வம்மாது பூந்தோட்டத்தி லிருக்கும் முனிவனைக்கண்டு வணங்கி, ஐயரே! எனது கணவன கைலாயத்திற்குச் சேனைகளுடன் போயினுன், இன்னும் வந்தானில்லை. திவ்யத்ருஷ்டியினையுடைய தாங்கள் எப்பொழுது வருவானென்று கூறவேண்டுமென்று வேண்டிக்கொண்டனள். அக்கப்பட முனிவன் அதற்கென்ன, அவ்வாறே செய்கின்றேனென்று தனது கண்களை மூடிக் கொண்டு சற்று நாழிகையிருந்து பின்னர் கண்ணைத்திறந்து, மாதே! அஞ்சாதே. நான் சகல சித்திகளையும் உணர்ந்தவன். என்னுல் இறந்தவர்களையும் எழுப்ப முடியும். ஆதலால் நீயஞ்சாதே என்று கூறித் தனது தௌவாரிகளாகிய இரண்டு வானரங்களால் அவ்விறந்த சலந்தரனுடலை அங்கு கொண்டுவரச்செய்தனன்.

பின்னர் தன் கணவனது மரணத்தைக்கண்டு கவலுகின்ற காரிகையை நோக்கி, நீ அஞ்சாதே; நின் கணவனை நானெழுப்பித்தருகின்றேனென்று கூறி, இருபிளவான உடலை யொன்றுப்படுத்தி யவளுணராமல் அதனில் தானே புகுந்து உயிருள்ளவனுகச் சலந்தரனெழுந்ததாக நடித்தனன்.

நிஷ்கபடையான ப்ருந்தை தன் கணவனென்றே கருதி மிக்க சந்தோஷத்துடன் இறுகத்தழுவினுள். இதனுலானந்தமுற்ற கபட சலந்தரன் அரண்மனையடைந்து அநேககாலம் அவளொடு ரமித்தனன். பின்னரொருநாள் தன்னை மறந்து தூங்கி விட்டான். தூங்கும்பொழுது பார்த்த ப்ருந்தையின் கண்ணுக்கு சலந்தரன் காணப்பட வில்லை. நாராயணன் காணப்பட்டான். உடனே நாராயணனுடைய இழிந்த இச்செய்கைக்கு வெறுப்புற்றுப் பல தீயசாபங்களையிட்டு அவனுணர்தறகு முன்னே அக்கினிப்பிரவேசமாயினுள்.

இவளெரிந்து சாம்பரானபின்பு எழுந்த நாராயணன் அவளது மரணத்தாற் சோகமுற்று ஏங்கி அச்சாம்பலிலேயே அதிக மோகத்துடன் புரந்த்தொடங்கினுன். இவ்வநுசித காரியததைக்கண்ட தேவர்கள் மஹாதேவியினிடம் கூறினுர்கள். மஹாதேவியும் தன் திருமேனியினினறுஞ் சற்றே அழுக்குருட்டி எடுத்து இதனைக் கொண்டு போய அவ்வசுரியின் உடற் சாம்பலிலிட்டுத் தண்ணீர் விடுங்களென்றனள். அவர்களும் அவ்வாறே செய்தார்கள். அப்பொழுது அச்சாம்பலில் நின்றும் ப்ருந்தை

யென்று பேருள்ள க்ருஷ்ண துளசிச் செடிகள் தோன்றின அவைக ளந்நாரணனுக்கு அப்ருந்தையாகக் காணப்பட்டமையால், அதஐனத் தன் மார்புமுதலியவற்றில் அவள் பரிசிப்பதைப் போல பரிசிக்குமாறு அத்தழைகஐளப் பறித்துத் தரித்துக்கொண்டான் என்று வியாசர் ஸகாந்தபுராணத்திற கூறியிருக்கின்ருர்.

திருமால் துளசி யணிபவரென்பதை "வனமாலிபடியிடந்தோன்" என்றும்,

"*அணுங்கவென்ஐனப்பிரிவுசெய்தாயர்பாடிகவர்ந்துண்ணும்*
*குணுங்குநாறிக்குட்டேற்றைக்கோவர்ததன்ஐனக்கண்டீரே*
*கணங்களோடுமின்மேகம்கலந்தாப்போல்வனமாஐல*
*மினுங்கநின்றுவிஐளயாடவிருந்தாவனத்தேகண்டோமே*"
என்று வரும் நாலாயிரப்பிரபந்தத்தாலும்,

"*மட்டுலாவுதண்டுழாயலங்கலாய்புலன்கழல்*
*விட்டுமீள்விலாதபோகம்விண்ணில்நண்ணியேறினும்*
*எட்டிஞேடிரண்டெனுங்கயிற்றிஞன்மனந்தஐனக்*
*கட்டிவீடிலாதுவைத்தகாதலின்பமாகுமே*"
என்று திருமழிசை யாழ்வானும் கூறியிருத்தலாலுணர்க.

ஒருவன் பிரமர்களின் கபாலங்கஐளத் தரித்திருக்கின்ருன் என்றது - ஹரஐன, அது அவ்வரன் அவ்வாறு தரித்திருத்தலால். இத்தஐன பிரமர்களிறந்தார்களென்று இனிவரும் பிரமர்களும் அறியும் வண்ணம் ஹரஞலிவைகள் தரிக்கப்பட்டன. இதஐன -

"*கற்பங்கள் தோறுந்தோன்றுங்கணக்கிலாப்பிரமர்மாயர்*
*முற்பொன்றுந்தஐலகள்கோத்துநாற்றியமுளிபுன்மாஐல*
*பொற்பொன்றுநமதுசென்னிபுயமரைசரணமெங்குஞ்*
*சிற்பங்கள்விளங்கப்பூண்டதிறமிதுநோக்கிக்காணுய்*"
என்று வருங் காஞ்சிப்புராணத்தாலும் பிறவற்ருலும் உணர்க.

## தாத்பரியம்.

ஹரி துளசிமாஐலயை யணிந்தான, ஹரன் அநேகாயிரம பிரமகபாலங்கஐள அணிந்தானென்பதாம்.

## தாரதம்மியம்.

ஒருவனணியும் அணியிஞ லொரு மதிப்பு வேண்டும், அப்பொழுதுதான் அந்த அணி அணிந்தவனுடைய தன்மைவிளங்கும். ஹரி துளசியைத் தரித்திருத்தலால் விளங்கும் பிரபாவ மொனறுமில்ஐல; ஹரன் பிரமர்களின் கபாலங்கஐள அணிந்திருத் தலால் நித்தியன் என்னும் பிரபாவம் கேட்கப்படுகிறது. அதஞல் நாங்கள் இவ்விஷ

யத்தில் ஹரியை அப்பிரதானமாக வகற்றி ஹரனைப் பிரதானமாகக் கொண்டு வாழ்கின்றேம். - என்றவாறு. **(34)**

**एको मृगग्रहणतो गहने चचार**
**त्वन्यो मृगं करतले निवहन् सदास्ते ।**
**कोवानयोरधिकः इत्यनुचिन्त्य वृद्धाः**
**सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥ ३५ ॥**

ஶகொ ஜூஹஹுஹணதொ ஹஹநெ உவாா
ஜவநெ௵ா ஜூஹம் கூாதஶெ நிவஹநு ஸஜாஸ்தெ ।
கொவாநயொாயிகஃ ஐத௵நுவிஞ௵ வூஜாஃ
ஸத௵ம் ஸுஶவஞு தஶிஜம் வயஶாஶுயாஜஃ ॥ ௩௫ ॥

**ஏகோ ம்ருக³க்³ரஹணதோ க³ஹனே சசார**
**த்வன்யோ ம்ருக³ம் கரதலே நிவஹன் ஸதா³ஸ்தே ।**
**கோவானயோரதி⁴கः இத்யனுசிந்த்ய வ்ருத்³தா⁴ः**
**ஸத்யம் ப்³ருவந்து தமிமம் வயமாஶ்ரயாமः ॥ 35 ॥**

## மொழிபெயர்ப்பு.

**கத்துங் கரியுங் கோடரமுங் கஞலுங் கொடிய காட்டினினமா**
**னெத்தும் பரிவு கொண்டொருவ னெங்கு முலவ லேய்ந்துற்றுன்**
**உத்துங் கமதாா மானென்றை யொருவன றுங்கி யுறுகின்றுன்**
**இத்துங் கர்தமிற் சிறந்தவன்யா ரிசைத்தாற் பெரியீ ரிறைஞ்சுதுமே.**

## பதப்பொருள்.

| | | |
|---|---|---|
| **ஏக:** | = | ஒருவன், |
| **ம்ருக³க்³ரஹணத:** | = | மானைப் பிடிக்கும் பொருட்டு, |
| **க³ஹனே** | = | காட்டில், |
| **சசார** | = | சஞ்சரித்தான், |
| **அந்ய:து** | = | இன்னெருவனுனல் |
| **ம்ருகம்** | = | மானை, |
| **ஸதா** | = | எப்பொழுதும், |
| **கரதலே** | = | கையில், |
| **நிர்வகந்** | = | வைத்துக்கொண்டவனுக, |
| **ஆஸ்தே** | = | இருக்கிறுன், |
| **அநயோ:** | = | இவ்விருவருக்குள், |
| **அதிக:** | = | சிறந்தவன், |
| **கோவா** | = | யாவன்? |

| | | |
|---|---|---|
| **இதி** | = | இதனை, |
| **அநுசிந்தியா** | = | ஆலோசித்து, |
| **வ்ருத்³தா⁴:** | = | பெரியவர்கள், |
| **ஸத்யம்** | = | உண்மையை, |
| **ப்³ருவந்து** | = | சொல்லலாம் சொன்னால், |
| **தமிமம்** | = | அந்த விவனை, |
| **வயம்** | = | நாங்கள், |
| **ஆஶ்ரயாம:** | = | ஆஶ்ரயிக்கின்றோம். |

## பொழிப்பு.

ஒருவன் மானைப் பிடிக்கும்பொருட்டுக் காட்டிலுலாவினன், இன்னொருவன் எப்பொழுதும் மானைக் கையிற் பிடித்துக்கொண்டிருக்கின்றான், பெரியவர்கள் உண்மையாக இவர்களிற் சிறந்தவனை இவனென்று சொன்னால், அந்த மஹாபுருஷனை நாங்கள் சரணமாக அடைந்து வாழ்வோம்.

## விதப்பு.

ஒருவன் மானின்பொருட்டுக் காட்டிலுலாவின னென்றது - ஹரியை, அது அவ்வரி அவ்வாறு இயற்றியிருத்தலால்

ஹரி - இராமனாகிய ஞான்று சிற்றன்னையி னணைக்குட்பட்டு மனைவியும் இளையவனும் உடன்வர வனவாசியாகந் தண்டகாரண்யத்தில் இருந்தபோழ்து, சூர்ப்பநகையென்பவள் இராவணனிடஞ் சென்று இராமன் மனைவியின் பேரழகை வர்ணித்தவுடனே, இராவணன் இராமன் மனைவியை விபசரிக்கக்கருதி, இராமனையவன் மனைவியான சீதையி னருகினின்றும் பிரிக்குமவண்ணம் மாரீசனென்பவனை நீ ஒரு மாயமானுருவுடன செல்லென்றனுப்பினன். அவனும் பொன்மயமான மானாக இராமன் மனைவியின் எதிரே உலாவினன். அவளும் அதனைக் கபடமானென்றுணராது தன் கணவனைப் பிடித்துத் தருமாறு வேண்டினள், அவனும் பெண் புத்திக்கிசைந்து வில்லிலம்பு வைத்துக்கொண்டு அதன் பின்னாலே உலாவினனென் பதை உலகரனைவரு மறிவார்கள். இதனை -

"*வலிவணக்குவரைநெடுந்தோள்விராதைக்கொன்று*
*வண்டமிழ்மாமுனிகொடுத்தவரிவில்வாங்கிக்*
*கலைவணக்குநோக்கரக்கிமூக்கைநீக்கிக்*
*கரனோடுதூடணன்றனுயிரைவாங்கிச்*
*சிலைவணக்கிமான்மறியவெய்தான்றன்னைத்*
*தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள்*
*தலைவணங்கிககைகூப்பியேத்தவல்லார்*
*திரிதலால்வமுடைத்துத்தாணிதானே*"

என்று குலசேகரமன்னன கூறியிருத்தலைக்கொண்டுணர்க.

ஒருவன எப்பொழுதும் கையின் மானைப் பிடித்துக்கொண்டிருக்கின்றனென் றது - ஹரனை, அது அவ்வரன் அவ்வாறு சதா மானைப் பிடித்துக்கொண்டிருத்தலால்.

தாருகாவனமுநிவர் யாகஞ்செய்து எழுப்பிய மான அதன் கருவமடங்க ஹரன் இன்றும் தரித்திருக்கின்றன்.

என்று ஸகாந்தபுராணத்தும்

என்று மார்க்கண்டேய சுருதியிலும் கேட்கப்படுதலைக்கொண்டுணர்க

**தாத்பரியம்.**

ஹரி மானின பொருட்டுக் காட்டிற்றிரிந்தான், ஹரன் மானைக்கையிற் பிடித்திருக்கின்றன் என்பதாம்.

## தாரதம்மியம்.

கேவலம மானைப்பிடிக்க வலைந்து திரிந்தவனைக்காட்டிலும், மான என்றுங் கையில் வைத்திருப்பவன் அந்தவிஷயத்தில் சிறந்தவனுதலால், நாமும் மானுக் கலைந்த ஹரியை இந்த விஷயத்தில் அப்பிரதானமாக அகற்றி ஸதா மானைத் தாங்கிய ஹரனை அடைந்து வணங்கி அவ்வரனையே ஆஶ்ரயிக்கின்றேம். - என்றவாறு. **(35)**

**एको दशास्यहृतनैजवधूक आसी**
**दन्थो वधूविलसितार्द्धशरीर आसीत् ।**
**कोवानयोरधिकः इत्यनुचिन्त्य वृद्धाः**
**सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥ ३६ ॥**

ஷகொ உஶாஸ்யஹ்ருதநைஜவயூகை ஆஷீ
உநெ்ஓா வயூவிஸஸிதாஃஃஶரீர ஆஷீக் ।
கொவாநயொாரயிகஃ ஐத்யநுஉிநு்ய வுஃஃாஃ
ஷத்யம் ஊ்ருவநு் தஶிஶம் வயஶாஶ்ரயாஶஃ ॥ ௩௬ ॥

**ஏகோ த$^{3}$ஶாஸ்யஹ்ருதனைஜவதூ$^{4}$க ஆஸீ**
**த$^{3}$ந்தோ$^{2}$ வதூ$^{4}$விலஸிதார்த்$^{3}$த$^{4}$ஶரீர ஆஸீத் ।**
**கோவானயோரதி$^{4}$கஃ இத்யனுசிந்த்ய வ்ருத்$^{3}$தா$^{4}$ஃ**
**ஸத்யம் ப்$^{3}$ருவந்து தமிமம் வயமாஶ்ரயாமஃ ॥ 36 ॥**

## மொழிபெயர்ப்பு.

**புல்லும் பொறிகொள் மதிலிலங்கைப் பூப னெடுத்த மனைவியினன்**
**சொல்லி லொருவன் மற்றெருவன் துகடீர் வல்லி யன்னுளா**
**லெல்லொன் றிடுமே னியிற்பாதி யிடத்தனுகி யிருக்கின்றன்**
**எல்லி லிவருட் சிறந்தவன்யா ரிசைத்தாற் பெரியீ ரிறைஞ்சுதுமே.**

## பதப்பொருள்.

| | | |
|---|---|---|
| **ஏக:** | = | ஒருவன், |
| **த$^{3}$ஶாஸ்ய** | = | இராவணனலே, |
| **ஹ்ருத** | = | அபகரிக்கப்பட்ட, |
| **நைஜ** | = | தன்னதான, |
| **வதூ$^{4}$க:** | = | மனைவியையுடையவனுக, |
| **ஆஸீத்** | = | ஆனன், |
| **அநயோ:** | = | இவ்விருவருக்குள், |
| **அதிக:** | = | சிறந்தவன், |
| **கோவா** | = | யாவன்? |
| **இதி** | = | இதனை, |
| **அநுசிந்தியா** | = | ஆலோசித்து, |
| **வ்ருத்$^{3}$தா$^{4}$ஃ** | = | பெரியவர்கள், |
| **ஸத்யம்** | = | உண்மையை, |
| **ப்$^{3}$ருவந்து** | = | சொல்லலாம் சொன்னல், |
| **தமிமம்** | = | அந்த விவனை, |
| **வயம்** | = | நாங்கள், |
| **ஆஶ்ரயாமஃ** | = | ஆஶ்ரயிக்கின்றோம். |

## பொழிப்பு.

ஒருவன் பத்துத்தலையுள்ள இராவணனால் அபகரிக்கப்பட்ட மனைவியையுடையவன், இன்னொருவன் தன் சரீரத்திற்பாதி மனைவியாற் பிரகாசிப்பவனாக இருக்கின்றான்; இவ்விருவர்களில் எவன் சிறந்தவனோ வவனைப் பெரியவர்கள் உண்மையாகச் சொன்னால், அவனை நாங்கள் ஆஶ்ரயிக்கின்றோம்

## விதப்பு.

ஒருவன் இராவணனால் அபகரிக்கப்பட்ட மனைவியை யுடையவனென்றது - ஹரியை, அது அவ்வரி அவ்வண்ணம் இராவணனால் எடுககப்பட்ட மனைவியை உடையவனாதலால். இதனை -

"*பரிந்துபற்பலவெகுண்டவள்பகர்தலினிளையோன்*
*விரைந்துநாடுவான்போயபின்மெலிவொடுதனித்தங்*
*கிருந்தவன்னையையிராவணன்வவ்விவிண்ணெழுந்தான்*
*கரந்துகொல்வதற்குற்றதுகாலமென்றுணரான்*" என்று வரும் பாகவத்ததாலும்,

"*கொண்டானுயர்தேர்மிசைக்கோல்வளையாள்*
*கண்டாள்தனதாருயிர்கண்டிலளால்*
*மண்டானுறும்மின்னின்மயங்கினளால்*
*விண்டான்வழியாயெழுவான்விரைவாய்*" என்று கம்பராமாயணத்திலும்,

"*அரக்கர்கோவெளவியவணங்கைநீக்கலான்*
*மருக்கமழலங்கலான்மணந்ததென்கொலென்*
*றிரக்கமிலசிதடனுங்கிசைத்தனல்லறம்*
*புரக்கவந்தருள்புரிபுனிதன்கேட்டனன்*" என்று பாகவதத்திலும்,

என்று சுருதியிலும் வருதலைக் கொண்டுணர்க.

ஒருவன் மனைவியாற் பிரகாசிக்கப்பட்ட பாதியுடம்பினனென்றது - ஹரனை, அது அவ்வரன் அவ்வாறிருத்தலால். இதனை -

"*திருந்தமதிசூடித்தெண்ணீர்ச்சடைக்கரந்துதேவிபாகம்*
*பொருந்திப்பொருந்தாதவேடத்தாற்காடுறைதல்புரிந்தசெல்வ*
*ரிருந்தவிடம்வினவிலேலங்கமழ்சோலையினவண்டியாழ்செய்*
*குருந்தமணநாறுங்குன்றிடஞ்சூழ்தண்சாரற்குறும்பலாவே*"

என்று திரவிடவேதத்து வருதலைக்கொண்டும்,

"*வலப்பாகஞ்செழும்பவளச்சோதியென்ன*
*வாணீலச்சோதியென்னமற்றைப்பாகங்*
*கலப்பானதிருமேனியணிந்தநீற்றுற்*
*கதிர்முத்தின்சோதியெனமேனையீன்ற*
*குலப்பாவையுடன்கைலைக்குன்றில்வாழ்விற்*
*குன்றுடையோன்றிருகோலங்குறிப்பாலுன்னிப்*
*புலப்பாடுபுறம்பொசியமார்புந்தோளும்*
*பூரித்தானுடல்புளகம்பாரித்தானே*"

என்று பாரதத்தும் வருதலைக்கொண்டுணர்க.

### தாத்பரியம்.

ஹரி ராவணனால் அபகரிக்கப்பட்ட மனைவியையுடையவன், ஹரன் தன் மனைவியைத் தன்னுடம்பிற் பாதியாக உடையவன் என்பதாம்.

### தாரதம்மியம்.

ஒருவனால் அபகரிக்கப்பட்ட மனைவியையுடையவனாக விருப்பவனை எவனும் சிறந்தவனென்று கூறான். ஒற்றுமையாயும் அயலானால் அபகரிக்கப்படாதவளாயும உள்ள மனைவியை யுடையவனை யாவரும் புகழ்வார்கள் இதனால் இராவணனா லபகரிக்கப்பட்ட மனைவியையுடைய ஹரியைவிட இடப்புறத்தி லமைக்கப்பெற்ற மனைவியினையுடைய ஹரன் சிறந்தவனும். அதனால் நாம் இவ்விஷயத்திற்றாழ்வ டைந்த ஹரியை அப்பிரதானமாக வகற்றி, இவ்விஷயத்தி லுயர்வுபெற்ற ஹரனைச் சிறந்த மஹா புருஷனாகக்கருதி அவ்வரனையே சரணமாக அடைந்து வாழ்கின்றோம். என்றவாறு. **(36)**

**एकस्तु मर्कटभटेन ददाह लङ्का**
**मन्यस्तु मन्दहसितेन पुरत्रयञ्च ।**
**कोवान योरधिकः इत्यनुचिन्त्य वृद्धाः**
**सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥ ३७ ॥**

**ஏகஸ்து மர்கடபடேந ததாஹ லங்கா**
**மந்யஸ்து மந்தஹஸிதேந புரத்ரயஞ்ச ।**
**கோவாந யோரதிகஃ இத்யநுசிந்த்ய வ்ருத்தாஃ**
**ஸத்யம் ப்ருவந்து தமிமம் வயமாஶ்ரயாமஃ ॥ ௩௭ ॥**

**ஏகஸ்து மர்கடப⁴டேன த³தா³ஹ லங்கா**
**மன்யஸ்து மந்த³ஹஸிதேன புரத்ரயஞ்ச ।**
**கோவான யோரதி⁴க: இத்யனுசிந்த்ய வ்ருத்³தா⁴:**
**ஸத்யம் ப்³ருவந்து தமிமம் வயமாஶ்ரயாம: ॥ 37 ॥**

## மொழிபெயர்ப்பு.

**மாஐல மதிய மெனச்செம்மை மருவு முகத்துக் கோடரத்தாற்**
**கோல விலங்கை தஐனயொருவன கொளுத்தி யழத்தான் கூறெருவன்**
**சாலச் சிறிய முறுவலிஞற் றகித்தான் றகுவர் புரமூன்றை**
**எலு மிவருட் சிறந்தவன்யா ரிசந்த்தாற் பெரியீ ரிறைஞ்சுதுமே.**

## பதப்பொருள்.

| | | |
|---|---|---|
| **ஏகஸ்து** | = | ஒருவனுனல், |
| **மர்க்கடபடேந** | = | குரங்குத்தூதனுல், |
| **லங்காம்** | = | இலங்கையை, |
| **ததாஹ** | = | சுட்டான், |
| **அந்யஸ்து** | = | இன்னெருவன், |
| **மந்த³ஹஸிதேன** | = | புன்சிரிப்பினுல், |
| **புரத்ரயஞ்ச** | = | முப்புரங்கஊயும், |
| **த³தா³ஹ** | = | சுட்டான்; |
| **அநயோ:** | = | இவ்விருவருக்குள், |
| **அதிக:** | = | சிறந்தவன், |
| **கோவா** | = | யாவன்? |
| **இதி** | = | இதஊ, |
| **அநுசிந்தியா** | = | ஆலோசித்து, |
| **வ்ருத்³தா⁴:** | = | பெரியவர்கள், |
| **ஸத்யம்** | = | உண்மையை, |
| **ப்³ருவந்து** | = | சொல்லலாம் சொன்னுல், |
| **தமிமம்** | = | அந்த விவஊ, |
| **வயம்** | = | நாங்கள், |
| **ஆஶ்ரயாம:** | = | ஆஶ்ரயிக்கின்றேம். |

## பொழிப்பு.

ஒருவன் குரங்கு வேஊலக்காரனுல் இலங்கையைச் சுட்டான், மற்றெருவன் மந்தஹாஸத்திஞலேயே திரிபுரங்கஊச் சுட்டான், இவ்விருவருக்குள சிறந்தவஊ பெரியவர்களாகிய நீங்கள் சொன்னுல், உங்களால் சொல்லப்படுகிற மஹாபுருஷஊ நாங்கள் சரணமாக அடைகின்றேம்.

## விதப்பு.

ஒருவன் மர்க்கடபடனுல் இலங்கையைச் சுட்டான் என்றது - ஹரியை, அது அவ்வரி அவ்வாறு செய்திருத்தலால்.

ஹரி இராமனுக இருந்தகாலத்திற குரங்காகிய அநுமானைத் தூதனுக அனுப்பினுன், அவன் இலங்கைக்குட்புகுந்து இந்திரசித்தினுல் பிடிக்கப்பட்டு வாலில் கிழி சுற்றித் தீயைப் பற்றவைத்தவுடன் அந்த வால்த்தீயினுல் இலங்கையைச்சுட்டான். இதனை -

“*தனமருவுவைதேவிபிரியலுற்றுத்தளர்வெய்திச்சடாயுவைவைகுந்தத்தேற்றி, வனமருவுகவியரசன்காதல்கொண்டுவாலியைக்கொன்றிலங்கைநகரரக்கர்கோமான், சினமடங்கமாருதியாற்சுடுவித்தானைத்தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள், இனிதமர்ந்தவம்மானையிராமன்றன்னையேத்துவாரிணையடியேயேத்தினேனே*"

என்று நாலாயிரப்பிரபந்தத்திற குலசேகரமன்னன் வாக்கியங்கேட்கப்படுதலாலும்,

"*வேந்தன்கோயில்வாயிலொடுவிரைவிற்கடந்துவெள்ளிடையிற்*
*போந்துபுறநின்றிரைகின்றபொறைதீர்மறவர்புறஞ்சுற்ற*
*ஏந்துநெடுவால்கிழிசுற்றிமுற்றுந்தோய்த்தாரிழுதெண்ணெய்*
*காந்துகடுந்தீக்கொளுத்தினுரார்த்தாரண்டங்கடிகலங்க.* என்றும்,

*நீனிறநிருதரீண்டுநெய்பொழிவேள்விநீங்கிப்*
*பால்வருபசியனென்பான்மாருதிவாலைப்பற்றி*
*ஆலமுண்டவனன்றூட்டவுலகெலாமழிவினுண்ணும்*
*காலமேயென்னமன்னேகனலியுங்கடிதிலுண்டான்*"
என்றும் வரும் இராமாயணத்திலும்,



என்று ராமதாபினியிலும் வருதலைக்கொண்டுணர்க.

ஒருவன் மந்தஹாஸத்தால் திரிபுரங்களைச் சுட்டானென்றது - ஹரனை, அது அவ்வர னவ்வாறு சுட்டிருத்தலால். இதனை -

"*விண்ணேர்தலைவர்வெண்புரிநூன்மார்பர்வேதகீதத்தர்*
*கண்ணுர்நுதலர்நகுதலையர்காலகாலர்கடவூரர்*
*எண்ணுர்புரமூன்றெரிசெய்தவிறைவரிமையோருபாகம்*
*பெண்ணுணவர்மயானத்துப்பெரியபெருமானடிகளே*" என்று திரவிடசூக்தியினும்,

“*எறும்வலிமுழுவதுமெண்ணினுன்*

*கறுவுறுகுறுநகைகாட்டினன்*
*முறுவலினுயர்புரமும்மையும்*
*நெறுநெறுநெறுவெனநீறின"*

என்று காஞ்சிப்புராணத்தும் வருதலைக்கொண்டுணர்க.

## தாத்பரியம்.

ஹரி குரங்குத்தூதனால் இலங்கையைச் சுட்டான், ஹரன் மந்தஹாஸத்தினால் மூன்று புரங்களைச் சுட்டான் என்பதாம்.

## தாரதம்மியம்.

குரங்குத்தூதனால் ஒரு நகரத்தை எரிப்பித்தவனைவிடப் புன்சிரிப்பினால் மூன்று நகரங்களை எரித்தவன் சிறந்தவன என்று விதந்து கூறவேண்டுவ தில்லை. தானே விளங்கும். மந்தஹாஸத்தினால் முப்புரங்களை எரித்த ஹரனைவிட வானர கிங்கரனால் இலங்கையைச் சுடுவித்த ஹரி தாழ்ந்தவனாதலால், இந்த விஷயத்திற் றாழ்வடைந்த ஹரியை நாங்கள் அப்பிரதானமாக வகற்றி இந்த விஷயத்திற் சிறந்த ஹரனைச் சரணமாக அடைந்து வாழ்கின்றோம். - என்றவாறு. **(37)**

**एकस्तु मर्कटभटैर्निजकार्यकारी**
**ह्यन्यस्सुरेन्द्रनिव हैर्निजकार्यकारी ।**
**कोवानयोरधिकः इत्यनुचिन्त्य वृद्धाः**
**सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥ ३८ ॥**

**ஊகஸ்து ஜகூடஹடைைநிஜகாயகாரீ**
**ஹ்யநஸ்ஸுரெநிவ ஹைநிஜகாயகாரீ ।**
**கொவாநயொாயிகஃ ஐதநுவிந்ய வூஃ**
**ஸதும் ஐவநு தஜிஜும் வயஜாஶ்ரயாஜஃ ॥ ந௮ ॥**

**ஏகஸ்து மர்கடப$^4$டைர்நிஜகார்யகாரீ**
**ஹ்யன்யஸ்ஸுரேந்த்$^3$ரனிவ ஹைர்நிஜகார்யகாரீ ।**
**கோவானயோரதி$^4$கஃ இத்யனுசிந்த்ய வ்ருத்$^3$தா$^4$ஃ**
**ஸத்யம் ப்$^3$ருவந்து தமிமம் வயமாஶ்ரயாமஃ ॥ 38 ॥**

## மொழிபெயர்ப்பு.

**குந்தி யுலவுங் கோடரத்தாற் குலவுந் தனது காரியத்தை**
**முந்தியொருவன் முடித்தான்சொல் முறையாலொருவன் முன்னுளி**
**லிந்தி ராதி தேவர்களா லியற்றி முடிந்த வெழில்வினையான்**
**இந்த விவருட் சிறந்தவன்யர் ரிசைத்தாற் பெரியீ ரிறைஞ்சுதுமே.**

## பதப்பொருள்.

| | | |
|---|---|---|
| **ஏகஸ்து** | = | ஒருவனுனல், |
| **மர்க்கடபடை:** | = | வானரசேனைகளாலே, |
| **நிஜகார்யகாரிஹீ** | = | தன்காரியத்தைச்செய்து கொண்டவனல்லவா, |
| **அந்ய:** | = | இன்னெருவன், |
| **ஸுரேந்த்³ரனிவ** | = | இந்திரன் முதலியவர்களாலே, |
| **நிஜகார்யகாரீ** | = | தன்காரியத்தைச் செய்து கொண்டானல்லவா, |
| **அநயோ:** | = | இவ்விருவருக்குள், |
| **அதிக:** | = | சிறந்தவன், |
| **கோவா** | = | யாவன்? |
| **இதி** | = | இதனை, |
| **அநுசிந்தியா** | = | ஆலோசித்து, |
| **வ்ருத்³தா⁴:** | = | பெரியவர்கள், |
| **ஸத்யம்** | = | உண்மையை, |
| **ப்³ருவந்து** | = | சொல்லலாம் சொன்னல், |
| **தமிமம்** | = | அந்த விவனை, |
| **வயம்** | = | நாங்கள், |
| **ஆஶ்ரயாம:** | = | ஆஶ்ரயிக்கின்ரேம். |

## பொழிப்பு.

ஒருவன் குரங்குச்சேனைகளால் தனது காரியத்தை முடித்துக் கொண்டான், மற்றெருவன் இந்திராதிகளால் செய்யப்பட்ட தன் காரியங்களையுடையவன்; பெரியவர்களே இவ்விருவரிற் சிறந்தவனை நீங்களுரைத்தால், நாங்களந்த மஹா புருஷனை ஆஶ்ரயிக்கின்ரேம்.

## விதப்பு.

ஒருவன் மர்க்கடபடர்களாற் செய்து முடிக்கப்பட்ட தன் காரியத்தினை உடையவனென்றது - ஹரியை, அது அவ்வரி அவ்வாறு செய்து முடித்திருத்தலால்.

அது ஹரி இராமனுகவந்தநாளிலும், ஜலந்தரன் மனைவியை விபசரித்த நாளிலும் குரங்குகளாலே தனது காரியங்களைத் சாதித்தானென்பதை. இது ஜகத் ப்ரஸித்தம். இதனை -

"*அளவிகந்தவரிக்குலத்தோரெழில்*
*வளருகின்றவரைக்குழுவுய்த்திட*
*உளமுவந்துநூரேசனையாமணை*
*நளன்விரைந்தவணன்கமைத்தனனரோ*" என்றி ராமாயணத்தும்,

"*எயிலைமுற்றியெதிர்ந்தவரக்கரை*
*அயிலெயிற்றவரிக்குலத்தோர்தெறப்*
*புயலையொத்தவன்முடிபத்தும்வெவ்*
*வெயிலையொத்தொளிர்வேந்தொடுமேற்றனன்*"
என்று பாகவதத்தும் வருதலைக்கொண்டுணர்க.

ஒருவன் இந்திராதிதேவர்களை கொண்டு தன் காரியங்களை நிறைவேற்றினன் என்றது - ஹரனை, அது அவ்வரன் அவ்வாறு செய்திருத்தலால்.

ஹரன் திரிபுரசங்காரகாலத்திலே இந்திராதிகளான தேவர்களையே கருவிகளாகக் கொண்டு போர்புரிந்து தன் காரிய சாத்தியமான திரிபுரஜயாதிகளை அடைந்தனன். இதனை -

"*உருகெழுநிலமொருவையமு*
*மிருசுடரிருபுடையாழியுஞ்*
*சுருதிகள்துகளறுவாசியு*
*மருமலரனையவன்வலவனும்.*

*தடநெடுவடவரைசாபமும்*
*படவரவிறைபகர்நாரியு*
*மடல்விரிதுளவினன்வாளியுங்*
*கடவுளர்பிறபிறகருவியும்.*
*ஆயினரதுபொழுதண்ணலு*
*மேய்வுறுமிரதமதேறினன்*
*மாயிருநெடியவில்வாங்கினன்*
*காய்கனலுமிழ்கணைபூட்டினன்*" என்று காஞ்சிப்புராணத்தும் வருதலாலுணர்க.

## தாத்பரியம்.

ஹரி குரங்குகளால் தன் காரிந்த்தைச் சாதித்தான், ஹரன் இந்திராதி தேவர்களால் தன் காரிந்த்தைச் சாதித்தான் என்பதாம்.

## தாரதம்மியம்.

இழிந்த ஜனங்களால் தன் காரிய சாத்தியமடைபவனை எவனும் சிறந்தவனென்று கூறான்; உயர்ந்தவர்களைக்கொண்டு தன் காரிய சாத்தியஞ் செய்துகொள்பவனை நியாயவாதிகள் உயர்ந்தவனாக ஒப்புக் கொள்வார்கள். ஹரி இழிந்த குரங்குகளைக் கொண்டே தன் காரியங்களைச் சாதித்துக்கொண்டனன், ஹரன் உயர்ந்தவர்களான தேவர்களைக் கொண்டே தன் காரியத்தைச் சாதித்துக்கொண்டனன். இதனால் ஹரி தாழ்வையும் ஹரன் உயர்வையும் அடைந்து விளங்குதலால், நாங்கள் இவ்விஷயத்திற் றாழ்வடைந்த ஹரியை அப்பிரதானமாகவகற்றிப் பிரதானமான ஹரனைச் சரணாகதியாக அடைந்து வாழ்கின்றோம். - என்றவாறு. **(38)**

**एकस्तु मत्स्यतनुमेत्य गतोऽब्धितोय**
**मन्यो विनिर्मथिततद्ध्वजवान् प्रसिद्धः ।**
**कोवानयोरधिकः इत्यनुचिन्त्य वृद्धाः**
**सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥ ३९ ॥**

ஸ௱கஸ்ு ஐத்ஸ்ுதநுஜெத்ு ஗தொ஽ஸ்லிதொய
ஐநெ்ுா விநிஐ்ூயிததஸ்லஜவாநு வுஸிஊஃ ।
கொவாநயொாயிகஃ ஐத்ுநுுவிஜு வுஊாஃ
ஸத்ுஂ ஸ்ுவஜு தஐிஂ வயஐாஸ்ுயாஐஃ ॥ ௩௯ ॥

**ஏகஸ்து மத்ஸ்யதனுமேத்ய க$^{3}$தோ(அ)ப்$^{3}$தி$^{4}$தோய**
**மன்யோ விநிர்மதி$^{2}$ததத்$^{3}$த்$^{4}$வஜவான் ப்ரஸித்$^{3}$த$^{4}$: ।**
**கோவானயோரதி$^{4}$க: இத்யனுசிந்த்ய வ்ருத்$^{3}$தா$^{4}$:**
**ஸத்யம் ப்$^{3}$ருவந்து தமிமம் வயமாஸ்ரயாம: ॥ 39 ॥**

## மொழிபெயர்ப்பு.

**சங்கந் திகழுங் கடனீரிற் றகவார் சேலி னுருவுடனே**
**துங்கந் திகழச் சென்றெருவன் றுஊந்தா ளெருவன் றுகளில்லாச்**
**செங்கண் மீனக் கொடியாஊச் செகுத்த மிகுத்த சீர்த்தியினுன்**
**இங்கண்ணவருட் சிறந்தவன்யா ரிசைத்தாற் பெரியீ ரிறைஞ்சுதுமே.**

## பதப்பொருள்.

| | | |
|---|---|---|
| **ஏகஸ்து** | = | ஒருவனுனல், |
| **மத்ஸயதநும்** | = | மச்சவுடஊல, |
| **ஏத்ய** | = | அடைந்து, |
| **அப்$^{3}$தி$^{4}$தோயம்** | = | கடல்நீரை, |
| **க$^{3}$த:** | = | அடைந்தான், |
| **அந்ய:** | = | இன்னெருவன், |
| **விநிர்மதி$^{2}$ததத்$^{3}$ த்$^{4}$வஜவான்** | = | சங்கரிக்கப்பட்ட அந்த மீனக்கொடியோடு கூடிய மன்தஊயுடையவனுக, |
| **ப்ரஸித்$^{3}$த$^{4}$:** | = | ப்ரஸித்தியானவன்; |
| **அநயோ:** | = | இவ்விருவருக்குள், |
| **அதிக:** | = | சிறந்தவன், |
| **கோவா** | = | யாவன்? |
| **இதி** | = | இதஊ, |
| **அநுசிந்தியா** | = | ஆலோசித்து, |
| **வ்ருத்$^{3}$தா$^{4}$:** | = | பெரியவர்கள், |
| **ஸத்யம்** | = | உண்மையை, |
| **ப்$^{3}$ருவந்து** | = | சொல்லலாம் சொன்னுல், |

| | | |
|---|---|---|
| **தமிமம்** | = | அந்த விவனை, |
| **வயம்** | = | நாங்கள், |
| **ஆஸ்ரயாமஃ** | = | ஆஸ்ரயிக்கின்றேம். |

## பொழிப்பு.

ஒருவன் மச்சவுருவத்தையடைந்து சமுத்திரததையடைந்தான், இன்னெரு வன் மச்சக்கொடியினையுடைய மன்மதனைச் சங்கரித்த பிரசித்தியை யுடையவன், இவர்களி லுயர்ந்தவனைப் பெரியவர்கள் உண்மையாகச் சொன்னுல், நாங்களந்த மஹாபுருஷனைச் சரணமாக வடைந்து வாழ்கின்றேம்.

## விதப்பு.

ஒருவன் மச்சவுருவை யடைந்து கடல் நீரிற் பிரவேசித்தானென்றது - ஹரியை, அது அவ்வரி அவ்வாறு செய்திருத்தலால்.

தமிழ்நாட்டிற்குச் சிறந்த நகரமான மதுரையில் சத்தியவிரதன் என்னும் ஒரு அரசன் இருந்து செங்கோல செலந்த்திவந்தான். மணம்பொருந்திய மலர்மாலை யணிந்த தோளினை யுடைய வம்மன்னவன்வையையாற்றில் அருக்கியங் கொடுத்தற்காக எடுத்த நீரில் ஹரி மீனுருக்கொண்டு விளங்கினன்.

பாண்டிமன்னவனுகிய சத்தியவிரதன் தன் கையிலிருந்த அச்சிறு மீனினை ஹரியென்றுணராமையால் வையையாற்று நீரினுள் விட்டனன். உடனே அம்மீனு கிய ஹரி அம்மன்னவனைப் பார்த்து, மன்னவ! நானுன்னைச் சரணமாகவடைந்தேன்; சரணமாக வந்த என்னை எனக்குப் பகையாகவுள்ள ஜலசரங்கள் வசிக்கும் ஆற்று நீரில் அனுதரணையாக விட்டனை, என்னை இவ்வாறு விட்டுவிடுதல் நின்னீதிக்கேற்ற தன்று. மன்னவனே! என்னை நீ நான் சற்றே வளருங்காறுங் கமண்டல நீரி லிட்டுவைத்துச் சற்றே வளர்ந்ததற்குப் பின்னர் நல்ல தடாக நீரில் இட்டு என்னைக் காக்கவேண்டும் என்று கூறியது இம்மொழிகளைக்கேட்ட மன்னவனுக்கு அதிக ஆச்சரியந்தோன்றினமையால் அச்சிறுமீனினைப் பின்னருந் தானே எடுத்ததுக் கமண்டல நீரில் விட்டுவைத்தனன். அம்மீன் அக்கமண்டல நீரினைக்காட்டிலும் அதிகமாகப் பருமனுடையதாகியது பின்னரம் மன்னவன் அம்மீனினையெடுத்து ஒரு நல்ல தடாகததில விட்டு வளர்த்தனன். அம்மீன் அத்தடாகத்தைவிடவும் பெரிய தானமையால் பின்னர் அம்மன்ன னினி இதனை எங்கு வைத்துக் காப்பது என்றுலோசித்து அதனை எடுத்துக்கொண்டு சென்று ஆரவாரத்தினையுடைய கடனீரில் விட்டனன கடனீரில் விழுந்த அம்மீன் இரங்கிய தொனியுடனம்மன்னவனைப்பார்த்து, மன்னவ! நீ என்னை இங்குத் தனியே விட்டுச் சென்றுல் மிக்க வலுவினையுடைய இக்கடல்நீரிலுள்ள கொடிய மீனினங்க ளென்னைத் தின்று விடுமே என்று கூறியது.

அதனைக்கேட்ட மன்னவன் குதூஹலமடைந்து இம்மீன் என்னிறைவனுகிய ஹரியே இவ்வாறுயினுன் போலும் என்று கருதி, மீனமே! நீ என்னிறைவனுகிய

திருநெடுமாலன்றே? இழிவினையுடைய இம்மீனுருவத்தை நீ அடைந்த காரண மென்னை? என்று வினவி வணங்கினன்.

உடனே அம்மீன் அம்மன்னவனைப்பார்த்து, அரசனே! ஏழுநாட்கழித்தவுடனே இப்பெரிய கடல் திரிலோகங்களும் அழியுமாறு பெருகும்; அப்பொழுது நமது கட்டளையால் ஒரு தோணி தோன்றும்; அத்தோணியில் நின்னையும் இவ்வுலகிலிப்பொழுதுள்ளவற்றின் வித்துக்களையும் முனிச்சிரேஷ்டர்களின கூட்டங்களையும் ஏற்றிக்கொண்டு சுமந்து திரிந்து பிரளயநீர் வற்றியவுட னுங்களனைவரையும் இறக்கி விடுவேன். பின்னர் வேதத்தைத் திருடி யொளித்த ஒருவசுரனையுங் கொல்லுவேன் என்று கூறி அம்மீன் கடலினுட்சென்றது.

பின்னர் அம்மீன் கூறிய ஏழாநாளில் பெருமழை பெய்தவுடன் கடனீர் பொங்கியது. உடனே முனிவர்களையும் வித்துக்களையும் சத்தியவிரதனையும் அங்கு தோன்றின ஒடத்திலேற்றித் தான் தன் கொம்பினுலிழுத்துக்கொண்டு திரிந்தது. பிரளய நீங்கினவுடனே அனைவரையும் இறக்கிவிட்டுப் பின்னர் வேதத்தைக் கவர்ந்து சென்ற அசுரனையுங்கொன்று மீனுருவத்துடன் இருந்தனன் என்று பாகவத புராணமானது கூறுகின்றது. இதனை -

"*மருக்கமழ்தாரினுன்னவையையாற்றிடை*
*அருக்கியங்கொடுப்பதற்கஙகைதாங்கிய*
*திருக்கிளர்புனலிடைச்சேட்டிளங்கயல்*
*உருக்கொடுதனிமுதலுவந்துதித்தனன்.*
*மன்னவன்காண்டலும்வையையாற்றிடைத்*
*துன்னுறவிடுதலுமீனஞ்சொல்லுமால்*
*உன்னுழிச்சரணெனவுற்றவென்னைநீ*
*பன்னுபல்பகைகொளப்பழுதின்விட்டனை.*

*கன்னலினீரினுங்கமழுந்தண்சுனை*
*மன்னியநீரினுமருவவிட்டெனை*
*இன்னலொன்றறநனியினிதுகாக்கென*
*அன்னவனெஞ்சகமடைந்ததற்புதம்.*

*கடமுமிழ்களிற்றினுன்கன்னனீரிடை*
*விடுதலுங்கன்னலின்விட்டுவீங்கலால்*
*மடலவிழ்நறுமலர்வாவியுய்த்தனர்*
*நெடுமலர்ப்பூந்தடநிறைந்ததென்பவே.*

*தடநிறைந்திடுதலுந்தயங்குசெங்கதிர்*
*விடுமணிப்பூணினுன்வியந்துநோக்கினன்*
*கடலிடையுய்த்தனன்கலலென்கௌவைநீர்*
*படுதிரைப்பரவையிற்பாய்ந்துசொல்லுமால்.*"

என்றறெடுக்கத்த பாகவதப்பாடல்களாலுணர்க.

ஒருவன் மீனக்கொடியினையுடைய மன்மதனைக்கொன்ற கீர்த்தியினையுடைய வன் என்றது - ஹரனை, அது அவ்வரன் அவ்வாறு இயற்றியிருத்தலால். இதனை -

"*காமனெரிப்பிழம்பாகநோக்கிக்காமபனதோளியொடுங்கலந்து*
*பூமருநான்முகன்போல்வரேத்தப்புகலிநிலாவியபுண்ணியனே*
*ஈமவனத்தெரியாட்டுகந்தவெம்பெருமானிதுவென்கொல்சொல்லாய்*
*வீமருதண்பொழில்சூழ்மிழலைவிண்ணிழிகோயில்விரும்பியதே.*"

என்று திரவிடசூக்தியினும், மற்றையவைகளினும் வருதலைக்கொண்டுணர்க.

## தாத்பரியம்.

ஹரி மீனுருவடைந்தான்; ஹரன் மீனக்கொடியினனான மன்மதனைக் கொன்று னென்பதாம்.

## தாரதம்மியம்.

இழிந்த மீனுருவையடைந்தவனைக்காட்டிலும் அவ்விழிந்த மீனினைக் கொடியாகவுடையவனைக் கொன்றவன் சிறந்தவனாதலால், நாம் இழிந்த மீனுருவடைந்து கடனீரிற்புகுந்த ஹரியை அப்பிரதானமாகக்கருதி உயர்ந்த ஹரனடியை அடைந்து ஆஶ்ரயிக்கின்றோம். **(39)**

**इन्द्रानुजत्वमगमद्भुवि सर्वदैकः**
**इन्द्रादिभिः सुरगणैः परिपूज्यतेऽन्यः ।**
**कोवानयोरधिकः इत्यनुचिन्त्य वृद्धाः**
**सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥ ४० ॥**

**ஜந்ராநுஜத்வமগமদ்ভுவி ஸர்வதைகঃ**
**ஜந்ராদிভிঃ ஸுரগণৈঃ பরிபூஜ்யதேऽந்யঃ ।**
**கொவாநயொரधிகঃ ஜத்யநுசிந்த்ய வ்ருদ்ধாঃ**
**ஸத்யம் ব்রুவந்து தமிமம் வயமாஶ்ரயாமঃ ॥ ௪௦ ॥**

**இந்த்³ராநுஜத்வமக³மத்³பு⁴வி ஸர்வதை³கः**
**இந்த்³ராதி³பி⁴ः ஸுரக³ணைः பரிபூஜ்யதே(அ)ன்யः ।**
**கோவானயோரதி⁴கः இத்யனுசிந்த்ய வ்ருத்³தா⁴ः**
**ஸத்யம் ப்³ருவந்து தமிமம் வயமாஶ்ரயாமः ॥ 40 ॥**

## மொழிபெயர்ப்பு.

**மண்ணி லொருவ னெஞ்ஞான்றும் மகவா னிளைய னுவாரு**
**மெண்ண விருந்தா னின்னொருவ னிழிவி லிந்தி ராதியர்கள**
**பண்ணும் பூசை தனையேற்றுப் பயிலு மியலபைப் பரித்துள்ளான்**
**எண்ணி லிவருட் சிறந்தவன்யா ரிசைத்தாற் பெரியீரிறைஞ்சுதுமே.**

## தாரதம்மியம்.

ஒரு நீர்வாழ்சாதியைக்கொன்று ஒரு காட்டுவிலங்கான யானையைக் காத்ததினும், எமனென்பவனைக்கொன்று பிரமவிருடியான மார்க்கண்டேயனைக் காத்தது விசேடமாதலால், நாங்கள் மிருகத்திற்குபகாரஞ்செய்த ஹரியை அப்பிரதானமாக வகற்றி, பிராமணனுக்குபகாரஞ்செய்த ஹரனைச் சிறந்தவனாக நியாயமுகத்தாலறிந்து அம்மஹாபுருஷனைச் சரணமாக அடைகின்றோம். - என்றவாறு. **(67)**

**एकः पपौ भुवनभीकरकालकूट**
**मन्यःपपौ स्तनविषं खलु पूतनायाः ।**
**कोवानयो रधिकः इत्यनुचिन्त्य वृद्धाः**
**सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥ ६८ ॥**

ஏகஃ பபௌ ஹுவநஹீகரகாலகூட
மந்யஃபபௌ ஸ்தநவிஷம் வலு பூதநாயாஃ ।
கொவாநயொ ரதிகஃ இத்யநுசிந்த்ய வ்ருத்தாஃ
ஸத்யம் ப்ருவந்து தமிமம் வயமாஶ்ரயாமஃ ॥ கூஅ ॥

**ஏகः பபௌ பு$^4$வனபீ$^4$கரகாலகூட**
**மன்யःபபௌ ஸ்தனவிஷம் க$^2$லு பூதனாயாः ।**
**கோவானயோ ரதி$^4$கः இத்யனுசிந்த்ய வ்ருத்$^3$தா$^4$ः**
**ஸத்யம் ப்$^3$ருவந்து தமிமம் வயமாஶ்ரயாமः ॥ 68 ॥**

## மொழிபெயர்ப்பு.

**மண்ணுங் கடலும் மாவானும் மற்று முள்ள மாண்பொருளும்**
**விண்ணுங் காலு மலறவரும விடத்தை யொருவன் விழுங்கினான்**
**நண்ணும் பேயி னகில்விடத்தை நக்கி யொருவ னயந்துற்றான்**
**எண்ணு மிவருட் சிறந்தவன்யா ரிசைத்தாற் பெரியீ ரிறைஞ்சுதுமே.**

## பதப்பொருள்.

| | | |
|---|---|---|
| **ஏக:** | = | ஒருவன், |
| **பு$^4$வனபீ$^4$கரகாலகூடம்** | = | உலகினுக்குக்குப் பயத்தைத்தருகிற காலகூட விஷத்தை, |
| **பபௌ** | = | குடித்தான், |
| **அந்ய:** | = | இன்னொருவன், |
| **பூதனா** | = | பூதனையினுடைய, |
| **ஸ்தனவிஷம்** | = | தனவிஷத்தை, |
| **பபௌக$^2$லு** | = | புசித்தான்; |

| | | |
|---|---|---|
| **அநயோ:** | = | இவ்விருவருக்குள், |
| **அதிக:** | = | சிறந்தவன், |
| **கோவா** | = | யாவன்? |
| **இதி** | = | இதனை, |
| **அநுசிந்தியா** | = | ஆலோசித்து, |
| **வ்ருத்³தா⁴:** | = | பெரியவர்கள், |
| **ஸத்யம்** | = | உண்மையை, |
| **ப்³ருவந்து** | = | சொல்லலாம் சொன்னால், |
| **தமிமம்** | = | அந்த விவனை, |
| **வயம்** | = | நாங்கள், |
| **ஆஶ்ரயாம:** | = | ஆஶ்ரயிக்கின்றோம். |

## பொழிப்பு.

ஒருவன் அஞ்சத்தக்க காளகூடவிஷத்தைப் பானஞ்செய்தான், மற்றொருவன் பூதனையின் தனத்திற் பூசியிருந்த (குறைவான) விடத்தைப் பானஞ்செய்தான், பெரியவர்களே! இவ்விருவருக்கு ளிந்தவிடயத்திற் சிறந்தவன் யாவன்? நீங்கள் உண்மையாகச் சொன்னால், நாங்களந்த மஹாபுருஷனைச் சரணமாக வடைகின்றோம்.

## விதப்பு.

ஒருவன் காளகூடவிஷத்தைப் புசித்தானெனறது - ஹரனை, அது அவ்வரன் அவ்வாறு குடந்த்தமையால். இதனை -

திருமால் தேவர்கள் நிமித்தம் பாற்கடலை மந்தரமென்னு மத்திட்டுக் கடைவித்தனர், உடனே அதனிற் கொடிய ஆலால விடமுண்டாகியது. அதனைக் கண்ட வமரராதிய ரஞ்சி யோடினர்கள். திருமால நானிருக்கின்றேன், அஞ்சாதீரென் றுரைத்துத் தன்னதாழியுடன் விடத்தினருகி லெய்திக் கருகி இனி யென்செய்வதென விண்ணவருடன் கலந்து ஓடி ஸ்ரீகைலையையடைந்து இறைவனை வணங்கி அண்ணலே! கொடிய விடம் கடலகடைந்த போழ் துண்டாகியது. அதனை மிர்த்துஞ் சயரான தேவரீரே அங்கீகரிக்க வேண்டுமென்றனர். உடனே அனைவரையு மஞ்சுமாறு செய்த அவ்விடத்தை இறைவனுண்டனன், இதனை -

"*மாழையுண்கணிநோக்கலுந்திருவுளமகிழ்ந்து*
*பாழிமால்விடைக்கொடிமிசையுயர்ததருள்பகவ*
*னேழைவானவர்க்கிரங்கியேயினிதுகண்ணோடி*
*யாழிவல்விடம்பருகினனகிலமுமுய்ய*" என்று காஞ்சிப்புராணத்தும்,

"*கோலாலமாகிக்குரைகடல்வாயன்றெழுந்த*
*வாலாலமுண்டானவன்சதுதர்னென்னேடீ*

*யாலாலமுண்டிலனேலன்றயன்மாலுள்ளிட்ட*
*மேலாயதேவரெல்லாம்வீடுவாகாண்சாழலோ"*

என்று திருவாசகத் திருமுறையினும் வருதலைக்கொணடுணர்க.

ஒருவன் பூதனையின றனவிடபானஞ் செய்தானென்றது - ஹரியை, அது அவ்வரி அவ்வண்ணம் செய்தமையால்.

ஹரி கண்ணனுக வவதரித்த ஞான்று அவரிக்குப் பகைவனுகவும், மாமனுக வுமிருந்த கஞ்சனென்பவ னனுப்பிய பூதனையென்னும் பிசாசி, தனது தன்னியத்தில் விடத்ததைத் தடவினவளாக மாயவுருவத்துடன் வந்து பாலூட்டினுள். ஹரி அப்பாலையுண்டு அவளைக் கொன்றுன். இதனை -

"*செஞ்சுடர்மணிக்கலைசிலம்பொடுசிலம்ப*
*வஞ்சியெனநின்றெசிமருங்குறடுமாற*
*நஞ்சுபொதிவெம்முலையருத்துறநடந்தாள்*
*அஞ்சுவருபூதனையணங்குருவெடுத்தே.* என்றும்,

*அறிந்துநகையாடிமுலையங்கைகொடுபற்றி*
*மறங்குலவுவஞ்சமகண்மாமுலைமணிக்கண்*
*திறந்தொழுகுபாலினெடுசெய்யதளிரென்னப்*
*பிறங்குகனிவாய்முகில்பிழிந்துயிர்குடித்தான்"* என்னும் பாகவதத்தாலுணர்க.

## தாத்பரியம்.

ஹரி பூனையின் தனவிடமுண்டவன்; ஹரன் ஆலாலமுண்டவன் என்பதாம்.

## தாரதம்மியம்.

திருமால் முதலியவனைவரையும் பின்றெடாந்து வந்ததுவும், திருமாலைக் கரியவனுகச் செய்ததுவுமான கொடிய ஆலால விஷத்திற்கும, பூதனையின் தந்தையே ஒன்றும் ஊறு புரியாத சாமான்யவிடத்திற்கும் வித்தியாசமிருப்பது போன்றே அவைகளைப் பானஞ்செய்தவர்களுக்கும் தாரதம்மியம் இருக்குமென்று கூறவேண்டுவதின்றும். இதனுல் நாங்கள் குறைவான தனவிடபானம் செய்த ஹரி யை அப்பிரதானமாக அகற்றி, மிகுதியான காளகூட விஷபானஞ்ஞுசெய்த ஹரனைச் சரணமாக அடைகின்றேம் . - என்றவாறு. **(68)**

**एकस्य सप्तजलधीन् पिबति स्म भक्त**
**स्तस्यैकदेशमितरस्तु बबन्ध यत्नात् ।**
**कोवानयोरधिकः इत्यनुचिन्त्य वृद्धाः**
**सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥ ६६ ॥**

ஊகஸ்ய ஸப்தஜலயீநு பிஸதி ஷ ஹக்த
ஷஸ்யைகதெஶமிதரஸ்து ஸஸந்ய யத்நாத் ।
கொவாநயொரயிகஃ ஐத்யநுவிந்த்ய வூதாஃ
ஸத்யம் ஸ்ரூவந்து தமிமம் வயமாஶ்ரயாமஃ ॥ சுசு ॥

**ஏகஸ்ய ஸப்தஜலதீ⁴ன் பிப³தி ஸ்ம ப⁴க்த**
**ஸ்தஸ்யைகதே³ஶமிதரஸ்து ப³ப³ந்த⁴ யத்னாத் ।**
**கோவானயோரதி⁴கஃ இத்யனுசிந்த்ய வ்ருத்³தா⁴ஃ**
**ஸத்யம் ப்³ருவந்து தமிமம் வயமாஶ்ரயாமஃ ॥ 66 ॥**

## மொழிபெயர்ப்பு.

**ஈரோன் றியவக் கடலேழி லேய்ந்த நீரை யெழிலொருவன்**
**பேரோன் றியசிந் தையனுகப் பிறங்கு மடியன பிடித்துண்டான்**
**தாரோன்றியதோ ளினிஞெருவன் தனியோர்கடலைமுயன்றடைத்தான்**
**ஏரோன் றிவருட் சிறந்தவன்யா ரிசந்த்தாற் பெரியீ ரிறைஞ்சுதுமே.**

## பதப்பொருள்.

| | | |
|---|---|---|
| **ஏகஸ்ய** | = | ஒருவனுடைய, |
| **பக்த:** | = | பக்தன், |
| **ஸப்த** | = | ஏழுவகையான, |
| **ஜலதீ⁴ன்** | = | கடல்களை, |
| **பிப³தி ஸ்ம** | = | பானஞ்செய்தானே, |
| **இதரஸ்து** | = | மற்றொருவன், |
| **தஸ்ய** | = | அந்த கடலினுடைய, |
| **ஏகதேசம்-யத்நாத்** | = | ஒருபாகத்தை பிரயத்தினத்தோடே, |
| **ப³ப³ந்த⁴** | = | கட்டினான்; |
| **அநயோ:** | = | இவ்விருவருக்குள், |
| **அதிக:** | = | சிறந்தவன், |
| **கோவா** | = | யாவன்? |
| **இதி** | = | இதனை, |
| **அநுசிந்தியா** | = | ஆலோசித்து, |
| **வ்ருத்³தா⁴ஃ** | = | பெரியவர்கள், |
| **ஸத்யம்** | = | உண்மையை, |
| **ப்³ருவந்து** | = | சொல்லலாம் சொன்னால், |
| **தமிமம்** | = | அந்த விவனை, |
| **வயம்** | = | நாங்கள், |
| **ஆஶ்ரயாமஃ** | = | ஆஶ்ரயிக்கின்றோம். |

## பொழிப்பு.

பெரியவர்களே! ஒருவனுடைய பத்தனே எழுவகையினதான கடல்களையும் பானஞ்செய்தான், இன்னொருவன் தானே கடலின் ஒருபாகத்தை வெகு கட்டத்துடன் கட்டினுன், இவரிற் சிறந்தவன் யாவன்? அவனை நீங்களுண்மையாக வுரைத்தால் நாங்க ளவனை ஆஶ்ரயிக்கின்றோம்.

## விதப்பு.

ஒருவனுடைய பத்தன் எழுவகையினதான கடல்களையும் குடித்தானென்றது - ஹரனை, அது அவ்வரனுக்கன்பன் அவ்வாறு குடித்தமையால்.

விருத்திரனென்னு மசுரனை இந்திரன் போரிற் கொல்லச்சென்றனன். உடனே விருத்திரன் இனி நாமிருந்தாற் கெடுதி சம்பவிக்குமென ஓடிக் கடலிற் புகுந்தொளித் தான். இந்திரன் கடனீரினுட்புக்க, விருத்திரனைக் கொல்லுமாறு சிவபத்தனுன விந்தமடக்கிய குறுமுனியையடைந்து வணங்கி ஐயனே! என்பகைஞன் கடலிற் புக் கொளித்திருக்கின்றுன் அவனைக் காட்டித்தரவேண்டும் எனறு கேட்டுக்கொள்ளுதலும் அம்முனிவன் சிவத்தியானத்துடன் கடலினருகிலாகிக் கடனீரை அள்ளி ஆசமனஞ் செயதனன். உடனே கடனீரனைத்தும் அகத்தியமுனியின வயிற்றினிடத்தாயின. பின்னர் நீரற்ற கடற்குட் காணப்பட்ட விருத்திரனை இந்திரன் கொன்றுன். இதனை -

"*என்றவனிடுக்கணடீர்ப்பானிகல்புரிபுலன்களைந்தும்*
*வென்றவனெடியோன்றன்னைவிடையவன்வடிவமாக்கி*
*நின்றவனறிவானந்தமெய்மையாய்நிறைந்தவெள்ளி*
*மன்றவனூழிச்செந்தீவடிவினைமனத்துட்கொண்டான்.*

*கைதவன்கரந்துவைகுங்கடலைவெற்படக்குங்கையிற்*
*பெய்துழுந்தெல்லைத்தாக்கிப்பருகினுன்பிறைசேர்சென்னி*
*யையனதருளைப்பெற்றுர்க்கதிசயமிதென்கொன்மூன்று*
*வையமந்தொழிலுஞ்செய்யவல்லவரவரேயன்றோ'*

என்று வரும் திருவிளையாடலாதிகளாலுணர்க.

ஒருவன் அந்தக்கடலினுடைய ஒருபாகத்தைப் பிரயாசைப்பட்டுக் கட்டினுனெ ன்றது - ஹரியை, அது அவ்வரி அவ்வண்ணஞ் செய்திருத்தலால்.

ஹரி இராமனுகவந்த ஞான்று அவன் மனைவியை இராவணனெடுத்து இலங்கையில் சிறைவைத்தனன். இராமன் கடலினடுவிலுள்ள இலங்கைக்குச் செல்ல வழியின்றி விபீடணன் முதலியோருடன் ஆலோசித்துப் பின்னர் குரங்குக ளையும் வருணனையும் ஆதரவாகக்கொண்டு அணைகட்டி இலங்கைபுக்கானென்பது இராமாயணம். இதனை -

"*அளவிகந்தவரிக்குலத்தோரெழில்*
*வளரநின்றவரைக்குழுவுய்த்திட*
*உளமுவந்துநூறேசஊயாமஊ*
*நளன்விரைந்தவணன்கமைத்தானரோ*" என்னும் பாகவதத்தாலுணர்க.

## தாத்பரியம்.

ஹரனுக்கன்பன் ஏழுகடனீரையுங் குடித்தான்; ஹரி கடலினொருபாகத்தை வெகு வருத்தப்பட்டு அடைத்தான் என்பதாம்.

## தாரதம்மியம்.

ஒருவனுடைய ஊழியன் செய்யுமளவுகூட இன்னொருவன் செய்யானுகிற் குறிப்பிட்ட வவன் இவனுக் கிஊயாகானுதலால், சமுத்திரவிஷயத்திற் ருழ்வடைந்த ஹரியை அப்பிரதானமாக வகற்றி, உயாந்த ஹரஊச் சரணமாக அடைகின்றேம் - என்றவாறு. **(69)**

**विश्वात्मकत्वमयते खलु तत्र चैके**
**विश्वेश्वरत्वपदवीमयते तथान्यः ।**
**कोवानयोरधिकः इत्यनुचिन्त्य वृद्धाः**
**सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥ ७० ॥**

**விஶ்வாத்மகத்வமயதெ வ஖ு தத்ர சைகெ**
**விஶ்வெஶ்வரத்வபதவீமயதெ தயாந்யஃ ।**
**கொவாநயொரயிகஃ ஐத்யநுசிந்த்ய வ்ருஃ**
**ஸத்யம் ப்ருவந்து தமிமம் வயமாஶ்ரயாமஃ ॥ எ० ॥**

**விஸ்வாத்மகத்வமயதே க[2]லு தத்ர சைகே**
**விஸ்வேஸ்வரத்வபத[3]வீமயதே ததா[2]ன்ய꞉ ।**
**கோவானயோரதி[4]க꞉ இத்யனுசிந்த்ய வ்ருத்[3]தா[4]꞉**
**ஸத்யம் ப்[3]ருவந்து தமிமம் வயமாஸ்ரயாம꞉ ॥ 70 ॥**

## மொழிபெயர்ப்பு.

**மன்னும் விச்சு வாத்துமனு மருவு மொருவன் மாநிலத்திற்**
**துன்னும் விச்சு வேச்சுரனுத் துலங்கு மொருவன் றுகளில்லாப்**
**பொன்னு மணியு முதலபல பொருந்து மியலிற் குறைவில்லா**
**ரென்னு மிவருட் சிறந்தவன்யா ரிசைத்தாற் பெரியீ ரிறைஞ்சுதுமே.**

## பதப்பொருள்.

| | | |
|---|---|---|
| **த்தரச** | = | அவர்களுக்குள்ளேயும |
| **ஏக:** | = | ஒருவன், |
| **விஶ்வாத்மகத்வம்** | = | விசுவசொரூபமாகின்றதை, |
| **அயதேக[2]லு** | = | அடைந்திருக்கின்றனல்லவா, |
| **ததா[2]** | = | அப்படியே, |
| **அந்ய:** | = | இன்னொருவன் |
| **விஶ்வேஶ்வரத்வபத[3]வீம்** | = | ஜகதீசுவரபதவியை, |
| **அயதேக[2]லு** | = | அடைந்திருக்கின்றனல்லவா, |
| **அநயோ:** | = | இவ்விருவருக்குள், |
| **அதிக:** | = | சிறந்தவன், |
| **கோவா** | = | யாவன்? |
| **இதி** | = | இதனை, |
| **அநுசிந்தியா** | = | ஆலோசித்து, |
| **வ்ருத்[3]தா[4]:** | = | பெரியவர்கள், |
| **ஸத்யம்** | = | உண்மையை, |
| **ப்[3]ருவந்து** | = | சொல்லலாம் சொன்னல், |
| **தமிமம்** | = | அந்த விவனை, |
| **வயம்** | = | நாங்கள், |
| **ஆஶ்ரயாம:** | = | ஆஶ்ரயிக்கின்றேம். |

## பொழிப்பு.

பெரியோர்களே! ஒருவன் விசுவரூபமானவனுக இருகின்றன், இன்னொருவன் விசுவேசனாக விருக்கின்றான், இவ்விருவர்களி லெவன் சிறந்தவன்? நீங்களுண்மை யாக வுரையுங்கள் உங்களாற் சிறந்தவனுகச் சொல்லப்பட்ட அவனை நாங்கள் சரணமாகவடைகின்றேம்.

## விதப்பு.

ஒருவன் விசுவாத்மகனென்றது - ஹரியை, அது அவ்வரி அவ்வண்ணமிருத் தலால். இதனை -

"மருவியமாயை மகத்தகங்கார மதிபொறிபுலன்குணஞ்சீலம், தரைபுனல்கனல் கால்வான்முதலெவையுஞ்சாற்றுநாமாயினுந்தருமம், திருவருளெழில்சீர் திகழ்வ லம்பொறுமை தெளிவுமெய்கொடைசிறப்பார்ந்த, அரசவெங்குறையுமவணெலாநீ மற்றறிதியெனகஜலப்பிரிவெனவே" எனறு பாகவதத்தும்,

என்று கோபாலதாபனியுபநிடதத்தும் வருதலைக்கொண்டுணர்க.

ஒருவன் விசுவாதிகனென்றுரைத்தது - ஹரனை, அது அவ்வரன் அவ்வண்ணம் விசுவாதிகனுக விருத்தலால். இதனை -


என்றுவரும் சுருதிவாக்கியத்தாலும்,

"*விச்சுவன்சிறைப்புள்ளரசுயர்த்தவன்விளம்பும்*
*விச்சுவாதிகனெறுழ்வலிச்சினவிடையூர்தி*
*யெச்சமேசுரும்புளர்துழாயலங்கலானென்ப*
*வெச்சநாயகன்பொலந்துணரிதழிமாலிகையான்*"
என்னுங் காஞ்சிப்புராணத்தாலும் உணர்க.

## தாத்பர்யம்.

ஹரி விசுவரூபன், ஹரன் விச்வேச்வரன் என்பதாம்.

## தாரதம்மியம்.

மன்னவனிற் சக்கரவர்த்தி சிறந்தவனுமாறுபோல, விசுவனுன ஹரியினும் விச்வேசனுன ஹரன் சிறந்தவனுயினுன்; இதனுல் நாங்கள் இந்தவிஷயத்திற் ருழ்வடைந்த ஹரியை அப்பிரதானமாக வகற்றி, இதுவிஷயத்தி லுயர்ந்தவனுக அறியப்படுகின்ற ஹரனுடைய சரணங்களைச் சரணமாக வடைகின்றோம். - என்றவாறு. **(70)**

**एको भुजङ्गशयने तनुतेऽतिसुप्ति**
**मन्यः करोति भुजगेन्द्र विभूषणानि ।**
**कोवानयोरधिकः इत्यनुचिन्त्य वृद्धाः**
**सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥ ७१ ॥**

**ஏகொ ஹுஜஜ்ஶயநெ தநுதெ௨திஸுப்தி**
**மந்யஃ கரொதி ஶ்ருஜகெந்ஶ் விஹூஷணாநி ।**
**கொவாநயொரயிகஃ ஐத்யநுசிந்த்ய வ்ருஜாஃ**
**ஸத்யம் ப்ருவந்து தமிமம் வயமாஶ்ரயாமஃ ॥ எக ॥**

**ஏகோ பு⁴ஜங்க³ஶயனே தனுதே(அ)திஸுப்தி**
**மன்யః கரோதி ஶ்ருஜகே³ந்த்³ர விபூ⁴ஷணானி ।**
**கோவானயோரதி⁴கః இத்யனுசிந்த்ய வ்ருத்³தா⁴ః**
**ஸத்யம் ப்³ருவந்து தமிமம் வயமாஶ்ரயாமః ॥ 71 ॥**

## மொழிபெயர்ப்பு.

**ஆடு மரவ சயனத்தை யடைந்து தூங்கு மாலொருவன்**
**ஓடு மரவி லிந்திரரா யுறு வோர் தம்மை யுயர்கரத்தி**
**னீடு மெழில்கொள் கங்கணமா நிறைத்தா னொருவன நிகழுலகி**
**லீடி லிவருட் சிறந்தவன்யா ரிசந்த்தாற் பெரியீ ரிறைஞ்சுதுமே.**

## பதப்பொருள்.

| | | |
|---|---|---|
| **ஏக:** | = | ஒருவன், |
| **பு⁴ஜங்க³ஶயனே** | = | சர்ப்பசயனத்தில், |
| **அதிஸுப்திம்** | = | மிகவுந்தூங்குதலை, |
| **தனுதே** | = | செய்கின்றான், |
| **அந்ய:** | = | இன்னொருவன், |
| **பு⁴ஜகே³ந்த்³ர விபூ⁴ஷணானி** | = | சர்ப்பேந்திர பூஷணங்களை, |
| **கரோதி** | = | செய்கிறான் (அணிகின்றான்); |
| **அநயோ:** | = | இவ்விருவருக்குள், |
| **அதிக:** | = | சிறந்தவன், |
| **கோவா** | = | யாவன்? |
| **இதி** | = | இதனை, |
| **அநுசிந்தியா** | = | ஆலோசித்து, |
| **வ்ருத்³தா⁴:** | = | பெரியவர்கள், |
| **ஸத்யம்** | = | உண்மையை, |
| **ப்³ருவந்து** | = | சொல்லலாம் சொன்னால், |
| **தமிமம்** | = | அந்த விவனை, |
| **வயம்** | = | நாங்கள், |
| **ஆஶ்ரயாம:** | = | ஆஶ்ரயிக்கின்றோம். |

## பொழிப்பு.

ஒருவன் அரவசயனத்திற் தூங்குகின்றான், மற்றொருவன் நாகேந்திராபரணங்களை அணிந்திருக்கின்றான், பெரியவர்களே! இன்னவருட் சிறந்தவன் யாவன்? நீங்களுரைத்தால், நாங்களத் மஹாபுருஷனைச் சரணமாக வடைக்கின்றோம்.

## விதப்பு.

ஒருவன் சயனத்தை அரவமாகவுடையவனென்றது - ஹரியை, அது அவ்வரி அவ்வண்ணம் அரவசயனத்தை யுடையவனாக விருத்தலால். இதனை -

"        அரவணையாயரேறேயம்மமுண்ணத்துயிலெழாயே" என்னு நாலாயிரப்பிரபந்த த்தாலுணர்க.

ஒருவன் அரவபூட்ணனுக விருக்கின்றுனென்றது - ஹரனை, அது அவ்வரனவ் வண்ண மணிந்திருத்தலால். இதனை -

"புற்றில்வாளரவார்த்தபிரானைப்பூதநாதனை" என்னுந் திரவிட வேத்ததாலுணர்க.

## தாத்பரியம்.

ஹரி அரவசயனன், ஹரன் அரவாபரணன் என்பதாம்.

## தாரதம்மியம்.

மிகவும் பெரிய அரவத்தின்மீது கிடப்பவனிலும், நாகேந்திரர்களை பெருஞ்சு மையாகக்கருதாது ஆபரணமாகப்பூண்டவன் சிறந்தவனாதலால், நாங்கள் இதுவிஷ யத்திற றாழ்வடைந்த ஹரியை அப்பிரதானமாக வகற்றி, இதுவிடயத்திறசிறந்த ஹரனைச் சரணமாக வடைகின்ரேம் - என்றவாறு. **(71)**

**एकोऽर्जुनस्य जयदः खलु सूतभावा**
**दन्योऽर्जुनस्य जयदोऽभवदस्त्रदानात् ।**
**कोवानयोरधिकः इत्यनुचिन्त्य वृद्धाः**
**सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥ ७२ ॥**

**ஷகொ ஜூநஸ்ய ஜயஃ வலு ஸூதஹாவா**
**ஃந்யொ ஜூநஸ்ய ஜயஷொ ஹவஃஸ்ஃாநாத் ।**
**கொவாநயொரயிகஃ ஐத்யநுவிந்த்ய வ்ருஃாஃ**
**ஸத்யம் ஞுவந்து தமிமம் வயமாஶ்ரயாமஃ ॥ எஉ ॥**

**ஏகோ(அ)ர்ஜுனஸ்ய ஜயத$^{3}$: க$^{2}$லு ஸூதபா$^{4}$வா**
**த$^{3}$ன்யோ(அ)ர்ஜுனஸ்ய ஜயதோ$^{3}$(அ)ப$^{4}$வத$^{3}$ஸ்த்ரதா$^{3}$னாத் ।**
**கோவானயோரதி$^{4}$க: இத்யனுசிந்த்ய வ்ருத்$^{3}$தா$^{4}$:**
**ஸத்யம் ப்$^{3}$ருவந்து தமிமம் வயமாஶ்ரயாம: ॥ 72 ॥**

## மொழிபெயர்ப்பு.

**வில்லிற் சிறந்த பற்குனன்றன்வியனறே ரோட்டி விசயத்தை**
**ஒல்லை யவனுக் கேயளிததா ஞெருவ ஞெருவ னுயரம்பைச்**
**சொல்லிற் சிறந்த பார்த்தனுக்கே தூக்கி யளித்துச் சுகமீந்தான்**
**எல்லி லிவருட் சிறந்தவன்யா ரிசைத்தாற் பெரியீ ரிறைஞ்சுதுமே.**

## பதப்பொருள்.

| | | |
|---|---|---|
| **ஏக:** | = | ஒருவன், |
| **அர்ச்சுநஸ்ய** | = | அருச்சுனனுக்கு, |
| **சூதபரவாத்** | = | சாரதியாய் இருந்ததனாலே, |
| **ஜயத$^{3}$:க$^{2}$லு** | = | வெற்றியை கொடுத்தவனல்லவா, |
| **அந்ய:** | = | இன்னொருவன், |
| **அர்ச்சுநஸ்ய** | = | அருச்சுனனுக்கு, |
| **அஸ்திரதாநாத்** | = | அஸ்திரங்களைக் கொடுக்கிறதினாலே, |
| **ஜயத:** | = | ஜயத்தை கொடுத்தவனாக, |
| **அபவத்** | = | ஆனான்; |
| **அநயோ:** | = | இவ்விருவருக்குள், |
| **அதிக:** | = | சிறந்தவன், |
| **கோவா** | = | யாவன்? |
| **இதி** | = | இதனை, |
| **அநுசிந்தியா** | = | ஆலோசித்து, |
| **வ்ருத்$^{3}$தா$^{4}$:** | = | பெரியவர்கள், |
| **ஸத்யம்** | = | உண்மையை, |
| **ப்$^{3}$ருவந்து** | = | சொல்லலாம் சொன்னால், |
| **தமிமம்** | = | அந்த விவனை, |
| **வயம்** | = | நாங்கள், |
| **ஆஶ்ரயாம:** | = | ஆஶ்ரயிக்கின்றோம். |

## பொழிப்பு.

பெரியோர்களே! ஒருவன் பார்த்தனுக்குச் சாரதியாகவிருந்து அவனுக்கு வெற்றியையளித்தான், மற்றொருவன் பார்த்தனுக்குப் பாணமளித்ததனாலே அவனுக்கு வெற்றியை யளித்தான், இவ்விருவரிற் சிறந்தவன் எவன்? அவனை நீங்களுரைத்தால், நாங்களந்த மஹாபுருஷனைச் சரணமாக வடைகின்றோம்.

## விதப்பு.

ஒருவன் பார்த்தனுக்குச் சாரதியாகி வெற்றியளித்தானென்றது - ஹரியை, அது ஹரி அவ்வண்ணஞ் செய்திருத்தலால் ஹரி பாரத யுத்தத்தி லருச்சுனனுக்குச் சாரதியாகி வெற்றியளித்தான். இதனை -

"*அடற்சிலைவிசயனிவ்வாறுரைத்தலுமமலன்வஞ்சப்*
*படவரவுயர்த்தவென்றிப்பார்த்திபன்றன்னைநோக்கி*
*நடையுடைப்புரவித்திண்டேர்நானிவற்கூர்தலன்றி*
*மிடைபடையேவிநும்மோடமர்செயேன்வேந்தேயென்றான்*"

என்னும் பாரதத்தாலுணர்க.

ஒருவன் பார்த்தனுக்கு அம்பிஜனக்கொடுத்து வெற்றி யளித்தானென்றது - ஹரஜன, அது அவ்வண்ண மரனியற்றியிருத்தலால். இதஜன -

"*பரியதோர்பாம்பரைமேலார்த்தார்போலும்*
*பாசுபதம்பார்த்தற்களித்தார்போலும்*" என்னும் தமிழ்வேத்ததாலுணர்க.

## தாத்பரியம்.

ஹரி, பார்த்தனுக்குச் சாரதியாக விருந்து வெற்றியளித்தவன்; ஹரன் பார்த்தனுக்குப் பாணமளித்து வெற்றியைக் கொடுத்தவன் என்பதாம்.

## தாரதம்மியம்.

தேர்ப்பாகனுகவிருந்து வெற்றியளித்தவனிலும், அம்புகஜள யளித்து வெற்றி யளித்தவன் சிறந்தவனுதலால், நாங்கள் இந்தவிஷயத்திலிழிவடைந்த ஹரியை அப் பிரதானமாகவகற்றி யுயர்ந்த ஹரஜனச் சரணமாக அடைகின்றேம். - என்றவாறு. (72)

**एकः पुमानिति परो दयितेति पुत्रः**
**सास्ता तयोरिति च सर्वजगत्प्रसिद्धिः ।**
**कोवानयोरजिकः इत्यनुचिन्त्य वृद्धाः**
**सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥ ७३ ॥**

𑌏𑌕𑌃 𑌪𑍁𑌮𑌾𑌨𑌿𑌤𑌿 𑌪𑌰𑍋 𑌦𑌯𑌿𑌤𑍇𑌤𑌿 𑌪𑍁𑌤𑍍𑌰𑌃
𑌸𑌾𑌸𑍍𑌤𑌾 𑌤𑌯𑍋𑌰𑌿𑌤𑌿 𑌚 𑌸𑌰𑍍𑌵𑌜𑌗𑌤𑍍𑌪𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌃 ।
𑌕𑍋𑌵𑌾𑌨𑌯𑍋𑌰𑌜𑌿𑌕𑌃 𑌇𑌤𑍍𑌯𑌨𑍁𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯 𑌵𑍃𑌦𑍍𑌧𑌾𑌃
𑌸𑌤𑍍𑌯𑌂 𑌬𑍍𑌰𑍁𑌵𑌨𑍍𑌤𑍁 𑌤𑌮𑌿𑌮𑌂 𑌵𑌯𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑌾𑌮𑌃 ॥ ௭௩ ॥

**ஏக꞉ புமானிதி பரோ த³யிதேதி புத்ர꞉**
**ஸாஸ்தா தயோரிதி ச ஸர்வஜக³த்ப்ரஸித்³தி⁴꞉ ।**
**கோவானயோரஜிக꞉ இத்யனுசிந்த்ய வ்ருத்³தா⁴꞉**
**ஸத்யம் ப்³ருவந்து தமிமம் வயமாஸ்ரயாம꞉ ॥ 73 ॥**

## மொழிபெயர்ப்பு.

**சோதிக் கமல வாண்முகத்துத் தோகை வடிவத் தோன்றலென**
**வோதிக் களிக்கு மிவ்வுலக மொருவன் றன்ஜன யொருவஜனயோ**
**நீதிப் புருட னென்பார்கள் நிகழந்த்து மிவர்தம் மகன்சாத்தன்**
**ஈதி லிவருட் சிறந்தவன்யா ரிசைத்தாற் பெரியீ ரிறைஞ்சுதமே.**

## பதப்பொருள்.

| | | |
|---|---|---|
| **ஏக:** | = | ஒருவன், |
| **புமான்** | = | புருஷன், |
| **இதி** | = | என்றும், |
| **பர:** | = | மற்றொருவன், |
| **தயிதா** | = | மனைவி (பெண்) |
| **இதி** | = | என்றும், |
| **தயோ:** | = | அவர்களுக்கு பிள்ளை, |
| **சாஸ்தா** | = | சாத்தன், |
| **இதிச** | = | என்றும், |
| **ஸர்வஜக³த்ப்ரஸித்³தி⁴:** | = | எல்லாவுலகங்களிலும் பிரசித்தி, |
| **அநயோ:** | = | இவ்விருவருக்குள், |
| **அதிக:** | = | சிறந்தவன், |
| **கோவா** | = | யாவன்? |
| **இதி** | = | இதனை, |
| **அநுசிந்தியா** | = | ஆலோசித்து, |
| **வ்ருத்³தா⁴:** | = | பெரியவர்கள், |
| **ஸத்யம்** | = | உண்மையை, |
| **ப்³ருவந்து** | = | சொல்லலாம் சொன்னால், |
| **தமிமம்** | = | அந்த விவனை, |
| **வயம்** | = | நாங்கள், |
| **ஆஶ்ரயாம:** | = | ஆஶ்ரயிக்கின்றோம். |

## பொழிப்பு.

ஒருவன் மனைவியென்றும், ஒருவன் புருஷனென்றும், அவ்விருவர் சம்பந்தத்தாலுண்டான மைந்தன் ஹரிஹரபுத்திரனென்றும் ஸகலலோகப்பிரசித்தம். பெரியவர்களே! இவ்விருவரிற் சிறந்தவன் யாவன்? அவனை நீங்களுரைத்தால், நாங்களந்த மஹாபுருஷனைச் சரணமாக அடைகின்றோம்.

## விதப்பு.

ஒருவன் பெண்ணுருவானவனென்ந்து - ஹரியை, அது அவ்வரி அவ்வண்ணம் பெண்ணுருவடைந்திருத்தலால். இதனை -

"*விழுந்தொருகோடிவண்டுமிதிப்பவாய்நெகிழந்துபைந்தேன்*
*வழிந்தபூங்கடுக்கைமார்பன்வாள்விழிபரப்பிநோக்க*
*எழுஞ்சுடர்ப்பரிதியென்னவிலங்குகூராழிமாலோன்*
*பிழிந்துகொள்வனையசெவ்விப்பெண்ணுருவெடுத்துநின்றன்*"

என்னும் பாகவதத்தாலுணர்க

ஒருவன் அந்தப்பெண்ணை யணைந்த புருஷனென்றது - ஹரனை, அது அவ்வரன் அவ்வண்ணம் செய்திருத்தலால்.

கைலாயபதியான ஹர னொருதினம் ஹரியைப்பார்த்து, மாலே! நீ முன்ன மசுரரை மயக்கக்கொண்ட பெண்ணுருவத்தைக் காட்டுதி என்றனன். மாலும் அவ்வ ண்ணமே நல்லழகுடையதாயுள்ள ஆடை நெகிழ இருதனந்தோன்றப் பெண்ணுருவா ய்ப் பாடியுயாடியு முலாவிநின்றனன். உடனே அவ்வுருவினைக்கண்ட வரன் பின்றொ டர்ந்து பிடிப்பான் றுணிந்தனன், துணிந்ததை யுணர்ந்த மால் இனி இங்கு நிற்பது உசிதமன்றென் றோடினன், ஓடினவனை இவன் பின்றொடர்ந்து நாவலந்தீவிலுள்ள ஒரு மாதவிச்சோலையிற் கூடினன். ஹரன் செய்த கலவிக்காற்றுத ஹரியான மோகினி வாந்தியுற்றனள், பின்னர் இருவரும் கலவியை நிறைவேற்றினர்கள், உடனே மோகினி யொரு பிள்ளையைப் பெற்றாள், அந்த மகனுக் கரிகரபுத்திரனென்று பெயர். இதனை -

"*மையல்செய்மோகினிவடிவுகாட்டுபு*
*வெய்தெனநடந்தனன்வேளைவென்றகோ*
*னெய்யெனவெழுந்துசென்றுற்றுப்புல்லவுங்*
*கையகன்றோடினன்கரியமேனியான்*" எனறு காஞ்சிப்புராணத்திலும்,

"*அத்தகுந்திருமைந்தற்கரிகர - புத்திரனெனுநாமம்புனைந்துபின்*
*னெத்தபான்மையுருத்திராதம்மொடும - வைத்துமிக்கவரம்பலநல்கியே*"
என்று கந்தபுராணத்தும் வருதலைக்கொண்டுணர்க.

## தாத்பரியம்.

ஹரி மனைவி, ஹரன் புருடன். இவரிருவர் கூட்டுறவிற் றோன்றின மகன் ஹரிஹரபுத்திரன் என்பதாம்.

## தாரதம்மியம்.

மனைவியினும் புருடன் சிறந்தவனாகவிருத்தலும், பெண்ணினும் ஆண் சிறந்ததாகவிருத்தலும் உலகிலநுபவம். இதனாற் பெண்ணுருவடைந்த ஹரி தாழந்த வனும், பெண்ணுருவமான ஹரியைப் புணர்ந்த ஹரன் சிறந்தவனு மாகின்றார்கள், ஆதலால் நாங்களிந்த விஷயத்திற்றாழ்வடைந்த ஹரியை அப்பிரதானமாகவகற்றி, சிறந்த ஹரனைப் பிரதானமாகக் கொண்டு அவன் சரணங்களை ஆஶ்ரயிக்கின்றோம். - என்றவாறு. **(73)**

**एकश्चकार चरणाब्जनखांचलेन**
**पौलस्त्यभङ्गमितरस्तु रणेऽतिकृच्छात् ।**
**कोवानयोरधिकः इत्यनुचिन्त्य वृद्धाः**
**सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥ ७४ ॥**

ஊகஃஶசகார ஊரணாஜவநவாஂவஞெந
வளஸ்த்யஹஜஜிதாரஹ்ஸ ரணெ஁திக்ருச்சாத் ।
கொவாநயொரயிகஃ ஐதாநுவிஞ்ய வருஜாஃ
ஸதாம் ஶ்ருவஞு தஜிஜம் வயஜாஶ்ரயாஜஃ ॥ எச ॥

**ஏகஶ்சகார சரணுப்[3]ஜநகா[2]ஞ்சலேன**
**பௌலஸ்த்யப[4]ங்க[3]மிதரஸ்து ரணே(அ)திக்ருச்சா[2]த் ।**
**கோவானயோரதி[4]கஃ இத்யனுசிந்த்ய வ்ருத்[3]தா[4]ஃ**
**ஸத்யம் ப்[3]ருவந்து தமிமம் வயமாஶ்ரயாமஃ ॥ 74 ॥**

## மொழிபெயர்ப்பு.

**அன்பற் றகந்தை கொளுங் கொடிய வரக்கனுன விராவணனைத்**
**துன்புற் றலசக் கானுதியாற் றெலைத்தா னெவன் ரேள்வலியால்**
**வன்புற் றமரி லிராவணனை வாட்டி யொருவன் வாழ்வுற்றுன்**
**இன்புற் றிவருட் சிறந்தவன்யா ரிசைத்தாற் பெரியீரிறைஞ்சுதுமே.**

## பதப்பொருள்.

| | | |
|---|---|---|
| **ஏக:** | = | ஒருவன், |
| **சரணுப்[3]ஜநகா[2]ஞ்சலேன** | = | காற்கமலச் சிறுவிரனுனியினுலே, |
| **பௌலஸ்த்யப[4]ங்க[3]ம்** | = | இராவணுவமானத்தை, |
| **ஶசகார** | = | செய்தான், |
| **இதரஸ்து** | = | இன்னெருவனுனல் |
| **ரணே** | = | யுத்தத்தில், |
| **அதிக்ருச்சா[2]த்** | = | வெகு கஷ்டத்தில், |
| **பௌலஸ்த்யப[4]ங்க[3]ம்** | = | இராவணபங்கத்தை, |
| **ஶசகார** | = | செய்தான், |
| **அநயோ:** | = | இவ்விருவருக்குள், |
| **அதிக:** | = | சிறந்தவன், |
| **கோவா** | = | யாவன்? |
| **இதி** | = | இதனை, |
| **அநுசிந்தியா** | = | ஆலோசித்து, |
| **வ்ருத்[3]தா[4]ஃ** | = | பெரியவர்கள், |
| **ஸத்யம்** | = | உண்மையை, |
| **ப்[3]ருவந்து** | = | சொல்லலாம் சொன்னல், |
| **தமிமம்** | = | அந்த விவனை, |
| **வயம்** | = | நாங்கள், |
| **ஆஶ்ரயாமஃ** | = | ஆஶ்ரயிக்கின்றேம். |

## பொழிப்பு.

ஒருவன் பதகமல நகத்தினுல் இராவணனுக்கு அவமானத்தை யுண்டாக்கினுன், இன்னெருவன் யுத்தத்தில் வெகு கஷ்டப்பட்டு இராவணபங்கத்தைச் செய்தான், பெரியோர்களே இவ்விருவரி லெவன் சிறந்தவன்? நீங்களுரைத்தீராயின், நாங்கள் அந்த மஹாபுருஷனைச் சரணமாக வடைகின்ருேம்.

## விதப்பு.

ஒருவன் பதகமல நகநுனியினுல் இராவணபங்கஞ் செய்தானென்றது - ஹரனை, அது அவ்வர னவ்வணண மியற்றலால். இதனை -

"*அரக்கனைவிரலாலடர்த்திட்டனீர்*
*இரக்கமொனறிலீரெம்பெருமானீரே*" என்னுந் தமிழ்வேதத்தாலுணர்க.

ஒருவன் போரிற் கஷ்டத்துட னிராவணபங்கஞ் செய்தானென்றது - ஹரியை, அது அவ்வரி அவ்வண்ணஞ்செய்திருத்தலால். இதனை,

"*கோடிவான்கணைகொண்டுமாற்றியகொடியவன்றனையக்கணை*
*யோடிமார்புருவிப்புறந்தனிலுயிரையுங்கொடுபோயதால்*
*வீடினனுயர்தேரினின்றுவிழுந்துளான்புவிமீதிலே*
*நாடிவானவராடியாசிநவின்றுசிந்தைகளித்தனர்*" என்னும் பாரதத்தாலுணர்க.

## தாத்பரியம்.

ஹர னிராவணனைக் கால்விரனுதியாற் பங்கப்படுத்தினுன், ஹரி போர்புரிந்து பங்கப்படுத்தினுன் என்பதாம்.

## தாரதம்மியம்.

கானகத்தா லொருவனைப் பங்கஞ்செய்தவ னெதிரில் போரில் முன்பங்க மடைந்தவனைப் பிரயாசையினுற் பங்கஞ்செய்தவன் சிறந்தவனுகான். இந்த முறையினுற் ருழ்வடைந்த ஹரியை அப்பிரதானமாகவகற்றிச் சிறந்த ஹரனை நாங்கள் ஆஶ்ரயிக்கின்ருேம். - என்றவாறு. **(74)**

**एको द्विजातिमखिलेषु सुरेषु मध्ये**
**क्षात्रं परन्तु परमार्थगिरो गृणन्ति ।**
**कोवानयोरधिकः इत्यनुचिन्त्य वृद्धाः**
**सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥ ७५ ॥**

ஏகொ ஆிஜாதிஜவிலெ்ஷு ஸுரெஷு ஜயெ்ா
க்ஷாகும் வாஜு வாஜாய்ஆிரொ ஶூணதி ।
கொவாநயொாயிகஃ ஐதுநுஆிது வூஊாஃ
ஸதும் ஶுவது தஜிஜம் வயஜாஶுயாஜஃ ॥ எரு ॥

**ஏகோ த்3விஜாதிமகி2லேஷு ஸுரேஷு மத்4யே**
**க்ஷாத்ரம் பரந்து பரமார்த2கி3ரோ க்3ருணந்தி ।**
**கோவானயோரதி4கः இத்யனுசிந்த்ய வ்ருத்3தா4ः**
**ஸத்யம் ப்3ருவந்து தமிமம் வயமாஶ்ரயாமः ॥ 75 ॥**

## மொழிபெயர்ப்பு.

**சிந்தை கபட மில்லாத திருமா மறையோர் தேவரிடை**
**முந்த மறையோ ஞெவொருவன் முன்ன நின்றுன் மூதறிஞர்**
**விந்தை யரச ஞெவொருவன் விளங்கு மென்பர் வியனுலகில்**
**இந்த வியல்பிற் சிறந்தவன்யா ரீசைத்தாற் பெரியீரிறைஞ்சுதுமே.**

## பதப்பொருள்.

| | | |
|---|---|---|
| **பரமார்த2கி3ர:** | = | யதார்த்தபண்டிதர்கள், |
| **ஏகம்** | = | ஒருவனை, |
| **அகி2லேஷு** | = | எல்லாருமான, |
| **ஸுரேஷு மத்4யே** | = | தேவதைகளின் நடுவில், |
| **த்3விஜாதிம்** | = | அந்தணனுக, |
| **க்3ருணந்தி** | = | எண்ணுகிறுர்கள், |
| **பரந்து** | = | மற்றெருவனை, |
| **க்ஷாத்ரம்** | = | க்ஷத்திரியனுக, |
| **க்3ருணந்தி** | = | நினைக்கின்றுர்கள் (கிரகிக்கின்றுர்கள்) |
| **அநயோ:** | = | இவ்விருவருக்குள், |
| **அதிக:** | = | சிறந்தவன், |
| **கோவா** | = | யாவன்? |
| **இதி** | = | இதனை, |
| **அநுசிந்தியா** | = | ஆலோசித்து, |
| **வ்ருத்3தா4ः** | = | பெரியவர்கள், |
| **ஸத்யம்** | = | உண்மையை, |
| **ப்3ருவந்து** | = | சொல்லலாம் சொன்னுல், |
| **தமிமம்** | = | அந்த விவனை, |
| **வயம்** | = | நாங்கள், |
| **ஆஶ்ரயாமः** | = | ஆஶ்ரயிக்கின்றேம். |

## பொழிப்பு.

மனதிற் கபடமென்பதில்லாத பண்டிதர்கள் தேவர் நடுவில் ஒருவஜனப் பிராமணனென்பார்கள், மற்றெருவஜன க்ஷத்திரியனென்பார்கள், இவ்விருவருள் சிறந்தவன் யாவன்? அவஜனப் பெரியவர்களே! நீங்களுண்மையாக வுரைத்தால், நாங்களந்த மஹாபுருஷஜனச் சரணமாக அடைகின்றேம்.

## விதப்பு.

பண்டிதர்களொருவஜன பிராமணனென்பார்களென்றது - ஹரஜன, அவ்வரன் அவ்வண்ண மிருத்தலால். வேதியர்க்குள்ள சடையுந் தோலுடையு முப்புரி நூலுமே ஹரஜன மறையவனென்று விளக்கும். அனறியும், இதஜன -

"*வேதியாவேதகீதாவிண்ணவரண்ணுவென்றன்*
*றேதியேமலர்கடூவியொருங்கிநின்கழல்கள்காணப்*
*பாதியோர்பெண்ணணவைத்தாய்ப்படர்சடைமதியஞ்சூடும்*
*ஆதியேயாலவாயிலப்பனேயருள்செய்யாயே*"
என்னுந் திராவிடவேதத்தாலும் உணர்க.

மற்றெருவஜன கூத்திரியனுக எண்ணுகின்றுர்கள் என்றது - ஹரியை, அது அவ்வரி அவ்வண்ணமிருத்தலால். இது ஹரியின் பீதாம்பரம் பஞ்சாயுதம், மகுடமாதி களுமே க்ஷத்திரியனுக விளக்கும். அன்றியும் இதஜன -

"*முன்னெருநாள்மழுவாளிசிஜலவாங்கியவன்தவத்தைமுற்றுஞ்செற்றுய்,*
*உன்ஜனயுமுன்னருமையையுமுன்போயின்வருத்தமுமொன்றுகக்கொள்ளாது,*
*என்ஜனயுமென்மெய்யுரையும்மெய்யாகக்கொண்டுவனம்புக்கவெந்தாய்,*
*நின்ஜனயேமகனுகப்பெறப்பெறுவேனேழ்பிறப்புநெடுந்தோள்வேந்தே*"
எனக் குலசேகரநிருபன் கூறியதனுலுமுணர்க.

## தாத்பரியம்.

பண்டிதர்கள் ஹரஜனப் பிராமணனுகவும், ஹரியை க்ஷத்திரியனுகவும் நிஜனக்கின்றுர்களென்பதாம்.

## தாரதம்மியம்.

அரசனிலும் அந்தணன் சிறந்தவன். ஆதலால் அரசனுன திருமாஜல நாங்களப் பிரதானமாக வகற்றி, அந்தணனுன ஹரஜன ஆஶ்ரயிக்கின்றேம். - என்றவாறு. **(75)**

एको जघान रिपुमीक्षणतः क्षणेन
यत्नाद्रिपुं च निजघान नखेन चान्यः ।
कोवानयोरधिकः इत्यनुचिन्त्य वृद्धाः
सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥ ७६ ॥

ஏகொ ஜவாந ரிவுமீக்ஷணதஃ க்ஷணெந
யத்நாத்ரிவும் வ நிஜவாந நவெந வாந்யஃ ।
கொவாநயொரயிகஃ ஜத்யநுவிந்த்ய வ்ருத்தாஃ
ஸத்யம் ஸுவந்து தமிமம் வயமாஶ்ரயாமஃ ॥ எசு ॥

ஏகோ ஜகா⁴ன ரிபுமீக்ஷணத꞉ க்ஷணேன
யத்நாத்³ரிபும் ச நிஜகா⁴ன நகே²ன சான்ய꞉ ।
கோவானயோரதி⁴க꞉ இத்யனுசிந்த்ய வ்ருத்³தா⁴꞉
ஸத்யம் ப்³ருவந்து தமிமம் வயமாஶ்ரயாம꞉ ॥ 76 ॥

## மொழிபெயர்ப்பு.

மன்னுங் கொடிய வம்பலஊ மருவும் விழியான் மாநிலத்திற்
றுன்னுஞ் சாம்ப ராவொருவன் றெஊலத்தா ஞெருவன் றுகடுற்ற
தன்ஞெண் பகையைப் போர்முஊயிற் றனதுநகத்தாற் றஊயழித்தா
னென்னுமிவருட் சிறந்தவன்யா ரிசைத்தாற்பெரியீ ரிறைஞ்சுதுமே.

## பதப்பொருள்.

| | | |
|---|---|---|
| **ஏக꞉** | = | ஒருவன், |
| **ரிபும்** | = | பகைவஊ, |
| **ஈக்ஷணத꞉** | = | பார்வையிஞலே, |
| **க்ஷணேன** | = | கணப்பொழுதில், |
| **ஜகா⁴ன** | = | கொன்றன், |
| **அந்யச** | = | இன்ஞெருவஞஞல், |
| **ரிபும் ச** | = | பகைவஊயாஞல், |
| **நகே²ன** | = | நகத்திஞலே, |
| **நிஜகா⁴ன** | = | கொன்றன், |
| **அநயோ꞉** | = | இவ்விருவருக்குள், |
| **அதிக꞉** | = | சிறந்தவன், |
| **கோவா** | = | யாவன்? |
| **இதி** | = | இதஊ, |
| **அநுசிந்தியா** | = | ஆலோசித்து, |
| **வ்ருத்³தா⁴꞉** | = | பெரியவர்கள், |
| **ஸத்யம்** | = | உண்மையை, |

**ப்³ருவந்து** = சொல்லலாம் சொன்னல்,
**தமிமம்** = அந்த விவஊன,
**வயம்** = நாங்கள்,
**ஆஶ்ரயாமஃ** = ஆஶ்ரயிக்கின்றோம்.

## பொழிப்பு.

பெரியவர்களே! ஒருவன் றனது பகைவஊனக் கண்பார்வையினுற் சாம்பராகச் செய்தான், மற்றொருவன் றனது பகையை வெகு கஷ்டத்துடன் நகத்தா லழித்தான், இவ்விருவரி லெவன் சிறந்தவன்? அவஊன நீங்களுரைந்தால், நாங்கள் அந்த மஹா புருஷஊனச் சரணமாக அடைகின்றோம்.

## விதப்பு.

ஒருவன் றன் பகைவஊனக் கண்பார்வையினுற் சாம்பராக்கினுனென்றது - மன்மதஊன எரித்த ஹரஊன, அது அவ்வரன் அவ்வண்ணமெரித்தமையால். இதஊன —

"*நறைசேர்மலரைங்கஊணயாஊனநயனத்தீயாற்பொடிசெய்த*
*விறையாராவாரெல்லார்க்குமில்ஊலயென்னுதருள்செய்வார்*"
என்னுந் தமிழ்வேதத்ததாலுணர்க.

ஒருவன் தன் பகைவஊனப் பிரயாசத்துடன் நகத்தால் வதைத்தான் என்றுரைத்தது - இரணியஊனக் கொன்ற ஹரியை, அது அவ்வரி அவ்வண்ணம் கொன்றிருத்தலால். இதஊன -

"*தஊளயவிழ்கோதைமாஊலயிருபால்தயங்கவெரிகான்றிரண்டுதறுகண்*
*அளவெழவெம்மைமிக்கவரியாகியன்றுபரியோன்சினங்களவிழ*
*வஊளயுகிராளிமொய்ம்பில்மறவோனதாகம்மதியாதுசென்றொருகிராற்*
*பிளவெழவிட்டகுட்டமதுவையமூபெருநீரில்மும்மைபெரிதே*"
என்னு நாலாயிரப்பிரபந்தத்தாலுணர்க.

## தாத்பரியம்.

ஹரன் றன் பகைவஊன கண்பார்வையினு லழித்தான்; ஹரி தன் பகைவஊன நகத்தா லழித்தானென்பதாம்.

## தாரதம்மியம்.

பகைவஊனக் கண்பார்வையினுற் கொன்ற ஹரனிலும் பகைவஊன வெகு கட்டத்துடன் நகத்தாற் கொன்றவன் தாழ்ந்தவனுதலால், நாங்கள் இவ்விஷயத்திற்

முழ்வடைந்த ஹரியை அப்பிரதானமாக வகற்றி, இவ்விஷயத்தி லுயர்வடைந்த ஹரஜனச் சரணமாக வடைகின்றேம். - என்றவாறு. **(76)**

**ब्रुन्दावने चरति गोभिरुपेत्य चैक**
**स्त्वन्यो भृशं पितृवने चरतीह भूतैः ।**
**कोवानयो रधिकः इत्यनुचिन्त्य वृद्धाः**
**सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥ ७७ ॥**

ബൃ൩ാവനെ ചരതി ഗൊഭിരുപെത്യ ചൈക
സ്ത്വന്യൊ ഭൃശം പിതൃവനെ ചരതീഹ ഭൂതൈഃ ।
കൊവാനയൊ രധികഃ ഇത്യനുചിന്ത്യ വൃദ്ധാഃ
സത്യം ബ്രുവന്തു തമിമം വയമാശ്രയാമഃ ॥ ௭௭ ॥

**ப்3ருந்தா3வனே சரதி கோ3பி4ருபேத்ய சைக**
**ஸ்த்வன்யோ ப்4ருஶம் பித்ருவனே சரதீஹ பூ4தை: ।**
**கோவானயோ ரதி4க: இத்யனுசிந்த்ய வ்ருத்3தா4:**
**ஸத்யம் ப்3ருவந்து தமிமம் வயமாஶ்ரயாம: ॥ 77 ॥**

## மொழிபெயர்ப்பு.

**நறுவீ முல்ஜல நிலமதனி னண்ணுங் குல்ஜல நறுங்காட்டி**
**லுறுமா கோபி மாருடனே யுற்று ஞெருவ னுரையொருவன்**
**குறுமா பூதம் பலகோடி குழும விடுகாட்டிடைக்குனித்தான்**
**இறுமா லிவருட் சிறந்தவன்யா ரிசைத்தாற் பெரியீ ரிறைஞ்சுதுமே.**

## பதப்பொருள்.

| | | |
|---|---|---|
| **ஏக:** | = | ஒருவன், |
| **கோ3பி4:** | = | கோபிகளோடே, |
| **உபேத்ய** | = | கூடிக்கொண்டு, |
| **ப்3ருந்தா3வனே** | = | விருந்தாவனத்தில், |
| **சரதி** | = | சஞ்சரிக்கின்றான்; |
| **அந்ய:** | = | இன்ஞெருவன், |
| **ப்4ருஶம்பூ4தை:** | = | மிகவும் பூதங்களாற் சூழப்பெற்றவனுய், |
| **இஹ** | = | இப்பொழுதும், |
| **பிதிர்வநே** | = | சுடுகாட்டில், |
| **சரதி** | = | சஞ்சரிக்கிறுன்; |
| **அநயோ:** | = | இவ்விருவருக்குள், |
| **அதிக:** | = | சிறந்தவன், |
| **கோவா** | = | யாவன்? |

| | | |
|---|---|---|
| **இதி** | = | இதனை, |
| **அநுசிந்தியா** | = | ஆலோசித்து, |
| **வ்ருத்³தா⁴:** | = | பெரியவர்கள், |
| **ஸத்யம்** | = | உண்மையை, |
| **ப்³ருவந்து** | = | சொல்லலாம் சொன்னால், |
| **தமிமம்** | = | அந்த விவனை, |
| **வயம்** | = | நாங்கள், |
| **ஆஶ்ரயாம:** | = | ஆஶ்ரயிக்கின்றோம். |

## பொழிப்பு.

ஒருவன் நறுமணங்கமழும் பலமலர் துன்றிய முல்லைநிலத்திலுள்ள துளவக்காட்டில (பிருந்தாவனத்தில்) கோபிகளோடே உலாவினான், இன்னொருவன் பூதகூட்டங்களுடனே அநவரதம் சுடுகாட்டினிற் சஞ்சரிக்கின்றான்; இவ்விருவரி லுயர்ந்தவன் யாவன்? அவனைப் பெரியவர்களான நீங்களுரைத்தால், நாங்களந்த மஹாபுருஷனைச் சரணமாக அடைகின்றோம்.

## விதப்பு.

ஒருவன் கோபிகளுடன் விருந்தாவனத்தி லுலாவுகின்றான் என்றது - ஹரியை, அது அவ்வரி அவ்வண்ணம் உலாவுதலால். இதனை -

"*பட்டிமேய்ந்தோர்காரேறுபலதேவர்க்கோர்கீழ்க்கன்றாய்*
*இட்டீறிட்டுவிளையாடியிங்கேபோதக்கண்டீரே*
*இட்டமானபசுக்களையினிதுமறித்துநீரூட்டி*
*விட்டுக்கொண்டுவிளையாடவிருந்தாவனத்தேகண்டோமே*"
என்னு நாலாயிரப்பிரபந்தத்தாலுணர்க.

ஒருவன் பூதங்களுடனே பிதிர்வனத்தில் வசிக்கின்றானென்றது - ஹரனை, அது அவ்வரன் அவ்வண்ண மிருத்தலால். ஹரன் பூதங்களுடனே உலாவுவதைப் பாரதநூ லிவ்வண்ண முரைக்கின்றது.

அதிபயங்கரமான பூதங்களுடனே ஹரன் எவ்விடத்திலுஞ் சஞ்சரிப்பதைப் பார்த்து அயன்வணங்கி, சுவாமி! தங்களுருவத்தைப்பார்க்க அஞ்சுகின்றேன் என்பொருட்டு பிதிர்வாசஞ் செய்யவேண்டுமென அடிபணிந்து வேண்டிக்கொண்டனன், அவன் வேண்டுகோளுக்கிரங்கிய ஹரன் அவ்வண்ணமே செய்தானென்பதாம். காந்தமும் ஹரி பிரமேந்திராதிகளின் மரணநாளிலுண்டாகிற மசானத்தில் தானொருவனே மிகுந்தவனாக நிற்றலால் பிதிர்வனவாசியாவன், அப்பொழுது பாவகர்மயுக்தர்களும் சிவத்துரோகிகளும் பிசாசுகளாக வவர்களுடனிருப்பானென்றும் உரைக்கின்றது இதனை -



என்று ஸகாந்தமஹாபுராணத்தும்,

"*விரைசரோருகத்தனேர்நாள்விரிந்தபல்லுயிர்களெல்லாம்*
*கரையறமுடிக்குப்பூதகணங்களைக்கண்டேயஞ்சி*
*நிரைபடுகருணைமேனிநிமலனேபுறத்தினூடுந்*
*தரைபடுமயானத்தூடுஞ்சரித்தெமையளிப்பாயென்றான்.*

*அவ்வரமவனுக்கீந்தேயகிலத்துமயானத்தூடுஞ்*
*செவ்வியினிருப்பனென்னைத்தெளிந்தவர்புனிதமாவ*
*தவ்விடமென்பர்தேறாரசுசியென்றகல்வாரென்றான்*
*கொவ்வைவாயணங்குமீளக்குறித்தொன்றுபுகலலுற்றாள்"*

என்று பாரதத்தும் வருதலைக்கொண்டுணர்க.

## தாத்பரியம்.

ஹரி விருந்தாவனத்திற் கோபிகளோடுலாவினான்; ஹரன் பிதிர்வனத்திற் பூதங்களோடுலாவினனென்பதாம்.

## தாரதம்மியம்.

கோபிகளுட னுலாவுவதனிலும் பூதங்களுடனுலாவுத லரிய காரியமாதலாலும், அனைவரு மிறந்தவிடமே சுடுகடாக ஹரன் அவ்விடத்திலிருக்கின்றானென்று சாத்திரங்கள் கூறலால், ஹரனிருப்புச் சிறந்ததும், ஹரியிருப்புத தாழ்ந்ததுமாயிற்று. இதனால் நாம் இந்தவிஷயத்திற் றாழ்வடைந்த ஹரியை அப்பிரதானமாக அகற்றிச் சிறந்த ஹரனைச் சரணமாக அடைகின்றோம். **(77)**

**एको भुजङ्गशयने सुप्तीहनित्य मन्यो**
**भुजङ्गकटको नटतीह नित्यम् ।**
**कोवानयोरधिकः इत्यनुचिन्त्य वृद्धाः**
**सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥ ७८ ॥**

ஷகொ ஹுஜஜுஶயநெ ஸுஹ்தீஹநித்ய ஜநெ்யா
ஹுஜஜுகடகொ நடதீஹ நித்யீ ।
கொவாநயொாரயிகஃ ஐத்யநுஷிந்த்ய வ்ருஷாஃ
ஸத்யஂ ஞ்ருவநு தஜிஜஂ வயஜாஶ்ரயாஜஃ ॥ எஅ ॥

**ஏகோ பு⁴ஜங்க³ஶயனே ஸுப்தீஹநித்ய மன்யோ**
**பு⁴ஜங்க³கடகோ நடதீஹ நித்யம் ।**
**கோவானயோரதி⁴கஃ இத்யனுசிந்த்ய வ்ருத்³தா⁴ஃ**
**ஸத்யம் ப்³ருவந்து தமிமம் வயமாஶ்ரயாமஃ ॥ 78 ॥**

## மொழிபெயர்ப்பு.

**தூங்கு மரவ சயனத்திற் றெடர்ந்தே யொருவன் தூவரவந்**
**தாங்கு கடக மாக்கொண்டு தகுதி குறையாத் தண்ணுமைகள்**
**ஏங்க வொருவன் னடனமதை யென்று மியற்றி யிலங்கிடுவான்**
**ஈங்கின் னவருட் சிறந்தவன்யா ரிசைத்தாற் பெரியீ ரிறைஞ்சுதுமே.**

## பதப்பொருள்.

| | | |
|---|---|---|
| **ஏக:** | = | ஒருவன், |
| **பு⁴ஜங்க³ஶயனே** | = | சர்ப்பசயனத்தில், |
| **இஹ** | = | இவ்விடத்தில், |
| **நித்யம்** | = | எப்பொழுதும், |
| **ஸுப்தீ** | = | தூங்குகின்றன், |
| **அந்ய:** | = | இன்னொருவன், |
| **பு⁴ஜங்க³கடக:** | = | புஜங்ககடகத்தையுடையவனுகி, |
| **இஹ** | = | இவ்விடத்தில், |
| **நித்யம்** | = | எப்பொழுதும், |
| **நடதீ** | = | நடிக்கிறன்; |
| **அநயோ:** | = | இவ்விருவருக்குள், |
| **அதிக:** | = | சிறந்தவன், |
| **கோவா** | = | யாவன்? |
| **இதி** | = | இதஊன, |
| **அநுசிந்தியா** | = | ஆலோசித்து, |
| **வ்ருத்³தா⁴ஃ** | = | பெரியவர்கள், |
| **ஸத்யம்** | = | உண்மையை, |
| **ப்³ருவந்து** | = | சொல்லலாம் சொன்னுல், |
| **தமிமம்** | = | அந்த விவஊன, |
| **வயம்** | = | நாங்கள், |
| **ஆஶ்ரயாமஃ** | = | ஆஶ்ரயிக்கின்றேம். |

## பொழிப்பு.

ஒருவன் அரவசயனத்திற் கிடக்கினறுன், மற்றெருவன் அரவாபரணத்தை யுடையவனுக நடனஞ்செயகின்றுன், இவர்களிற் சிறந்தவன் யாவன்? அவனே நீங்க ளுரைத்தால், நாங்கள் அந்த மஹாபுருஷனேச் சரணமாக வடைகின்றேம்.

## விதப்பு.

ஒருவன் அரவசயனத்திற் றூங்குவோனென்றது - ஹரியை, இது அவ்வரி அவ்வண்ண மனந்தசயனனுக விருத்தலால். இதனே -

"சலசலோசனனனந்தசயனன்" என்னும் நிகண்டாலுணர்க.

ஒருவனரவாபரணனுக நடிக்கின்றுனென்றது - ஹரனே, அது அவ்வரன் அவ்வண்ணந் தரித்து நடித்தலால். இதனே -

"பொங்கரவணிந்தமூர்த்தி" என்றும்,

“அந்திவண்ணன்முக்கண்ணனழலாடிபாண்டரங்கன்” என்றும் வரும் நிகண்டா லுணர்க.

## தாத்பரியம்.

ஹரி அரவிற்றூங்குவோன்; ஹரன் அரவகடகமணிந்து நடிப்போனென்பதாம்.

## தாரதம்மியம்.

பாம்பிற் கிடப்பவனிலும் அப்பாம்பை யாபரணமாகக்கொண்டு நடிப்பவன் சிறந்தவனுதலால், நாங்கள் இந்தவிஷயத்திற் ருழ்வடைந்த ஹரியை அப்பிரதான மாக அகற்றி, இது விஷயத்திற் சிறந்த ஹரனேச் சரணமாக அடைகின்றேம் - என்றவாறு. **(78)**

**एकस्य जात इति सन्ततलोकवार्त्ता**
**नान्यस्य तादृशविदूषितलोकवार्त्ता ।**
**कोवानयोरधिकः इत्यनुचिन्त्य वृद्धाः**
**सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥ ७९ ॥**

ஶகஸ்ய ஜாத ஐதி ஸஞதமொகவாதூா
நாநஸ்ய தாஜ்ஶவிஜுஷிதமொகவாதூா ।
கொவாநயொரயிகஃ ஐதநுவிஜ வ்ருஜாஃ
ஸதம் ஸுவஞு தஶிஜம் வயஶாஶ்ரயாஜஃ ॥ எகூ ॥

**ஏகஸ்ய ஜாத இதி ஸந்ததலோகவார்த்தா**
**நான்யஸ்ய தாத்³ருஶவிதூ³ஷிதலோகவார்த்தா ।**
**கோவானயோரதி⁴க: இத்யனுசிந்த்ய வ்ருத்³தா⁴:**
**ஸத்யம் ப்³ருவந்து தமிமம் வயமாஶ்ரயாம: ॥ 79 ॥**

## மொழிபெயர்ப்பு.

**துன்னும் பிறவி யநேகமதைத் தொக்கோ னென்னச் சொலுநிந்தை**
**தன்ஐன யொருவ னிவ்வுலகிற் சார்ந்தா ஞெருவன் தனிப்பிறவி**
**யென்னு மதஐன யாராதா னென்ன வுரைக்கு மிசையுற்றுன்**
**இன்னர் தம்மிற் சிறந்தவன்யா ரிசைத்தாற் பெரியீ ரிறைஞ்சுதுமே.**

## பதப்பொருள்.

| | | |
|---|---|---|
| **அயம்** | = | ஒருவனுக்கு இவன், |
| **ஜாத:** | = | பிறந்தவன், |
| **இதி** | = | என்று, |
| **ஸந்ததலோகவார்த்தா** | = | எப்பொழுது முண்டான லோகநிந்தை (இருக்கின்றது.) |
| **அன்யஸ்ய** | = | இன்ஞெருவனுக்கு, |
| **தாத்³ருஶவிதூ³ஷிதலோக** | = | அப்படிப்பட்ட தூஷிக்கப்பட்ட, |
| **வார்த்தானஅஸ்தி** | = | லோகநிந்தையானது இல்ஐலயே; |
| **அநயோ:** | = | இவ்விருவருக்குள், |
| **அதிக:** | = | சிறந்தவன், |
| **கோவா** | = | யாவன்? |
| **இதி** | = | இதஐன, |
| **அநுசிந்தியா** | = | ஆலோசித்து, |
| **வ்ருத்³தா⁴:** | = | பெரியவர்கள், |
| **ஸத்யம்** | = | உண்மையை, |
| **ப்³ருவந்து** | = | சொல்லலாம் சொன்ஞல், |
| **தமிமம்** | = | அந்த விவஐன, |
| **வயம்** | = | நாங்கள், |
| **ஆஶ்ரயாம:** | = | ஆஶ்ரயிக்கின்ரேும். |

## பொழிப்பு.

ஒருவன் பிறந்தவனெனனும உலோகநிந்தையை உடையவன், இன்னொரு வன் அப்படிப்பட்ட அபக்யாதி இல்லாதவன், பெரியவர்களே! இவ்விருவரி லெவன் சிறந்தவன்? நீஙகளுண்மையாக வுரைத்தால, நாங்களவனையே அடைக்கலமாக வடைகின்ரேம்.

## விதப்பு.

ஒருவன் பிறந்தவன் என்றுரைக்கும் நிந்தையையுடையவனென்றது - ஹரியை, இது அவ்வரி அவ்வண்ணம் பிறந்திருததலால். இதனை -

"*வண்ணமாடங்கள்சூழ்திருக்கோட்டியூர்*
*கண்ணன்கேசவன்நம்பிபிறந்தநாள்*" என்னு நாலாயிரப்பிரபந்ததாலுணர்க.

ஒருவன் அப்படிப்பட்ட அபக்கியாதியை அடையாதவனென்றது - ஹரனை, அது அவ்வரன் அவ்வாறு பிறவாமையால். இதனை -

"*பிச்சன்பிறப்பிலிபேர்நந்தியுந்தியின்மேலசைத்த*
*கச்சினழகுகண்டாற்பின்னைக்கண்கொண்டுகாண்பதென்னே*"
என்னுந் தமிழ்வேதத்தாலும்,

என்று சிவாரதன ஸமவாதத்திலும் வருதலைக் கொணடுணாக.

## தாத்பரியம்

ஹரி பிறந்தவன், ஹரன் பிறவாதவன் என்பதாம்.

.

## தாரதம்மியம்.

பிறந்தவனைவிடப் பிறவாதவன் சிறந்தவனாதலால், நாங்கள பிறநத ஹரியை அப்பிரதானமாக வகற்றி, பிறவாத ஹரனைச் சரணமாக வடைகின்ரேம் - என்றவாறு. **(79)**

**एकः सुरैरुपगिरिं हि तपश्चकार**
**तस्मै ददौ सुतमधिक्षिति साम्बमन्यः ।**
**कोवानयोरधिकः इत्यनुचिन्त्य वृद्धाः**
**सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥ ८० ॥**

ஏகஃ ஸுரைருபகிரிං ஹி தபஶ்சகார
தஸ்மை ததௌ ஸுதமதிக்ஷிதி ஸாம்பமந்யஃ ।
கோவாநயோரதிகஃ இத்யநுசிந்த்ய வ்ருத்தாஃ
ஸத்யං ப்ருவந்து தமிமං வயமாஶ்ரயாமஃ ॥ ௮௦ ॥

**ஏகः ஸுரைருபகி$^{3}$ரிம் ஹி தபஶ்சகார**
**தஸ்மை த$^{3}$தௌ$^{3}$ ஸுதமதி$^{4}$க்ஷிதி ஸாம்ப$^{3}$மன்யः ।**
**கோவானயோரதி$^{4}$கः இத்யனுசிந்த்ய வ்ருத்$^{3}$தா$^{4}$ः**
**ஸத்யம் ப்$^{3}$ருவந்து தமிமம் வயமாஶ்ரயாமः ॥ 80 ॥**

## மொழிபெயர்ப்பு.

**மாடம் பொலியுஞ் சுவணநகர் மருவும் விபுதர் குழுக்களுடன்**
**கூட வொருவ னருந்தவத்தைக் குயிற்றி யிருந்தான் குலவொருவன்**
**நீடன் னவற்குச் சாம்பனென நிலவு மகஜன நிஜனந்தளித்தான்**
**ஈடன் னவரிற் சிறந்தவன்யா ரிசைத்தாற் பெரியீ ரிறைஞ்சுதுமே.**

## பதப்பொருள்.

| | | |
|---|---|---|
| **ஏக:** | = | ஒருவன், |
| **ஸுரை:** | = | தேவர்களாலே சூழப்பெற்றவனுய், |
| **உபகி$^{3}$ரிம்** | = | மஜலச்சாரலில், |
| **தப:** | = | தபஸை, |
| **சகாரஹி** | = | செய்தானல்லவா, |
| **அந்ய:** | = | இன்னெருவன், |
| **அதி$^{4}$க்ஷிதி** | = | பூலோகத்தில், |
| **ஸாம்ப$^{3}$ம்** | = | ஸாம்பனென்கிற, |
| **ஸுத:** | = | பிள்ஜளயை, |
| **த$^{3}$தௌ$^{3}$ஹி** | = | கொடுத்தானல்லவா, |
| **அநயோ:** | = | இவ்விருவருக்குள், |
| **அதிக:** | = | சிறந்தவன், |
| **கோவா** | = | யாவன்? |
| **இதி** | = | இதஜன, |
| **அநுசிந்தியா** | = | ஆலோசித்து, |
| **வ்ருத்$^{3}$தா$^{4}$ः** | = | பெரியவர்கள், |

**ஸத்யம்** = உண்மையை,
**ப்³ருவந்து** = சொல்லலாம் சொன்னுல்,
**தமிமம்** = அந்த விவஉன,
**வயம்** = நாங்கள்,
**ஆஶ்ரயாமஃ** = ஆஶ்ரயிக்கின்றேம்.

## பொழிப்பு.

ஒருவன் தேவர்களுடன் மஉலச்சாரலில் தவஞ்செய்தான், அவ்வண்ணஞ் செய்தவனுக்கு இன்னெருவன் சாம்பனென்னும் மகஉனயளித்தான்; இவ்விருவரிற் பெரியவர்களே! எவன் சிறந்தவன்? நீங்களுரைத்தால், நாங்கள் அந்த மஹாபுருஷ உனச் சரணமாக அடைகின்றேம்.

## விதப்பு.

ஒருவன் விபுதர்களுவுடன் மஉலச்சாரலிற் றவஞ்செய்தானென்றது - ஹரியை, அது அவ்வரி அவ்வண்ணம் தவஞ் செய்திருத்தலால். இதஉன கீழ்வருஞ் சரிதத்தா லுணர்க.

ஒருவன் அவ்வண்ணந் தவஞ்செய்தவனுக்குச் சாம்பனென்னும் பிள்உளயை யளித்தானெனறது - ஹரஉன, அது அவ்வரன் அவ்வண்ணம் அளித்தமைமால்.

ஹரி கண்ணனுகவிருந்தநாளில் அவனுக்கு பதினுயிரத்தொரு நூற்றெட்டு மஉனவியர் இருந்தார்கள, அவர்களுக்குட் சாம்பவதி நீங்கலாகச் சத்தியபாமை யுருக்குமணி முதலிய அஉனவருக்கும் ஒவ்வொருத்தியும் பத்துப்பத்துப்பிள்உளகஉள யுடையவர்களாயினுர்கள். இதனுல் கண்ணன் நூற்றறுபத்தோராயிரத்தெண்ணூறு பிள்உளகஉளயுடையவனுகவிருந்தான். இவ்வண்ணம் லக்ஷக்கணக்கான பிள்உளகஉள யுடைய ஹரியின மஉனவியரி லொருத்தியான சாம்பவதி ஹரியை வணங்கி, நாதா! தங்கள் மஉனவியர்களான பதினுறுயிரத்தெழு நூற்றேழு பெண்கள் என்உன மலடி யென்றுரைக்குமாறு யான் உயிர்வாழத்துணியேன் என்று கூறினுள். உடனே ஹரி மானே! அஞ்சாதே நான உனக்குப் புத்திரர் பிறக்குமாறு செய்கின்றேனென்றுரைத்து மகரிஷியான உபமன்னியருடைய ஆசிரமத்திற்குச்சென் றவரை வணங்கி, என் மஉனவி சாம்பவதி பிள்உளப்பேறின்றி வருந்துகின்றுள். குருநாத! அவட்கும் புத்திர பாக்கிய முண்டாகுமாறு அருள் செய்யவேண்டுமென் றுரைத்தலும், அம்முனிவன் கண்ண! நீ சங்கரஉன நோக்கித் தவஞ்செய்வையாகில், நினக்கு மக்கட்பேறுண்டாகும். அருந்தவஞ் செய்யாதவர்கண்முன் அவ்விறைவன் வெளிப்படையாகத் தோன்று னென்றுரைத்து அவ்வரிக்குப் பாசுபத தீக்ஷை செய்து பஞ்சாக்ஷரோபதேசஞ் செய்தனன். உபதேசமபெற்ற ஹரியும விபூதி ருத்ராக்ஷாதிகளா லலங்கரிக்கப்பட்ட சரீரியாயக கைஉலமஉலச்சாரலி லருந்தவஞ்செய்தனன். இவன் தவத்துக்குகந்த ஹரன் பார்வதிதேவி ஸகந்தன் முதலானவர்களுடன் ப்ரத்தியக்ஷமாய் நின்று, ஹரியே! நின் தவத்தை மெச்சினேன், நீ தவத்தை நிறுத்து, நினக்கு வேண்டிய

வரத்தைக் கேள் என்றலும், ஹரி ஹரனது சரணகமலங்களில் சாஷ்டாங்கமாக வணங்கித் துதித்து எம் பெருமானே! அடியேற்கு நின்றிருவடியை மறவாத வன்பும ஒரு பிள்ளையும் வேண்டுமென்று வாய் புதைத்து நின்று கூறினன்; ஹரனும் அவ்வ ண்ணமே வரமளித்தனன். இதனை -

"*வார்சடை கட்டித்தூயமருங்கினிற்சீரைசுற்றிக்*
*கார்நிறத்தண்ணல்செய்யுந்தவத்தினைக்கருதிநோக்கி*
*யேர்குடியிருந்துவீங்குமிளமுலைக்கவுரியோடும்*
*போர்விடையிவர்ந்துமுக்கட்புனிதன்முன்றேன்றினனே.*

*அடுத்தடுத்தன்பினேடும்வணங்குமாய்துளவினேனை*
*யெடுத்திருகையானீவிவிழைந்ததென்னியம்புகென்னக்*
*கடுத்திகழ்மிடற்றென்கூறக்கண்ணன்வாய்புதைத்துநின்மேல்*
*விடற்கருமன்பும்மற்றேர்சிறுவனும்வேண்டுமென்றுன்.*

*மழகதிர்ப்பரிதியேயக்குங்கவுத்துவங்கிடந்தமார்ப*
*விழைவினீகேட்டவெல்லாம்விருப்பொடுமளித்தோமென்னக்*
*குழவிவெண்டிங்கட்கணணிமிலைச்சியகூத்தன்கூறக்*
*கழையிசைவடித்தகண்ணன்கவுரிதாண்மலரிற்றுழ்ந்தான்*"
என்றுவருங் கூர்மபுராணத்தாலுணர்க.

## தாத்பரியம்.

ஹரி ஹரனைக் குறித்துத் தவஞ்செய்தான், ஹரன் ஹரிக்கு வரமளந்த்தான் என்பதாம்.

## தாரதம்மியம்.

அருந்தவஞ் செய்பவனிலும் அருந்தவஞ் செய்பவனுக்கு வரங்கொடுத்த பெருந்தகை சிறந்தவனுதலால், நாங்கள் ஹரியை இது விஷயத்தி லப்பிரதானமாக வகற்றி, இதுவிஷயத்திற் சிறந்த ஹரனைச் சரணமாக அடைகின்றேம். - என்றவாறு. **(80)**

**एकस्तु बाणगतिमेत्य करं वृणोति**
**चान्योऽक्षिपत्पुरजयायतमेव बाणम् ।**
**कोवानयोरधिकः इत्यनुचिन्त्य वृद्धाः**
**सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥ ८१ ॥**

ஏகஸ்து பாணகதிமேத்ய கரம் வ்ருணோதி
சாந்யோऽக்ஷிபத்புரஜயாயதமேவ பாணம் ।
கோவாநயோரதிக: இத்யநுசிந்த்ய வ்ருத்தா:
ஸத்யம் ப்ருவந்து தமிமம் வயமாஶ்ரயாம: ॥ அக ॥

**ஏகஸ்து பா³ணக³திமேத்ய கரம் வ்ருஷ்ணேதி**
**சான்யோ(அ)க்ஷிபத்புரஜயாயதமேவ பா³ணம் ।**
**கோவானயோரதி⁴க: இத்யனுசிந்த்ய வ்ருத்³தா⁴:**
**ஸத்யம் ப்³ருவந்து தமிமம் வயமாஶ்ரயாம: ॥ 81 ॥**

## மொழிபெயர்ப்பு.

**சந்தக் கரஜனப் பாணகம னத்தா லொருவன் சாடினுன்**
**அந்தக் கரஜன யழித்தானை யரிய வேதி யாக்கொண்டு**
**சிந்திப் புரததை முன்னெருவன் செகுத்தா னென்னுந் திருமறைகள்**
**இந்தத் தொழிலிற் சிறந்தவன்யா ரிசைத்தாற்பெரியீ ரிறைஞ்சுதுமே.**

## பதப்பொருள்.

| | | |
|---|---|---|
| **ஏகஸ்து** | = | ஒருவனுனல், |
| **பா³ணக³திம்** | = | பாணகமனத்தை, |
| **ஏத்ய** | = | அடைந்து, |
| **கரம்** | = | கரஜன, |
| **வ்ருஷ்ணேதி** | = | சோதிக்கிறுன், |
| **அந்ய:** | = | இன்னெருவன், |
| **புரஜயாய** | = | புரஜயத்தின்பொருட்டு, |
| **தமேவ** | = | அவஜனயே, |
| **பா³ணம்** | = | அம்பாக, |
| **அக்ஷிவத்** | = | பிரயோகித்தான், |
| **அநயோ:** | = | இவ்விருவருக்குள், |
| **அதிக:** | = | சிறந்தவன், |
| **கோவா** | = | யாவன்? |
| **இதி** | = | இதஜன, |
| **அநுசிந்தியா** | = | ஆலோசித்து, |
| **வ்ருத்³தா⁴:** | = | பெரியவர்கள், |
| **ஸத்யம்** | = | உண்மையை, |
| **ப்³ருவந்து** | = | சொல்லலாம் சொன்னுல், |
| **தமிமம்** | = | அந்த விவஜன, |
| **வயம்** | = | நாங்கள், |
| **ஆஶ்ரயாம:** | = | ஆஶ்ரயிக்கின்ஞேம். |

## பொழிப்பு.

ஒருவன் பாணகமனத்தால் கரஜனக் கொன்றுன், மற்றெருவன் பாணகமனஞ் செய்தவஜனயே பாணமாகக்கொண்டு புரஜயமடைந்தான்; பெரியவர்களே! இவ்விருவ

ரிற் சிறந்தவன் யாவன்? நீவிருண்மையாகவுரைத்தால், நாங்களந்த மஹா புருஷ ஊனச் சரணமாக அடைகின்றேம்.

## விதப்பு.

ஒருவன் பாணகமனத்தையடைந்து கரஊன வதைத்தானென்றது - ஹரியை, அது அவ்வரி அவ்வண்ணம் செய்திருத்தலால். இது ஹரியின் இராமாவதாரத்தில் நிகழ்ந்தது. இதஊன -

"*ஆளவலியுங்கரிவலியுமயவலியுந்தேர்வலியுமமரரஞ்சுந்,*
*தோள்வலியுந்தவவலியுந்தோற்றமுறக்கருதரும்போர்தொடுத்தபோதில்,*
*வாள்வலிதோளிராகவனும்வாங்கியவிற்பகழிகளான்மாற்றிவிட்டா,*
*ஞள்வலியையுணராதாரொருகணத்தினுயிர்தொஊலந்தார்நவில்வதென்னே*"
என்னும் பாரதத்தாலுணர்க.

ஒருவன் அந்தக கரசங்காரஊனயே பாணமாகக்கொண்டு புரஜயமடைந்தானெ ன்றது - ஹரஊன, அது அவ்வரன் அவ்வண்ண மியற்றியிருததலால். இதஊன -

"*தன்மஊனயிரதமாகத்தன்மகன்வலவஞகத்*
*தன்மகன்பேரஞேடுதனக்குமைத்துனன்காலாகத்*
*தன்மலரஊணநாஞகத்தானெடும்பகழியாஞன்*
*றன்மனமிடங்கொண்டுற்றசங்கரன்றனக்குமாயன்*"
என்னுங் கூவத்துப்புராணத்தாலுணர்க.

## தாத்பரியம்.

ஹரி பாணகமனத்தாற் கரஊன வதைத்தான்; ஹரன் ஹரியையே பாணமாகக் கொண்டு புரசயமுற்முன் என்பதாம்.

## தாரதம்மியம்.

தன்னதான ஒருபாணத்தாற் பகைவஊனக் கொன்றவனிலும், அந்தப் பாணகம னஞ் செய்தவஊனப் பாணமாகவுடையவன் சிறந்தவஞகின்முன். ஆதலால் நாங்கள் பாணகமனவிஷயத்திற் முழ்வடைந்த ஹரியை அப்பிரதானமாக வொதுக்கி, பாணக மன் விஷயத்தி லுயர்ந்த ஹரஊன ஆஶ்ரயிக்கின்றேம். - என்றவாறு. **(81)**

**एकस्सदा सवितृमण्डल मध्यवर्ती**
**चान्यस्सदा सवितृदन्तभिदा वरीयान् ।**
**कोवानयोरधिकः इत्यनुचिन्त्य वृद्धाः**
**सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥ ८२ ॥**

ஶஏகஸ்ஸஊா ஸவிதுஃஊணுஃ ஊயுவதீ
ஊாநுஸ்ஸஊா ஸவிதுஊஜுஹிஊா வரீயாநு ।
கொவாநயொாரயிகஃ ஐதுநுஊிஜு வுஊாஃ
ஸதும் ஞுஊவஜுஊ தஊிஊம் வயஊாஶுயாஊஃ ॥ அஉ ॥

**ஏகஸ்ஸதா³ ஸவித்ருமண்ட³ல மத்⁴யவர்தீ**
**சான்யஸ்ஸதா³ ஸவித்ருத³ந்தபி⁴தா³ வரீயான் ।**
**கோவானயோரதி⁴கः இத்யனுசிந்த்ய வ்ருத்³தா⁴ः**
**ஸத்யம் ப்³ருவந்து தமிமம் வயமாஶ்ரயாமः ॥ 82 ॥**

## மொழிபெயர்ப்பு.

**சந்தப் பாநு மண்டலத்திற் றவிரா தொருவன் சார்ந்துற்ருன்**
**அந்தப் பாநு வெனுஞ்சிறந்த வண்ண லெழில்கொ ளணிவாயிற்**
**றந்தத் தன்மை யில்லாமற் றகர்த்தா னொருவன் ருரணியில்**
**இந்தச் சீரிற் சிறந்தவன்யா ரிசைத்தாற் பெரியீ ரிறைஞ்சுதுமே.**

## பதப்பொருள்.

| | | |
|---|---|---|
| **ஏக:** | = | ஒருவன், |
| **ஸதா³** | = | எப்பொழுதும், |
| **ஸவித்ருமண்ட³ல மத்⁴யவர்தீ** | = | சூரியமண்டலநடுவில் இருக்கிறவன், |
| **அந்ய:** | = | இன்னொருவனுனல், |
| **ஸதா³** | = | எப்பொழுதும், |
| **ஸவித்ருத³ந்தபி⁴தா³** | = | சூரியனுடைய பல்ஊல, |
| **வரீயான்** | = | பேதிக்கிறதினுலே சிறந்தவன்; |
| **அநயோ:** | = | இவ்விருவருக்குள், |
| **அதிக:** | = | சிறந்தவன், |
| **கோவா** | = | யாவன்? |
| **இதி** | = | இதஊன, |
| **அநுசிந்தியா** | = | ஆலோசித்து, |
| **வ்ருத்³தா⁴ः** | = | பெரியவர்கள், |
| **ஸத்யம்** | = | உண்மையை, |
| **ப்³ருவந்து** | = | சொல்லலாம் சொன்னுல், |
| **தமிமம்** | = | அந்த விவஊன, |
| **வயம்** | = | நாங்கள், |
| **ஆஶ்ரயாமः** | = | ஆஶ்ரயிக்கின்ருேம். |

## பொழிப்பு.

ஒருவ னழகிய சூரிய மண்டலத்தி லிருக்கின்முன், இன்னெருவனந்தச் சூரியனுடைய தந்தங்களைப் பின்னஞ்செய்தவன்; பெரியவர்களே! இவர்களுக்குட் சிறந்தவன் யாவன்? அவனை நீங்களுண்மையாக வுரைத்தால், நாங்களந்த மஹாபுரு ஷனைச் சரணமாக வடைகின்றேம்.

## விதப்பு.

ஒருவன் சூரியமண்டலத்தி லிருப்பவனென்றது - ஹரியை, அது அவ்வரி அவ்வண்ண மிருத்தலால் இதனை -

"*வளம்பொருந்தும்வசுக்களிலக்கினி*
*விளங்குகின்றவாதித்தரின்விட்டுணு*
*துளங்கிரும்புனல்தோன்றிறையாகில்*
*உளந்தவறிவுற்றவருளானும்*"

என்று பாகவதத்தும், மண்டலப்பிரமாண உபநிடதத்திலும் சூரியமண்டலமூர்த் தியான நாராயணன் யாக்கிய வல்கியனுக்கு யோகோபதேசஞ் செய்தானென்றிருக் கின்றது. 'ஸஹோவாசநாராயண' என்பனவாதிகளாலும் சூரியமண்டலவாசி ஹரியென்றறியப்படுகின்முன்.

ஒருவன் சூரியனுடைய பற்களை யுடைத்தவனென்றது - ஹரனை, அது அவ்வரன் அவ்வண்ணஞ் செய்தமையால்.

ஹரனையன்றிப் பரனை யுண்டாக்கக்கருதிய தக்கனென்பவன் செய்த யாகத்தி லவிற்பாகத்திற்காக வந்திருந்த சூரியனுடைய பற்களை ஹரனடித்துடைத்தனன். இதனை -

"*சூரியனுர்தொண்டைவாயினிற்பற்களை*
*வாரிநெரித்தவாறுந்தீபற*
*மயங்கிற்றுவேள்வியென்றுந்தீபற*" என்று திரவிடவேதமுரைத்தமையாலுணர்க.

## தாத்பரியம்.

ஹரி சூரியமண்டலவாசி; ஹரன் சூரியனுடைய தந்தங்களையுடைத்தவன் என்பதாம்.

## தாரதம்மியம்.

சூரியமண்டலவாசியினும் சூரியனுடைய பற்களையுடைத்தவன் வீரியத்திற் சிறந்தவனுதலால், நாங்கள் சூரிய மண்டல வாசியான ஹரியை இங்கு அப்பிரதான

மாக அகற்றி, சூரியனுடைய பற்கஜாயுடைத்த சிறந்த ஹரஜனச் சரணமாக அடைகின்றேம் - என்றவாறு. (82)

**एकस्तु माधव इति प्रथितः स्वनाम्ना**
**त्वन्यो ह्युमाधव इति प्रथितः स्वनाम्ना ।**
**कोवानयोरधिकः इत्यनुचिन्त्य वृद्धाः**
**सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥ ८३ ॥**

ஏகஸ்து மாதவ இதி ப்ரதிதः ஸ்வநாம்நா
த்வந்யோ ஹ்யுமாதவ இதி ப்ரதிதः ஸ்வநாம்நா ।
கோவாநயோரதிகः இத்யநுசிந்த்ய வ்ருத்தாः
ஸத்யம் ப்ருவந்து தமிமம் வயமாச்ரயாமः ॥ அ௩ ॥

**ஏகஸ்து மாத⁴வ இதி ப்ரதி²த꞉ ஸ்வநாம்ஞ**
**த்வன்யோ ஹ்யுமாத⁴வ இதி ப்ரதி²த꞉ ஸ்வநாம்ஞ ।**
**கோவானயோரதி⁴க꞉ இத்யனுசிந்த்ய வ்ருத்³தா⁴꞉**
**ஸத்யம் ப்³ருவந்து தமிமம் வயமாஶ்ரயாம꞉ ॥ 83 ॥**

## மொழிபெயர்ப்பு.

**மன்னு மெழில்கொண் மணிமோலி மருவு மொருவன் மாதவனுய்ப்**
**பன்னு முரிமை தஜனயெய்திப் பலரும் புகழ விருக்கின்றன்**
**உன்னு மொருவ னுமாதவனென் றுரைக்கு முரையா லுயாவுற்றன்**
**என்னு மிவருட் சிறந்த வன்யா ரிசைத்தாற் பெரியீ ரிறைஞ்சுதுமே.**

## பதப்பொருள்.

| | | |
|---|---|---|
| **ஏகஸ்து** | = | ஒருவனுனல், |
| **மாத⁴வ:** | = | மாதவன், |
| **இதி** | = | என்று, |
| **ப்ரதி²த꞉** | = | பிரஸித்தியடைந்தவன், |
| **அந்ய:** | = | இன்னொருவன், |
| **உமாத⁴வ** | = | உமாதவன், |
| **இதி** | = | என்று, |
| **ஸ்வநாம்ஞ** | = | தன் பெயரினுலே, |
| **ப்ரதி²த꞉** | = | பிரஸித்தியடைந்தவன், |
| **அநயோ:** | = | இவ்விருவருக்குள், |
| **அதிக:** | = | சிறந்தவன், |
| **கோவா** | = | யாவன்? |
| **இதி** | = | இதஜன, |

| | | |
|---|---|---|
| **அநுசிந்தியா** | = | ஆலோசித்து, |
| **வ்ருத்³தா⁴꞉** | = | பெரியவர்கள், |
| **ஸத்யம்** | = | உண்மையை, |
| **ப்³ருவந்து** | = | சொல்லலாம் சொன்னல், |
| **தமிமம்** | = | அந்த விவனை, |
| **வயம்** | = | நாங்கள், |
| **ஆஶ்ரயாம꞉** | = | ஆஶ்ரயிக்கின்ருேம். |

## பொழிப்பு.

பெரியவர்களே! ஒருவன் மாதவனென் றழைக்கப்படுகின்ருன், மற்றெருவனு மாதவனென்று அழைக்கப்படுகின்ருன்; இவர்களுக்குட்சிறந்தவன் யாவன்? அவனை நீங்களுரைத்தால், நாங்களந்த மஹாபுருஷனைச் சரணமாக அடைகின்ருேம்.

## விதப்பு.

மாதவனென்றது - ஹரியை, உமாதவனென்றது - ஹரனை, இவை இவர்க ளவ்வண்ணமிருத்தலால் வந்த பெயர்.

## தாத்பரியம்.

ஹரி மாதவன், ஹரன் உமாதவன் என்பதாம்.

## தாரதம்மியம்.

மாதவனென் றுரைப்பதினும் உமாதவனென்றுரைப்பதில் ஒரே மூத்ததிகமாத லாலும், அருத்தவிசேட மிருத்தலாலும், நாம் இதுவிஷயத்திற் ருழ்ந்த ஹரியை அப்பிரதானமாக அகற்றி, உயர்ந்த ஹரனைச் சரணமாக அடைகின்ருேம். **(83)**

**गोपालकैस्त्व नुश्रितः सुतरामिहैको**
**दिक्पालकस्तनुश्रितस्तु दिगम्बरोऽन्यः ।**
**कोवानयोरधिकः इत्यनुचिन्त्य वृद्धाः**
**सत्यं ब्रुवन्तु तमिमं वयमाश्रयामः ॥ ८४ ॥**

ஹொபாலகெஸ்வ நுஶ்ரிதஃ ஸுதராமிஹைகொ
தி³க்பாலகஸ்தநுஶ்ரிதஸ்து தி³க³ம்ப³ரொऽந்யஃ ।
கொவாநயொரதி⁴கஃ இத்யநுசிந்த்ய வ்ருத்³தா⁴ஃ
ஸத்யம் ப்³ருவந்து தமிமம் வயமாஶ்ரயாமஃ ॥ அச ॥

